





நயினாதீவு ஸ்ரீ நாகபூஷணி அம்மன் கோவில்

# தேர்த் திருப்பணிச் சபை மலர்

# அட்டைப் படம்

★

அன்பைப் பெருக்கியென தாருயிரைக் காக்கவந்த
வின்பக் கடலே யெழில்நாக பூஷணியே
முன்பக் குவர்க்கருளு மூர்த்தமதைக் காட்டாயோ
வுன்பட்ச மேநயினூர் தீவி லுறையுமையே.

எனப் புலவர்களும் பக்தர்களும் போற்றிப் பரவும் நாகேஸ்வரி எழுந்தருளியிருக்கும் நாகேச்சரத்திலுள்ள திருக்கோயிலில் இரண்டு தள விமானம் அண்மையிற் கட்டப்பெற்றது. இந்த விமானத்தில் அமைக்கப்பெற்றுள்ள சிற்பங்களின் உயிர்த் துடிப்பைக் காட்ட முயல்கின்றார் படப்பிடிப்பாளர். அதன் அளப்பரும் அழகை எடுத்துக்காட்டும் வகையில் நிறமூட்டி யுள்ளார் ஓவியர். இவ் விருவரது கைத்திறனல் உருப்பெற்ற அழகிய முந்நிறப் படம் இம் மலரின் அட்டையை அலங்கரிக்கின்றது.

உ

நயினாதீவு ஸ்ரீ நாகபூஷணி அம்மன் கோவில்

# தேர்த் திருப்பணிச் சபை மலர்

குல. சபாநாதன் அவர்கள்
எழுதியது

தேர்த் திருப்பணிச் சபை வெளியீடு
1957

முதலாம் பதிப்பு — 8-7-1957
இரண்டாம் பதிப்பு — 8-8-1957

நயினுதிவு ஸ்ரீ நாகபூஷணி அம்மன் கோவிலுக்கெனப் புதிதாக அமைக்கப் பெற்ற திருத்தேரின் வெள்ளோட்ட தின மாகிய ஏவிளம்பிஞ ஆனிமீ 24ஆந் திகதி (8-7-1957) மேற்படி திருப்பணிச் சபையினரால் இம்மலர் வெளியிடப்பட்டது.

தேரின் படம், அம்பாளின் படம், தேரி லுள்ள சித்திரங்கள் பற்றி இன்னுங் கூடுதலான படங்கள், வெள்ளோட்ட வைபவம், இரதோற்சவம் பற்றிய விபரங்கள் ஆதியன இரண்டாம் பதிப்பில் இடப்பெற்றுள்ளன.

விலை ரூபாய் 3-00.

# நயினாதீவு ஸ்ரீ நாகபூஷணி அம்மன் கோவில்
# தேர்த் திருப்பணிச் சபை

தலைவர் :
திரு. ம. ஸ்ரீகாந்தா, O. B. E., C. C. S.
வடமாகாண அதிபரும்,
ஷை தேவஸ்தான சபை அங்கத்தவரும்.

உப தலைவர் :
திரு. C. S. A. நமசிவாயம் செட்டியார்
யாழ்ப்பாணம்

இணைக் காரியதரிசிகள் :

1. திரு. வே. சுந்தரம்பிள்ளை
ஷை தேவஸ்தான சபை அங்கத்தவரும்,
விவேகானந்த அச்சக அதிபரும்.
[27-3-1957 தொடக்கம்]
திரு. வே. செல்வநாயகம்
2. திரு. கா. ஆறுமுகம்
காரியதரிசி
ஸ்ரீ நாகபூஷணி தேவஸ்தான சபை.

இணைத் தனாதிகாரிகள் :

1. திரு. செ. சிவஞானம், D. R. O
வவுனியா
2. திரு. ஆ. கந்தையா, D. R. Q.
ஊர்காவற்றுறை
3. முகாந்திரம் திரு. A. S. சங்கரப்பிள்ளை
யாழ்ப்பாணம்

## நிர்வாகசபை அங்கத்தவர்கள்

திரு. வ. முருகேசபிள்ளை ஷை தேவஸ்தான சபை அங்கத்தவர்
,, K. சோமசுந்தரம் ,, ,,
,, ச. இரகுப்பிள்ளை ,, ,,
,, வே. பொன்னம்பலம் ,, ,,
,, ப. கந்தசாமி ,, ,,
,, சி. சின்னப்பு ,, ,,
,, V. A. கந்தையா, M. P., ஊர்காவற்றுறை
,, K. சபாபதிப்பிள்ளை, கரம்பன்
,, K. இராமச்சந்திரா, கொழும்பு
Dr. C. குருசாமி, யாழ்ப்பாணம்
திரு. V. கந்தையா, நயினாதீவு
,, S. கனகசபை, சிறுப்பர், யாழ்ப்பாணம்
,, M. T. சுப்பிரமணியம், கண்டி
,, சு. நாகேந்திரர், நெடுந்தீவு
,, K. M. சின்னத்துரை, புங்குடுதீவு
,, K. கைலாசபிள்ளை, மண்டைதீவு
,, S. கோபாலபிள்ளை, சுருவில்
,, மு. முத்தையாபிள்ளை, கொழும்பு
,, ஐ. கைலாசநாதக் குருக்கள், நயினாதீவு
,, இ. செல்லையா, கொழும்பு
,, த. நீதிராசா, கொழும்பு
,, S. தில்லையம்பலம், நயினாதீவு
,, S. N. கந்தையா, நயினாதீவு
,, K. கந்தவனம். நயினாதீவு

# பொருளடக்கம்




நயினாதீவு ஸ்ரீ நாகபூஷணி அம்பாள்



நயினதீவு ஸ்ரீ நாகபூஷணி அம்பாள்

# முகவுரை

நயினை ஸ்ரீ நாகபூஷணியம்மன் கோவிலுக்கெனப் பெருந்தொகைப் பணச் செலவிற் புதியதொரு தேர் அமைக்கப்பெற்றுள்ளது. இவ் வாலயத்தின் தொன்மையையும் பெருமையையும் புதிய தேரின் அமைப்பை யும் அதில் இடம் பெற்றுள்ள அற்புத சிற்பங்களின் விளக்கத்தையும் அடக்கிய மலர் ஒன்றினை வெளியிட வேண்டுமென எண்ணினேம். இத்தகைய மலரை வெளியிடுவதற்குத் தகுதியும், ஆராய்ச்சி வன்மையும் வாய்ந்த ஆசிரியர் யாரென எண்ணியபொழுது திரு. குல. சபாநாதன் அவர்களின் பெயர் நினைவுக்கு வந்தது. அவர்களை அணுகி எமது கருத் தைத் தெரிவித்தபோது அவர்கள் தமக்கு வழமையாகவே உள்ள பல அலுவல்களையும் பொருட்படுத்தாது எமது வேண்டுகோளுக்கு இசைந் தார்கள். பல நூல்களை ஆராய்ந்து தகுந்த ஆதாரங்களுடன் வெளி யிடப்பட்ட இம் மலரை அவர்கள் மிகுந்த சிரமப்பட்டு இரு வாரங் களுள் தயார் செய்துள்ளார்கள். இதற்காக அவர்கள் யாழ்ப்பாணம் வந்து நயினாதீவு, புளியந்திவு முதலான பல இடங்களுக்குச் சென்று புராதன இடங்களைப் பார்வையிட்டுப் பல பெரியார்கள், அறிஞர்களைச் சந்தித்து விஷயங்களை நேரில் அறிந்தார்கள். அத்துடன் புராதன ஏட்டுப் பிரதிகள் முதலியனவற்றைத் தேடிப் பல இடங்களுக்குப் பல முறை சென்று அங்குள்ளவர்களிடம் அவற்றைப் பெற்று ஆராய்ந்து இந் நூலை எழுதிய திரு. குல. சபாநாதன் அவர்களின் அரும்பெருந் தொண்டை நாம் பாராட்டாமல் இருக்க முடியாது. அலுப்போ, சளைப்போ, களைப்போ இன்றி இரவிரவாக எழுதி அன்றெழுதிய விஷயங்களை அன்றைய விமானத் தபாலிற்கே சேர்ப்பித்தார். இவ் வளவு வேலைகளையும் ஒருவர் இருவார காலத்தில் நிறைவேற்றி வைத் தார் எனின் சமயப்பற்று எத்தன்மையதென்பது நன்கு புலனாகும்.

'மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார்'

என்ற பாடலுக் கிலக்காக அவர்கள் விளங்குகின்றார்கள் என்றால் அது மிகையன்று. சைவநன் மக்கள் அன்னாரின் பணியை என்றும் போற்றக் கடமைப்பட்டுள்ளார்கள். அம்பாளின் பூரண அனுக்கிரகம் அவர்களுக்குக் கிடைத்தே தீரும் என்பது நம்பிக்கை. ஆசிரியருக்குப் பக்கபலமாக இம் மலரை உரிய காலத்தில் வெளியிடக் காரணமாக விருந்து சகல வழிகளிலும் உதவி புரிந்தவர் விவேகானந்த அச்சகம் திரு. வே. கிருஷ்ணபிள்ளை அவர்கள். எட்டாந் திகதியன்று இம் மலர் வெளிவருமோ என்ற சந்தேகம் பலருக்கிருந்தது. ஆனால் இதனை

எப்படியாவது எட்டாந் திகதி வெளிவரச் செய்யாமல் உறங்கமாட்டேன் என்ற உறுதிப்பாட்டுடன் கடைசி ஒரு வாரமாக உறக்கமின்றி உழைத்தவர் திரு. வே. கிருஷ்ணபிள்ளையவர்கள். மேலும் சரவைத்தாள்களைத் திருத்துவதற்கு அவற்றைக் கொழும்பிலுள்ள திரு. குல. சபாநாதன் அவர்களுக்கு அனுப்பினுற் காலம் தாழ்த்திவிடும் என்று கருதி, அந்தப் பணியையுந் தாமே மேற்கொண்டார். இவ்வாறு விடாப்பிடியாக நின்று உரிய காலத்தில் மலரை வெளியிட்ட பிள்ளையவர்களுக்கு எமது அன்பும் நன்றியும் உரியன. சரவைத்தாள்கள் திருத்துவதில் திருமகள் அழுத்தக அன்பர் திரு. மு. சபாரத்தினம் அவர்களும், விவேகானந்த அழுத்தக அன்பர் திரு. வே. செல்வநாயகம் அவர்களும், திரு வே. கந்தசாமி அவர்களும் சொலற்கரிய உதவி புரிந்துள்ளார்கள். இவர்களுக்கும் எங்கள் நன்றி உரியதாக.

எமது வேண்டுகோளுக்கிணங்கி இம் மலருக்கு அணிந்துரைகள் தந்துதவிய சைவப் பெரியார்கள் வித்துவசிரோமணி சி. கணேசையர் அவர்களுக்கும், சிவஸ்ரீ ச. குமாரசுவாமிக்குருக்கள் அவர்களுக்கும், இராமநாதன் கல்லூரி முகாமைக்காரரும் ஆராய்ச்சியறிஞருமாகிய திரு. சு. நடேசபிள்ளை அவர்களுக்கும் நாம் நன்றிசெலுத்தக் கடமைப்பாடுடையோம். இம் மலரை அணிசெய்யும் புகைப்படங்கள் அரசாங்கத் தகவற்பகுதிப் படப்பிடிப்பாளர் திரு. விக்டர் சுமதிபாலா அவர்களாற் பிடிக்கப்பெற்றன. அவர்களையும் அரசாங்கத் தகவற்பகுதியைச் சேர்ந்த செய்தி அதிகாரி திரு. கெனத் ஜே. சோமநாதர் அவர்களையும் எவ்வளவுக்குப் பாராட்டினுலுந் தகும்.

தகவற்பகுதித் தலைமை அதிகாரி திரு. எம். ஜே. பெரேரா அவர்களையும் நாம் மறந்துவிடமுடியாது. முதலியார் திரு. குல. சபாநாதன் அவர்கள் தமது அலுவலகப் பணிகளுடன் மலருக்குரிய விஷயங்களையும் எழுதுவதற்கு அவர் உற்சாகமூட்டியிருந்தார். திரு. பெரேரா அவர்களின் தாராள மனப்பான்மைதான் திரு. குல. சபாநாதன் அவர்கள் இம் மலர் வேலைகளைச் செவ்வனே நிறைவேற்றுதற்குக் காரணமெனலாம்.

திரு. குல. சபாநாதன் எழுத்தாளர் மட்டுமல்ல. படப்பிடிப்பாளருங்கூட என்பதற்கு இம் மலரிலுள்ள படங்களே சான்று பகரும். நயினுதிவுச் சாமியாருடைய சமாதியின்படம், புளியந்திவு நாகதம்பிரான் கோயிற் படம் ஆதியன அவர்கள் தந்துதவியனவாகும்.

யாழ்ப்பாணம் பாரத் ஸ்ருடியோ ஸ்தாபனத்தார், தேர்வேலைகள் தொடங்கிய நாட் தொடக்கம் புகைப்படம் எடுப்பதிற் காட்டிய ஊக்கம் அளவிடற்கரியது. யாழ்ப்பாணம் ஸ்பாஸ் ஸ்ருடியோ ஸ்தாபனத்தாரும் இம் மலரை அணிசெய்யும் புகைப்படங்களுட் சிலவற்றை எடுத்துதவினுர்கள். அவர்களுக்கும் எமது நன்றி.

கொழும்பு வின்ஸ் ஸ்ரூடியோ தலகாபனத்தார் மிகுந்த சிரமப்பட்டு மலருக்குரிய படங்களையும் 'புளொக்'காக்கித் தந்தனர். அவர்களுக்கும் எமது நன்றி உரியதாகும்.

நயினதீவு திரு. சி. நா. கந்தையா அவர்களும், ஆசிரியர் பி. சபாரத்தினம் அவர்களும், திரு. இ. இ. பூபாலசிங்கம் அவர்களும் சில குறிப்புக்களைத் தந்துதவினுர்கள். யாழ்ப்பாணக் கல்லூரி நூல் நிலைய அதிபர் திரு. க. செல்லையா அவர்கள் நயினதீவுபற்றிய மிகப் பழைய நூல்களை முதலியார் குல. சபாநாதன் பார்வையிடுவதற்கு ஏற்ற வசதி செய்து கொடுத்தார்கள். நயினை வரகவி நாகமணிப் புலவர் பாடிய 'நயினை மான்மியம்' எனும் நூலின் கையெழுத்துப் பிரதியைத் தமது உயிர் போலப் பேணிப் பாதுகாத்துவரும் புலவரின் மகன் திரு. நா. பொன்னுத்துரை அவர்களிடம் திரு. குல. சபாநாதனும் திரு. வே. கிருஷ்ண பிள்ளையும் திரு கா. ஆறுமுகமும் சென்று கேட்டபோது, புலவரின் நூலைக் கொடுத்துதவினுர்கள். இதன் பயனுக இதுவரை வெளிவராத நயினை மான்மியப் பாடல்கள் இம் மலரில் இடம்பெறலாயின. இவ்வாறே 1880ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்ற ஊஞ்சற் பிரதியினை முதலியார் குல. சபாநாதன் அவர்கள் அரிதின் முயன்று தேடி இம் மலரில் வெளியிடத் தந்துள்ளார்கள். இவ்வாறு பல்லாற்ருனும் உதவி புரிந்த அன்பர் அனைவருக்கும் எங்கள் நன்றி உரியதாகும்.

எங்கள் வேண்டுகோட்கியைந்து விளம்பரங்கள் தந்துதவிய விளம்பரக்காரர் அனைவருக்கும் எமது மனமார்ந்த நன்றியுரியது.

இந்த மலரை மிகவுங் குறுகிய காலத்தில் அழகுற அச்சிட்டுத்தந்த சுன்னுகம், திருமகள் அழுத்தகத்தாருக்கும், இரவு பகல் ஓய்வின்றி வேலை செய்த அழுத்தக அதிபர் திரு. கோ. அப்பாக்குட்டி அவர்களுக்கும், மலரின் ஒருபகுதியை அச்சிட்டுதவிய விவேகானந்தா அச்சகத்தாருக்கும், இரவு பகலாக ஓய்வின்றி வேலை செய்த திரு. வே. செல்வநாயகம் சகோதரர்களுக்கும் எமது மனமுவந்த நன்றி உரியது. இன்னும் பலர் தோன்ருத் துணையாக நின்று உதவி புரிந்துள்ளனர். அவர்கள் அனைவருக்கும் அன்பு கலந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கின்ரேம்.

இம் மலர் 8-7-1957இல் வெளிவந்தபோது, இது விலையாகுமா என்ற சந்தேகஞ் சிலருக்கிருந்தது. ஆனுல் அதே தினத்திலேயே நயினதிவுக்குக் கொண்டுவரப்பெற்ற மலர்கள் யாவும் விற்பனையாகிவிட்டன. கட்டாதிருந்த பிரதிகளையுங் கட்டித் தேர்த் திருவிழாவன்று அன்பர்களுக்கு வழங்கினேம். எனினும் நயினதிவுக்கு வரமுடியாதிருந்தவர்களும் யாழ்ப்பாணம், கொழும்பு முதலிய இடங்களில் உள்ளவர்களும் தங்களுக்கு மலர் வேண்டும் என்று கூறி விவேகானந்த அச்சகத்துக்கு யாத்திரை செய்யத் தொடங்கினுர்கள். அவர்கள் இம் மலரை மீண்டும்

அச்சிடுமாறு தேர்த் திருப்பணிச் சபையினை வற்புறுத்தினார்கள். அன்பர்கள் பலர் முற்பணமாகக் காசுகட்டித் தம் பெயர்களைப் பதிவு செய்யத் தொடங்கினர். எனவே ஒருமாத காலத்துள் இந்த இரண்டாம் பதிப்பு வெளியாகின்றது. இதன்கண் சித்திரக் கலைத் தேரின் படம், அம்பாளின் படம், வெள்ளோட்ட வைபவப் படம், காஞ்சி காமாட்சியின் படம், போர்த்துக்கீசர் கோயிலை இடிப்பதைச் சித்திரிக்கும் படம் முதலியன சேர்க்கப்பட்டுள்ளன. அத்துடன் வெள்ளோட்ட வைபவம், இரதோற்சவம், நூலாசிரியரைக் கௌரவித்தமை முதலிய நிகழ்ச்சிகள் பற்றிய விபரங்களுஞ் சேர்க்கப்பட்டுள்ளன.

இம் மலர் விரைவில் விற்பனையாவதற்கு ஊக்கமளித்த தமிழன்பர் யாவருக்கும் எங்கள் மனமார்ந்த நன்றியை மீட்டுஞ் செலுத்துகின்றோம்.

8-8-1957

நயினாதிவு ஸ்ரீ நாகபூஷணி அம்மன் கோவில்
தேர்த் திருப்பணிச் சபையார்

உ

சிவமயம்



திரு. சு. நடேசபிள்ளை B. A., B. L., F. R. E. S., அவர்கள் அளித்த

# அணிந்துரை

ஸ்ரீ நாகபூஷணி அம்பாள் கோயில்கொண்டு அருள்பாலிக்குந் தலமாகிய நயினுதீவு எனப்படும் நாகதுவீபம் புராதன மகத்துவம் வாய்ந்தது. இலங்கையிலுள்ள சைவசமயிகளும் பௌத்த சமயிகளும் இத் தலத்தைப் போற்றுகின்றனர். ஸ்ரீ நாகபூஷணி அம்பாள் தேர்த் திருப்பணிச் சபை மலர் இத் தலத்தின் வரலாற்றை விரிவாக விளக்குகின்றது.

இச் சபையினரின் நன் முயற்சியால் ஓர் அழகிய தேர் அமைக்கப்பட்டுள்ளது. இது சம்பந்தமாக அண்மையில் நடக்க இருக்கும் விழாவை முன்னிட்டு இம் மலர் வெளியிடப்படுகின்றது. இம் மலரிற் சேர்க்கப்பட்டுள்ள படங்களினின்று புதிதாக அமைக்கப்பட்ட தேரின் வேலைப்பாட்டுச் சிறப்பு நன்கு புலப்படும். தென்னிந்தியாவில் முக்கிய தலங்களில் வனப்புடைய தேர்களைக் காண்கின்றோம். இலங்கையில் அத்தகைய தேர்களைக் காண்பது அரிது. ஆனல் நயினுதீவு அம்பாளின் தேர் இக் குறையை நீக்குகின்றது. இத்தேரைப் பார்க்கின்றவர்களுடைய கண்களையும் உள்ளத்தையுங் கவருந் தன்மையதாக இத்தேரை நிருமித்

துதவிய திரு. எஸ். குமாரசுவாமி ஸ்தபதியும் அவரது மேற்பார்வையில் வேலைசெய்த கம்மியரும் இலங்கைச் சைவ மக்களின் பாராட்டுக்கு உரியராகின்றனர். பத்தி சிரத்தையுடன் இத் திருப்பணியை நிறைவேற் றிய சபையினருக்குச் சைவமக்கள் என்றுங் கடப்பாடுடையர்.

சைவாலயங்களில் நடைபெறுந் திருவிழாக்கள் பூர்த்தியாகின்ற நாளில் அவ்வாலய மூர்த்திகளின் தேர்ப்பவனிக் கோலம் ஒரு முக்கிய காட்சி யாகும். தேர் உலக விசுவத்தைக் காட்டுகின்றது திருவாரூரிலுள்ள தேர் மிகப் பெரியதாகும். அங்குள்ள தேரை இழுப்பதற்கு நூற்றுக் கணக்கான தொண்டர்கள் ஈடுபடுவார்கள். சிதம்பரத்தில் திருவாதிரை யில் நடக்குந் தேர்விழா பக்தர்கள் ஆனந்த பரவசத்தை அடையச் செய்யும் பெற்றி வாய்ந்தது. இத்தகைய பக்தி உணர்ச்சியை ஸ்ரீ நாக பூஷணி அம்பாளின் தேர்விழா உண்டாக்குதற்குரிய முறையில் திருப் பணிச் சபையினர் செய்துள்ள சைவகைங்கரியஞ் சிறப்புற்றோங்குமாறு அம்பாளின் திருவருளை இறைஞ்சுகின்றோம்.

இத் திருப்பணிச் சபையினர் வெளியிடும் மலர் அம்பாளின் தேர்விழா வைபவத்தை அலங்கரிக்கும் வகையில் அமைந்துள்ளது. இம் மலரில் அரிய கட்டுரைகள் பொதிந்துள்ளன. இதன் ஆசிரியர் திரு. குல. சபாநாதன் அவர்கள் தமது பணியைச் சிறந்த முறையில் ஆற்றியுள் ளார்கள். அவர்கள் எழுதிய கட்டுரைகளில் அவர்களுடைய ஆராய்ச்சித் திறனும் பக்தி உணர்ச்சியும் ஒருங்கே விளங்குவதைக் காண்கின்றோம். திருக்கோயில்களில் நடைபெறும் விழாக்களில் இத்தகைய மலர்களைச் சமர்ப்பித்தல் போற்றத்தக்க பணியாகும்.

சு. நடேசபிள்ளை

உ
கணபதிதுணை



நயினுதீவில் எழுந்தருளியிருக்கும்

# நாகபூஷணியம்மையைப் புதுமைத் தேருடன்

வித்துவசிரோமணி, பிரம்மஸ்ரீ சி. கணேசையர் அவர்கள்

# வாழ்த்திய வாழ்த்து

உலகுதனின் மக்கடம துடம்ப கத்தே
உள்ளமெனுங் கமலமதி லொளிரு மாபோல்
நிலவுசிற்ப விதிப்படியே செய்த மைத்த
நிகரிலெழில் பெருந்தேரிற் பதும பீடத்
தலகிலடி யார்களெலாம் போற்றி யுய்ய
அணிநயினை நாகபூ ஷணியா மம்மை
இலகுபெருந் திருவுருவக் காட்சி யோடும்
எழுந்தருளி யருள்செய்தே வாழி வாழி. 1

திருமேவு நயினையெனுந் தீவ கத்தே
செகமெல்லா மன்புடனே பணிந்து போற்றப்
பெருமேவுந் திருவருள்செய் தமரு கின்ற
பிராட்டியணி நாகபூ ஷணியா மம்மைக்
குருமேவு தேரதனை யியற்றி னோர்கள்
உள்ளமதி லன்புடனே யியற்று வித்தோர்
கருமேவு வினைகளெலா நீங்கி வாழக்
கருணைபுரிந் தம்மைநிதம் வாழி வாழி. 2

குண்டலியைத் தன்னருளா லியக்குந் தன்மை
    குவலயத்தோ ருணர்ந்துமிகத் தொழுது வாழக்
கொண்டுபெரு நாகமதை யணிய தாகக்
    குலவுதிரு வுருவதனிற் சூடி நின்ற
அண்டர்தொழுந் நாகபூ ஷணியா மம்மை
    அழுகுபெறுந் தேர்மீதே யமர்ந்து மிக்க
மண்டுபெரு மன்புடனே யடியார் போற்ற
    வழங்குதிரு வருளுடனே வாழி வாழி. 3

அழகுபெறத் தேரதனை யியற்று தற்காய்
    அதியுதவி யன்புடனே செய்து வைத்த
எழில்கொள்வட மாகாணத் தலைவ ராகி
    இறைமைபுரி சிறீகாந்தா வென்றும் வாழ்ந்தே
தழைவுபெற நாகபூ ஷணியா மம்மை
    தன்னருளைப் பொழிந்துமிக வாழி வாழி
விழைவினெடுந் தேர்விழாச் செய்வோர் தாமும்
    வேண்டுவபெற் றென்றென்றும் வாழி வாழி. 4

ஈடுதனக் கில்லாத நயினை யென்னும்
    எழில்பெறுதீ வகமதனிற் கோயில் கொண்ட
பீடுபெறுந் நாகபூ ஷணியா மம்மைப்
    பிராட்டிதனக் கமைந்தபழஞ் சரிதந் தன்னை
நாடியுண்மை தனையாய்ந்திங் கெழுதி யாரும்
    நனியுணர மலரணிசெய் முதலி யாராம்
நீடுபுகழ்க் குலசபா நாதற் கம்மை
    நிலவருளைப் பொழிந்துமிக வாழி வாழி. 5

## வெண்பா

பேரன்பி னோடும் பிராட்டிநாக பூஷணிக்கே
தேரமைக்க வேண்டுவசெய் திட்டதொரு—*ஏரமைந்த
சுந்தரம் பிள்ளைக்குச் சுத்தநிலை நல்கியம்மை
சந்ததமும் வாழ்க தலம். 6

* ஏர் — எழுச்சி

உ
கணபதிதுணை



அச்சுவேலி, சரஸ்வதி வித்தியாசாலை முகாமைக்காரரும்,
சமயசாத்திர விற்பன்னருமாகிய
**சிவஸ்ரீ ச. குமாரசுவாமிக்குருக்கள் அவர்கள் அளித்த**

# அணிந்துரை

அநாதிமலமுத்த சித்துருவாய், உருவு குணம் செயல் முதலியன இல்லாதவராய், ஒப்புயர்வற்றவராயுள்ள பரமபதி சிவபெருமானே யாவர். சிவபெருமான் ஆன்மாக்களைப் பந்தித்த மும்மலங்களையும் போக்கி முத்திப்பேற்றைக் கொடுக்குமாறு கொண்டருளும் அருவம் அருவுருவம் உருவம் என்னும் மூவகைத் திருமேனிகளுக்கும் சிருட்டி திதி சங்காரம் திரோபவம் அனுக்கிரகம் என்னும் ஐந்தொழில்களுக்கும் காரணமாயிருப்பது சத்தியேயாம்.

சத்தியாவது நீருக்குக் குளிர்ச்சியும் அக்கினிக்கு உஷ்ணமும் போலப், பரமசிவனோடு பிரிப்பின்றி நிற்கும் வல்லமையாம் சத்தி – வல்லமை ; சாமர்த்தியம். சிவபிரான் தமது திருவருளால் ஆன்மாக்களது மல மயக்கத்தை நீக்கி அநுக்கிரகஞ் செய்வர். சிவபெருமானது திருவருளே சத்தியாகும். அவ்வருட்குணமாகிய சத்தியின்றிச் சிவபிரான் இல்லை ; சிவத்தை விட்டுச் சத்தி நீங்குவது இல்லை. இவ்வாறு சிவபிரானின் வேருகாத அந்தச் சிவசத்தியார் உமாதேவியார் எனப்படுவர். அவர் பார்ப்பதி, புவனேசுவரி, இராஜேசுவரி, மகேசுவரி முதலிய பல திரு நாமங்களினாலே அன்பர்களாற் போற்றப்படுவர். அவர் ஆன்மாக் களுக்குச் சுகபோகங்களைக் கொடுத்தருளுங் கருணையே வடிவாயுள்ளவர் ; எல்லாப் பொருள்களுக்கும் ஆதியாயுள்ளவர் ; சமஸ்த பிரபஞ்சங்களி

லும் வியாபித்திருப்பவர் ; எந்தப் பகவான் எல்லாப் புவனங்களையும் உயிர்களையுஞ் சிருட்டிக்கின்றுரோ, அந்தப் பரமசிவனது திருரூபமா யுள்ளவரும் அவரே ; பரமசிவன் செய்தருளும் திருநிருத்தத்திற்குச் சாக்ஷியாய் நின்று ஆன்மாக்களுக்கு அருளுபவரும் அவரே. உலகமாதா வும் திருவருட் சத்தியுமாகிய அத் தேவியார் வாயிலாகவே சிவபெருமானை அடையவேண்டுமென நிச்சயித்துக் கூறுவர் பெரியோர். இவ்வுண்மை கள் சிவஞானசித்தியார் முதலிய சித்தாந்த சாஸ்திரங்களால் அறியத் தக்கன. திருநாவுக்கரசு சுவாமிகள் திருவையாற்றுத் தேவாரத்தில்,

"உமையலா துருவமில்லை யுலகலா துடையதில்லை"

எனத் திருவாய் மலர்ந்தருளி யிருப்பதுங் கண்டுகொள்க.

இவ்வண்ணமிருத்தலினல் சிவபிரானுக்கும் சிவசத்தியாருக்கும் பேதமில்லை யென்பதும், சிவசத்திக்குச் செய்யும் வழிபாடுகளெல்லாம் சிவனுக்குச் செய்யப்படும் வழிபாடேயாமென்பதும் நன்கு தெளியப் படும். சத்திக்குச் செய்யும் வழிபாடுகளில் மந்திரபேதமிருக்குமேயன்றிக் கிரியாபேதமில்லை.

இனி, இந்த ஈழவளநாட்டின்கண்ணே, பௌத்தம் முதலிய சமயங்கள் புகுந்த காலத்தை ஒருவாறு வரையறுத்துக் கூறுவர் கால ஆராய்ச்சியாளர். இலங்கையிற் சைவ சமயம் பரவிய காலத்தை வரையறுத்துக் கூறுவது அவர்களுக்கு இயலுவதொன்றன்று. மிகப் புராதனகாலந் தொடங்கியே இந் நாட்டில் வாழ்ந்திருந்த சைவ நன் மக்கள் புத்தியும் முத்தியும் பெறவேண்டித் திருக்கோயில்களை நிருமித்துப் பூசை விழாக்களைச் செய்து வழிபட்டு வந்தார்கள். இவ்வாறு உண் டாக்கப்பெற்ற புராதனப் பெருமை வாய்ந்த திருக்கோயில்களுள் இலங் கையின் வடபாலுள்ள நயினுதிவு நாகபூஷணி அம்பாள் கோயிலு மொன்றும்.

இத் திருக்கோயிலின்கண் ஸ்ரீ ராஜராஜேசுவரி எழுந்தருளியிருந்து என்றும் அடியவர்கள் வேண்டிய வேண்டியாங்கு அருள் புரிந்து கொண்டு வருகிறுர். இத் திருக்கோயிலின் மகோற்சவ காலங்களிலும் பிற புண்ணிய தினங்களிலும் ஆங்குச் சென்று வழிபட்டு அம்பிகை யின் அருள் பெற்றுச் செல்வோர் பற்பலராவர். இத் திருக்கோயில், தருமகர்த்தாக்கள் சபையினரால் நன்கு பரிபாலனஞ் செய்யப்பெற்று வருவது சைவ நன்மக்கள் அறிந்த உண்மையாம்.

இனி, உற்சவஞ் செய்பவர்களுக்கும் செய்விப்பவர்களுக்கும் பாவம் நீங்கும்; ஞானமுண்டாம்; சகல மங்கலங்களும் வந்தெய்தும் எனவும், மகோற்சவ தினங்கள் சர்வான்மாக்களுக்கும் ஞானதீக்ஷா காலமெனவும்

சிவாகமங்கள் செப்புகின்றன. இத் திருக்கோயிலில் மகோற்சவம் ஆனி மாதத்தில் நடைபெற்று வருகின்றது. நாகபூஷணி அம்மையார் திருத் தேரில் வீதியிலே எழுந்தருளிவரும் திருக்கோலத்தைத் தரிசித்துப் பிறவிப்பயன் பெறவேண்டிச் செல்லும் பக்த ஜனங்களின் தொகை கணக்கில் அடங்குவதன்று.

அகிலலோக நாயகியாகிய எமது அன்னையின் திருவருளை முன்னிட்டு, 'ஸ்ரீ நாகபூஷணி அம்பாள் தேர்த் திருப்பணிச் சபை'யினர் இந்தியாவி லிருந்து அழைக்கப்பெற்ற சிற்ப சாஸ்திர நிபுணர்களைக்கொண்டு ஒரு லக்ஷம் ரூபாய் வரை செலவிட்டுப் புதிதாய் ஒரு அழகிய இரதத்தைப் பக்தியோடு செய்வித்து நிறைவேற்றி யிருக்கிறார்கள். இத் திருத்தேரின் வேலைகள் சாஸ்திரோக்தமாய் வெகு நுட்பமாகச் செய்யப்பட்டுள்ளன. தேர் செய்வதற்குப் பொருளுபகரித்த புண்ணிய சீலர்களும், அதைச் சிரத்தையோடு நின்று நடப்பித்தவர்களும் சகல துக்கங்களும் பாவங் களும் நீங்கப் பெற்றவர்களாய்ப் புண்ணிய உலகத்தை அடைவார்கள் என்பது உண்மைநூற் றுணிபு.

இரதோற்சவம், சிருட்டி முதலிய பஞ்சகிருத்தியங்களுள் சங்காரத் தைக் குறிக்குமென ஆகமங்கள் கூறுகின்றன.

பசுபதியாகிய சிவபிரான் சூரிய சந்திரர்களை உருள்களாகவும், சரம் அசரமாகிய பொருள்கள் ஒவ்வொரு உறுப்புக்களாகவும், நான்கு வேதங்கள் குதிரைகளாகவும் அமைந்த பூமியாகிய இரதத்தில், மேருவை வில்லாகவும் வாசுகியை நாணாகவும் விட்டுணுவை அம்பாகவும் அக்கினி தேவனை அம்பின் கூராகவுங் கொண்டு எழுந்தருளிப் பிரமாவாகிய சாரதி பிரணவமாகிய சவுக்குக் கொண்டு செலுத்த உமாதேவியாருடன் சென்று அத் தேவியாருடைய திருமுகத்தை நோக்கித் திருப்புன்முறுவல் செய்தமாத்திரத்தே அம்முறுவ லக்கினியினால் முப்புரமும் நீருயின. சிவ பக்தி வழுவாதிருந்தமையால் எரியாது எஞ்சிய விரத்தன், பரமயோகன், குணபரன் என்னும் மூவரையும் சிவபெருமான் அடிமையாகக் கொண்டு தம்பதமளித்தருளினர் என்னும் வரலாற்றை இரதாரோகணக் காட்சி உணர்த்துகின்றது.

இங்கே, முப்புரமென்பது ஆணவம் கன்மம் மாயை என்னும் மும் மலங்களின் காரியம் என்னு முண்மையையும், மூவரையும் அடிமைக் கொண்டமை விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் என்னும் மூவகை ஆன்மாக்களையும் அடிமைக்கொண்டு இரக்ஷிக்கும் முறையையும் உணர்த்துவதாம். ஆகவே, திரிபுர சங்காரத்தின் உண்மைக் காட்சியை உணர்த்தி ஆன்மாக்களைப் பந்தித்த மும்மலங்களையும் நீக்கியருளும் குறிப் பாகவே இரதோற்சவம் நடைபெறுகின்றது என்பதாம்.

### திருமந்திரம்

அப்பணி செஞ்சடை ஆதிபு ராதனன்
முப்புர மெய்தன னென்பர்கள் மூடர்கள்
முப்புர மாவது மும்மல காரியம்
அப்புர மெய்தமை யாரறி வாரே.

### திருவாசகம்

என்னுடை மூவ ராக்கதர்க ளெரிபிழைத்துக்
கன்னுத லெந்தை கடைத்தலைமு னின்றதற்பின்
எண்ணிலி யிந்திர ரெத்தனையோ பிரமர்களும்
மண்மிசை மால்பலர் மாண்டனர்காண் தோணேக்கம்.

இன்னும் தேர்வடிவம் சரீரத்தைக் குறிப்பதாம். அதிற் காணப் படும் நான்கு சிங்கங்கள் ஆன்மாவின் சிவகாருண்யமில்லாத லோப குணத்தையும், பிரபஞ்ச ஆசையையும், விபரீத உணர்வையும், அகங் காரத்தையும் குறிக்கும். எட்டு யாளிகள் ஆன்மாவினது அஞ்ஞானம், அபிமானம், ராகாதி குணம், துக்கம், விடயப்பற்று, பலவிதகன்மம், உபாதி, அவத்தை என்னும் எட்டுவித அனுபவங்களையுங் குறிக்கும். கொடிகள் தத்துவங்களைக் குறிக்கும். மணிகள் சாத்திர அறிவினு லுண் டாகும் பாசஞானத்தைக் குறிக்கும். குஞ்சங்கள் வாகுமாலை முதலியன ஆன்மாக்கள் மனச்சலனத்தினுல் எழுவகைப் பிறப்பில் எண்பத்து நான்கு இலட்சம் யோனி பேதங்களாக மாறிமாறி அடையும் அவத்தை யைக் குறிக்கும். இவ்வாறு கொண்டு உடம்பு முதலிய இவைகளையெல் லாம் ஆன்மா வெறுத்துத் தியானத்தால் திருவருளைச் சேர்ந்திருக்கும் உண்மைக்கு அறிகுறியாகவும் இரதோற்சவம் ஆலயங்களில் நடை பெறுவதாமெனவும் அறிஞர் கூறுவர். இவ்வாறு உண்மைப் பொருள் காண்பித்து நிற்கும் மிக்க மகத்துவமுடையது இரதோற்சவம்.

ஸ்ரீ நாகபூஷணி அம்மன் கோயில் இரதத் திருப்பணிச் சபையினர் மிகக் குறுகிய காலத்திலே மிகச் சிறந்த முறைப்படி இத் தேர்த் திருப் பணியை நிறைவேற்றியமை அடியாருள்ளத்தில் உலவும் நாகபூஷணி அம்மையாரின் பூரண கிருபாகடாக்ஷத்தினுலேயாம்.

வடமாகாண அரசாங்க அதிபராய் விளங்கும் மகாகனம் பொருந்திய ஸ்ரீமான் ம. ஸ்ரீகாந்தா, O. B. E., C. C. S. அவர்கள் இத் தேர்த் திருப் பணிச் சபையின் தலைவராயிருந்து செய்துவரும் மேலான சேவைகள் சைவ நன்மக்களால் என்றும் பாராட்டத்தக்கன. சைவாபிமானிகளாகும் திரு. செ. சிவஞானம், D. R. O. (வவுனியா); திரு. ஆ. கந்தையா, D. R. O. (ஊர்காவற்றுறை) முதலியோர் தனுதிகாரி முதலிய பதவிகளை வகித்து வருகிறுர்கள். விவேகானந்த யந்திரசாலைத் தலைவராகிய ஸ்ரீமான்

வே. சுந்தரம்பிள்ளை அவர்கள் இச்சபைக் காரியதரிசியாயிருந்து, இத் திருப்பணியை விரைவில் நிறைவேற்றவேண்டுமென்னும் பேரவா மிகுதி யால் தமது சொந்தக் கடமைகளையும் பொருட்படுத்தாது இடையரு முயற்சியுங் குன்றாத ஊக்கமுங் கொண்டு, சேவைசெய்து வருவாராயினர். அவ்வாறு சேவைசெய்து திருப்பணியை நிறைவேற்றி வருங்காலத்திலே, இறைவனுடைய பாதநிழலை அடைந்தார்கள். பிள்ளை அவர்களுடைய நற்குண நற்செய்கைகள் யாவராலும் புகழ்ந்து பேசத்தக்க பெருமை யுடையன.

ஸ்ரீமான் வே. சுந்தரம்பிள்ளை அவர்கள் திருவடிநீழலை அடைந்த பின்னர் அவரது சகோதரராகிய திரு. வே. செல்வநாயகம் அவர்கள் காரியதரிசியாக நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். தமது தமையனார் விடுத்துச் சென்ற வேலைகள் எவ்வாற்றானும் தாமதமாதல் தகுதியன்றென்று அவரது சகோதரர்களாகும் திரு. வே. கந்தசாமி, திரு. வே. கிருஷ்ண பிள்ளை என்பவர்களும் தேர்த்திருப்பணிச் சபையாரோடு ஒத்துழைத்து வருகின்றார்கள். திரு. க. ஆறுமுகம் அவர்கள் இணைக் காரியதரிசியாகப் பணிசெய்துவருகின்றார்.

நயினாதிவு நாகபூஷணி அம்மன் தேர்த்திருப்பணிச் சபையினர், இரதத் திருப்பணியைச் செய்து நிறைவேற்றியது மாத்திரமன்றி, நயினாதீவு **ஸ்ரீ நாகபூஷணிஅம்மன் கோயில் தேர்த் திருப்பணிச்சபை மலர்** என்னும் இந்த அரிய நூலையும் வெளியிட் டுதவியிருக்கின்றார்கள். ஈழமண்டலத் தின் சிறப்பையும், அதன் வடபாலுள்ள நயினாதீவு என்னுந் தலத்தின் சிறப்புக்களையும், அத் தலத்தில் எழுந்தருளியிருக்கும் மூர்த்தி விசேடங் களையும் விரிவாகக் கூறும் இம் மலர், நல்ல தமிழ் நடையில் திட்பநுட்ப மாகப் பல நூல் மேற்கோள்களுடன் ஆராய்ந்து எழுதப்பட்டிருக்கின்றது. இதனை எழுதியவர் தமிழபிமானத்திலும் ஆராய்ச்சியிலும் சிறந்தவரும் 'கதிர்காமம்' என்னும் நூலின் ஆசிரியருமாகிய ஸ்ரீமான் குல. சபாநாதன் அவர்களாவர்.

ஸ்ரீ நாகபூஷணி அம்மன் கோயில் தேர்த்திருப்பணிச் சபையினருக்கும், பொருளுபகரித்த புண்ணிய சிலர்களுக்கும், இத் திருத் தொண்டில் ஈடு பட்டிருக்கும் ஏனையோருக்கும், திருப்பணி மலராசிரியருக்கும் சர்வா பீஷ்ட சித்திகளைக் கொடுத்தருளுமாறு கருணையங் கடலாகிய ஸ்ரீ ராஜ ராஜேசுவரியைப் பிரார்த்திக்கின்றோம்.

இங்ஙனம்

ச. குமாரசுவாமிக்குருக்கள்

அச்சுவேலி
ஏவிளம்பி௵ ஆனிமீ.



புதிய திருத்தேர்
( வெள்ளோட்ட தினத்திலன்று எடுக்கப்பட்ட படம் )

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# தொடக்கவுரை

வாலறிவோ ருணாரமுத மத்தியிற்கற் பகஞ்சூழ்ந்த மணித்தீ பத்தி
னேலுறுநற் கடம்பமர்கொல் லேயிற்சிந்தா மணிப்பீடத் திருந்த தோற்ற
மாலறுமெய் யடியவர்கண் டின்புறுவா னயினைதனின் மணிப்பி டத்தி
னேலிடுகற் பனைகடந்தே யமர்நாக பூடணியென் னுளத்த ளாமால்.

—நயினை மான்மியம்

இலங்கையிற் சைவசமயம் சரித்திர காலத்துக்கு முன்னரே வேரூன்றி வளர்ச்சியுற்றதெனக் கொள்ளலாம். பௌத்தம் முதலிய ஏனைய மதங்கள் இலங்கையிற் குடியேறிய காலத்தை ஓரளவுக்கு வரையறுத்துக் கூறிவிடலாம். ஆனால், சைவசமய வரலாறு இத்தகைய ஆராய்ச்சிக்கு அப்பாற்பட்டு நிற்பதால், இதன் தொன்மையை அளவிட முடியாது. 'முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம்பொருளே, பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே' என மாணிக்கவாசக சுவாமிகள் சிவனைப்பற்றிக் கூறிய சிறப்பியல்பு அவனுடன் சம்பந்தப்பட்ட சைவசமயத்துக்கும் உண்டென்பதற் கையமில்லை. இவ்வுண்மையினைச் சைவசமயிகளுக்கு நன்கெடுத்துக் காட்டி நிற்பது நயினாதிவிலுள்ள நாகபூஷணியம்மை ஆலயமாகும். ஈழநாட்டின் வடபாலுள்ள ஒரு சிறு தீவிற் கோயில் கொண் டெழுந்தருளிய நாகராஜேஸ்வரியை மக்கட்பெருக்கமும் நாகரிகவளர்ச்சியுமுடையவர்களான நாகர்கள் — தமிழ் மொழியாளரான நாகர்கள் — கி. மு. 13ஆம் நூற்றாண்டிலேயே நாக அரசுகளை நிலைநாட்டிய நாகர்கள் — வழிபட்டு வந்தனர் எனின், இந்த ஆலயத்தின் புராதனப் பெருமையையுங் கீர்த்தியையும் எம்போலியர் எடுத்தியம்பல் எளிதன்று. சைவ சமயத்தைக் கடைப்பிடித்தொழுகிய நாகர்களுக்கு அருள் பாலித்த அகில லோக நாயகியாகிய நாகபூஷணி யம்பாள் இக் காலத்தில் வாழும் சைவர்களுக்கும் பிற இனக் குழுவினர்க்கும் அருள் பாலித்த வண்ணமே நாகாசனத்தில் வீற்றிருக்கின்றுள் என்பதற்குப் பிரத்தியட்ச சான்றாக இருப்பது அக் கோயிலுக்குச் செல்லும் மக்களின் தொகையாகும். இந்தப் புராதன தலம் நித்திய யாத்திரைத் தலமாக இப்பொழுது விளங்குகின்றது. பராசக்தியினையுடைய பூரணமான விளக்கம் அமைந்துள்ள இடம் இத்தலமேயாகும்.

ஆரணி சடைக்கடவு ளாரணி யெனப்புகழ
அகிலாண்ட கோடி யீன்ற
அன்னையே! பின்னையுங் கன்னியென மறைபேசும்
ஆனந்த ரூப மயிலே!

எனத் தாயுமான சுவாமிகள் பாடிப் பரவிய சிவசக்தியின் திருவிளையாடல்களைப் பக்தர்கள் உணர்ந்து அநுபவிக்க முடியுமன்றி அவற்றைச் சுட்டிக்காட்டல் எளிதன்று. எனினும் பால்கினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப் பரிந்து பாவியேனுக் கருள் புரியும் நாகராஜேஸ்வரி அம்பாளின் கமல பாதங்களைத் தலைமேல் வைத்து, ஈழ மண்டலத்தின் சிறப்பினையும், அதற்குப் பெருமைதரும் நயினையம்பதியெனுந் தலச் சிறப்பினையும், அத்தலத்திலுள்ள மூர்த்தி தல விசேடங்களையுஞ் சுருக்கமாகக் கூறத் துணிந்தேன். இத்தகைய பெருந் தொண்டினை நிறைவேற்றும் ஆற்றல் அற்றவனாக இருந்தபோதிலும், இத்தொண்டில் என்னை இழுத்துவிட்ட அம்பாளின் திருவருளை நினைந்து நினைந்து உருகுவதன்றி வேறென் செய்ய வல்லேன்.

# பூர்வீக இலங்கை

இலங்கை ஒரு சிறு தீவு. உலகப் படத்தை நாங்கள் உற்று நோக்கினுல், இலங்கைத்தீவு ஆசியாக்கண்டத்தில் பாரத நாட்டிற்குக் கீழே ஒரு சிறு புள்ளியாகவே காட்சியளிக்கின்றது. எனினும், கீழைத் தேசத்துக்கும் மேலைத்தேசத்துக்குஞ் செல் லும் பாதையில் கேந்திரத்தானத்தில் இலங்கை இருக்கின்றமையால், இது சரித் திரப் பிரசித்தி வாய்ந்த பூர்வீக நாடாக விளங்குகின்றது. இந்நாட்டிற் பண்டைக் காலத்தில் வாழ்ந்த நாகர், இயக்கர், வேடர், தமிழர், சிங்களர் முதலிய குழுவினரும், இதனைக் காலத்துக்குக் காலந் தரிசித்த பேர்பெற்ற யாத்திரிகரும், இதனை வென்று ஆட்சி புரிந்த சோழர், பாண்டியர், சீனர், பல்லவர், நாயக்கர், போர்த்துக்கீசர், ஒல் லாந்தர், ஆங்கிலேயர் முதலியோரும், இத் தீவில் இப்பொழுது வாழ்ந்துவரும் சிங் களர், தமிழர், முஸ்லிம்கள், டச்சுக்காரர், மலாய்க்காரர், மலையாளத்தார் முதலியோ ரும் தத்தம் மொழிக்கேற்ற பெயர்களை இலங்கைத் தீவுக்கு இட்டு வழங்கினர். இவ்வாறு பல மொழிகளிலும் இலங்கைக்கு இடப்பட்ட பெயர்கள் 130க்கு மேல் உண்டு.[1] எனினும் ஈழநாட்டுக்குந் தமிழ்நாட்டுக்கும் உள்ள தொடர்பினைக் குறிக்கும் ஒரு சில பெயர்களைமட்டும் ஈண்டு எடுத்துக் காட்டுவாம்.

## குமரிக்கண்டம்

தென்னுடு உலகின் பழம் பெரும் நாடுகளில் ஒன்று என்பதனைப் பன்மொழிப் புலவர் **திரு. கா. அப்பாத்துரைப்பிள்ளை** அவர்கள் தாம் எழுதிய **தென்னுடு** என் னும் நூலில் தக்க சான்று காட்டி நிறுவி யுள்ளார். இந்த ஆராய்ச்சி நூலில் இருந்து ஒரு சிறுபகுதியை மட்டும் ஈண்டெடுத்துக் காட்ட விரும்புகின்றேன்.

''தென்னுடு உலகின் பழம் பெரு நாடுகளில் ஒன்று என்பது மட்டும் அன்று. அது இயற்கையன்னையின் முதல் மாநிலக் கன்னியாகவும் இருந்தது. இமயம் உண் டாவதற்கு நூறுயிரக் கணக்கான ஆண்டு களுக்கு முன்பும், சிந்து கங்கை ஆறுகளும் அவற்றின் சம வெளிகளும் தோன்றுவ தற்குப் பன்னூறுயிரக்கணக்கான ஆண்டு களுக்கு முன்னரும் தென்னுடு ஒரு முழு மாநிலமாகவே இருந்தது.

தென்னுட்டின் தென்பாலுள்ள மா கடலில் பல தீவுகள் இருக்கின்றன. இப் பெருங் கடல் முன்பு தென்னுட்டின் தொடர்ச்சியான ஒரு மாபெருங் கண்ட மாயிருந்தது. தென் ஆபிரிக்கா, பர்மா, மலாயா, கிழக்கு இந்தியத் தீவுகள், ஆஸ்திரேலியா, வடமேற்கு அமெரிக்கா ஆகிய நிலப்பகுதிகள் இக்கண்டத்துடன் முன்பு ஒட்டிக் கிடந்து பின் பிளவுபட்டுச் சிதறிப்போயின என்று மண்ணூலார் குறிக்கின்றனர். இம் மாபெரு நிலப் பகுதியைத் தமிழ் மரபு குமரிக்கண்டம் என்று வழங்குகின்றது. ஆராய்ச்சியாளர் இதனை 'இலெமூரியா' என்று குறிக் கின்றனர். உயிரினங்கள் முதன் முதல் இங்கேயே தோன்றின......தென்னுடு நில உலக வளர்ச்சி, உயிரின் வளர்ச்சி, மனித இன வளர்ச்சி ஆகிய இயற்கையின் பல படிமுறை வளர்ச்சிகளைப் படலம் பட லமாகத் தொகுத்து எடுத்துக்காட்டும் ஒரு பெருங் காவிய ஏடாகத் திகழ்கின்றது.
[தென்னுடு-பக்.6-8]

## கடல்கோள் சில

பண்டை ஞான்று இலங்கையானது தமிழ் நாட்டின் ஒரு பகுதியாய் இருந்த தென்பதே சரித்திர ஆராய்ச்சியாளர் துணிபு. அங்ஙனமாயின் இந் நாட்டின்

(1) Ceylon—by any other Name by Walrus —Ceylon Daily News 29-11-56

பழம் பெரும் குடிகள் திராவிட வகுப்பினர் என்பது அவர் கருத்து. கந்தபுராண காலத்தில் சூரபத்மன் ஆட்சி புரிந்தபொழுது, கார்த்திகேயப் பெருமான் . இந்நாட்டிற்கு வந்த வரலாற்றைக் கதிர்காமம் என்னுந் திருத்தலம் இன்றும் நினைவூட்டிக்கொண்டிருக்கின்றது என்பர் சேர் பொன். அருணுசலம் அவர்கள்.[1] களுகங்கை கடலோடு கலக்கும் இடத்தின் ஒரு கரை **வேலபுர** மெனவும், மற்ருெரு கரை **தேவ சத்துரு**கரை (Desastra Kalutara) தேசஸ்தர துறையெனவும் வழங்கப்படல் இப்பேரினை நினைவூட்டுகின்றதென முற்கூறிய அறிஞர் குறிப்பிட்டிருக்கின்ருர்.

இங்ஙனம் ஒரு பெருங் கண்டத்தின் பெரும் பகுதியாயிருந்த இலங்கையானது பன்முறை கடற்கோட்பட்டதென்பது சரித்திர நூல்களிற் றெளிவாகக் கூறப்பட்டுள்ளது. அன்றியும், கடலடுத்த நாடுகளுக்கெல்லாம் கடற்கோள் வரலாறு ஏற்படுதல் இயல்பு. எனவே இலங்கைக்கும் பல கடற்கோள்கள் ஏற்பட்டிருக்கு மென்பது மறுக்காது ஒப்பக்கூடியதேயாம். அங்ஙனமாஞல் இப்பொழுதுள்ள இலங்கையின் நிலப்பரப்பு இன்னும் பன்மடங்கு விரிந்திருக்க வேண்டுமென்பது சொல்லாமலே பெறப்படும். ஆழிசூழ் இலங்கை ஆயிரக் கணக்கான மைல்களுக்குப் பரந்திருந்ததென்ப. இராவணனுடைய ஆட்சியின் பின்னர் ஒரு கடற்கோள் கூறப்பட்டிருக்கின்றது. இராம–ராவண யுத்தம் கி. மு. 2387 அளவில் நிகழ்ந்ததெனச் சிங்களச் சரித்திரங் குறிப்பிடுகிறது. சேர் வில்லியம்ஸ் ஜோன்ஸ் அவர்கள், இந் நிகழ்ச்சி கி. மு. 1810 அளவில் எனக் குறிப்பிட்டிருக்கின்ருர். பந்துவாசன் காலத்திலும் (கி. மு. 500), களனி திஸ்ஸன் காலத்திலும் (கி. மு. 200), இத்திவுக்குக் கிழ் மேற்றென் பாகங்கள் கடலுள் ஆழ்ந்தன எனச் சிங்களச் சரித்திரங் கூறுகின்றது. இன்னும் கடையம்பொத்த, லங்காவிஸ்தாரய, (Kadaimpota, Lanka Vistaraya) என்னும் நூல்களாற் களனி என்னும் இராசதானி கடலிலிருந்து 28 மைல் தூரத்தில் இருந்ததென அறியக்கிடக்கின்றது. 1,00,000 பட்டினங்களையும், 970 நெய்தற்பாக்கங்களையும், 470 முத்துக் குளிப்பவர் இருந்த கிராமங்களையும், எல்லாமாக இலங்கை நாட்டின் 12 இல் 11 பாகத்தைக் கடல் மூடிற்றென இராசாவலி எனும் சிங்கள நூல் குறிப்பிடுகின்றது.

இலங்கையின் கிழ் மேற் றென் பகுதிகளே ஆழிவாய்ப்பட்டனவென்பது மிகப் பொருத்தமான கூற்றேயாம். இலங்கையின் தென்கிழக் கடலிலிருந்து ஒளிகாலும் கலங்கரை விளக்கம் கட்டப்பட்டிருக்கும் கற்பாறை (Great Bass Light House) இன்றும் இராவணன் கோட்டை யென்றேயழைக்கப்படுகிறது. இன்னும் மாணிக்க வாசக சுவாமிகளும், 'ஆர்கலிசூழ் **தென்னிலங்கை**' யெனக் குறிப்பிட்டிருத்தலும் அவதானிக்கற்பாலது. 'தென்' எனுஞ் சொல்லுக்கு வேறு பொருள் கூறுவாரு முளரெனினும், இச் சொல் தென் பாண்டிநாடென்ருற் போல, திசையைக் குறித்து நின்றது எனக் கோடல் நேர் பொருள். இராவணன் திருக்கோணேசர் கோவிலை நிறுவினுன் என்பது கன்னபரம்பரை. இராமர் இராவணனுடன் போர் தொடுத்தற்கு முன்னர் **முனீசுவரத்தில்** வணங்கினுரென **சேர் அருணுசலம்** அவர்கள் குறிப்பிட்டிருக்கின்ருர்கள்.[2] சேதுபந்தனத்திற்கு 'இராமரணை' எனும் பெயருண்மையும் ஈண்டு நினைவு கூர்தற்பாற்று. சிதா பிராட்டியாரின் பெயர் நுவரெலியாவுக்கும் ஹக்கலைக்கும் இடையிலுள்ள **சீத்தலவா** (*சிதை வெளி*), **சீதால** (*சிதை யருவி*), **சீதாகுண்ட** (*சிதை குண்டம்*) எனும் இடப்பெயர்களாலும், பொய்ச் சிதை உருவத்தை இந்திரசித்து எரித்த

1. Census Report for 1901: by Sir P. Arunachalam
2. Sketches of Ceylon History by Sir P. Arunachalam

இடமெனக் கருதப்படும் **சீதாவாக்கை** யெனும் இடப் பெயரானும், இலங்கையில் இன்றும் நின்று நிலவுகின்றது. இராவணனுடைய மனைவி மண்டோதரி மாணிக்கவாசக சுவாமிகளாற் புகழப்பட்டிருத்தலையும் ஈண்டு நினைவு கூர்தல் நன்று. இன்னும் இராமாயணக் கதைகள் பலவாறாக மலைநாட்டிற் கேட்கப்படுகின்றன. இவற்றுட் சிலவற்றை **மேஜர் போர்ப்ஸ்** என்னுஞ் சரித்திர அறிஞர் தொகுத்துக் கூறியிருக்கின்றார். இராமாயணத்திற் கூறப்பட்ட இலங்கை வேறு, இப்பொழுது இலங்கை யென அழைக்கப்படும் தீவு வேறு என வாதிப்பாருமுளர். அத்தகையார் இலங்கையின் ஒரு பாகம் ஆழிவாய்ப்பட்டதனை நினைவுகூர்ந்து இத்தீவின் மலைநாட்டினைச் சுற்றிப் பார்ப்பார்களாயின், தங் கொள்கையிற் றளர்ச்சியுறுவர் என்பதற் கையமின்று.

இப்பொழுது இலங்கை என்று வழங்கும் இந் நாடே இராமாயணத்திற் கூறப்பட்ட இலங்கை எனத் தீர்மானிக்கலாம் என்பதனைத் தக்க சான்றுகளுடன் நிரூபித்துள்ளார் யாழ்ப்பாணம் பரமேஸ்வரக் கல்லூரித் தலைவரும், தலைசிறந்த ஆராய்ச்சியறிஞருமாகிய திரு. **சு. நடேச பிள்ளை யவர்கள்.** இவ் வறிஞர் **இலங்கைத் தமிழ் விழா மலரில்** எழுதிய **'இலங்கை ஆற்றுப்படை'** என்னும் ஆராய்ச்சிக் கட்டுரையினைப் பார்க்க. இலங்கைக்குப் பல பெயர்கள் இருப்பது போல உலகில் வேறெந்தத் தீவுக்கும் இருக்குமெனக் கூற முடியாது. இலங்கையின் பெயர்களை அறிந்துகொள்ளுதல் அதன் சரித்திரத்தை அறிதற்குப் பெருந் துணையாகவிருக்குமாதலின், அத்தகைய பல பெயர்களை முதற்கண் குறிப்பிடுவாம்.

**இலங்கைபெனும் பெயர்**

இலங்கையெனும் பெயர் எக் காரணம் பற்றி உண்டாயிற்றென இக்காலத்தில் துணிந்து கூற முடியவில்லை. இச் சொல், இலட்சம் அல்லது இலக்கம் எனும் சொல்லின் மருவெனக் கொண்டு, இத்தீவுக் கருகிலிருந்த இலட்சம் தீவுகள் ஆழிவாய்ப்பட்டன எனும் கன்ன பரம்பரை யொன்றினை நினைவூட்டுகின்றதென்பர் **மேஜர் போர்ப்ஸ்.** இலக்கம் எனும் சொல் ஒளியெனவும் பொருள்படுதல் 'எல்லே யிலக்கம்...' (தொல். உரி) எனும் நூற்பாவால் இனிது துணியப்படும். ஒளி யென ஒரு பொருள்படும் எல், இலக்கம் என்னும் இருசொற்களினின்றும் முறையே ஈழம் என்பனவும், இலங்கை, லங்கா என்பனவும் பிறந்த இயைபு ஈண்டு நோக்கி யின்புறத் தக்கது.

இலங்கை யெனுஞ் சொல்,

"கடல்சூ ழிலங்கைக் கயவாகு வேந்தன்" எனச் சிலப்பதிகாரத்திலும்,

" இலங்கா தீவத்துச் சமனொளி யென்னுஞ் சிலம் பினை யெய்தி" என மணிமேகலையிலும்,

"தொன்மா விலங்கைப் பெயரொடு பெயரிய நன்மா விலங்கை" எனச் சிறுபாணாற்றுப் படையிலும்,

" இலங்கையி ழத்துக் கலந்தரு செப்பு" எனப் பெருங்கதையிலும் வந்துள்ளது.

**இரத்தினத்திவம் :** இவ்விலங்கை கடற்கால்வாயால் இரு பெருங் கூறுகப் பிரிக்கப்பட்டுளது. முன்னது வடபாற் கண்ணது, பின்னது தென்பாற்கண்ணது. இரத்தினத் திவம் எனுஞ் சொல், **'இரத்தினத் தீவத் தோங்குயர் சமந்தத் துச்சி மீமிசை.......'** என **மணிமேகலையில்** வந்துள்ளது. இத்தகைய பாகுபாடின்றி இலங்கை முற்றினையுங் குறித்த பெயராகக் கருதுவாரு முளர். சமந்த கூடத்திற்கு அண்மையில் இரத்தினபுரியெனுஞ் சிறந்த நகரம் இருத்தலும் ஈண்டு நினைவு கூர்தற்பாற்று. இலங்கை இரத்தினக் கல்லுக்குப் பெயர்போன இடமாகும்.

**ஈழம் :** ஈழம் எனும் பெயர் இலங்கை முழுவதற்கும் பொதுவாகவும், வடபாற் கூறுகிய யாழ்ப்பாணத்திற்குச் சிறப்பாக வும் வழங்கப்பட்டிருக்கின்றது. இப் பெயர் முதலில் இந்தியா என்னும் பெயர்போல யாழ்ப்பாணத்திற்கு இடப்பட்டதாயிருந்து பின்னர் இலங்கை முழுவதற்கும் வழங் கிற்றுப் போலும். இங்ஙனமின்றி முதன் முதலில் இலங்கை முழுவதற்கும் உரிய பெயராயிருந்து நாளடைவில் அதன் ஒரு கூற்றுக்கு வழங்கப்பட்டதாகக் கொள் ளினும் கொள்ளலாம். **'இலங்கை ஈழத் துக் கலந்தரு செப்பு'** எனப் பெருங் கதையில் வரலால் இலங்கையின் ஒருபகுதி ஈழமெனுங் கொள்கை வலியுற்றமை காண்க. இன்னும் **'ஈழத்துணவும்'** எனப் **பட்டினப்பாலையில்** இச்சொல் ஆழப்பட் டிருக்கிறது. பழஞ் சிங்களம் 'எலு' என வழங்கப்பட்டு வந்ததென்பது சிங்களர்க் கும் உடம்பாடு. எலு என்பது தமிழின் பாற்பட்ட தொன்றெனச் சொற்பிறப் பாராய்ச்சி வல்லுநர் **சுவாமி ஞானப்பிர காசர்** குறிப்பிடுகின்ருர். அவர் கூறுவது:—

'' பரத கண்டத்தோடு ஒருகாலம் இணைந் திருந்ததாகிய நம் இலங்கையிலே ஆதி தொட்டுத் தமிழின் ஒரு பாகதமே பேசப் பட்டது என்ற உண்மை எல்லாருக்கும் சம்மதம். இங்கே பாகதம் என்றது ஒரு பாஷையின் சிதைந்த உருவத்தை ........அதுவே மேலும் திரிந்து எலு எனப்படுகிற சிங்களம் ஆயிற்று என்பது எனது கொள்கை. [1]

ஈழம் என்னுஞ் சொல்லடியாகவே இலங்கையின் ஏனைய பெயர்கள் தோன் றின வெனக் காலஞ்சென்ற வழக்கறிஞர் பிறிற்ரே அவர்களும் முதலியார் இராச நாயகம் அவர்களுங் குறிப்பிட்டிருக்கின்ருர் கள். முதலியார் அவர்கள் கூறுவதாவது:—

'' அக்காலத்தில் இலங்கையில் வசித்த நாகரும் இயக்கரும் 'எலு' என்று இக் காலத்திற் பிழைபட வழங்கப்படும் ஈழு வென்னும் நிறைவற்ற பாஷையே பேசி வந்தார்கள். அதனுல் இலங்கைக்கு ஈழம் என்றும், ஈழமண்டலம் என்றும் பெயர் உண்டாயது. ஈழம் சிழம் என மருவிச் சிஹழம், சிங்களம் என மாறியது. சிழம் என்னும் பெயரிலிருந்தே சிழம்தீப், சேரண்டிப் என்னும் அராபிய நாமங் களும், சிலாங், சிலோன் என்னும் மேலைத் தேயத்தவரிட்ட பெயர்களும் வந்தன. 'சிஹ' வென்னும் பாலிப் பாஷைச் சொல் 'சிங்கம்' என்னும் பொருளை யுடையதானபடியால், சிகழம், சிங்களமாக மருவியது அதிசயமல்ல. விஜயன் மிருகேந்திரனுகிய ஒரு சிங்கத் தின் வழித்தோன்ற லானபடியால், அவன் வழித்தோன்றினேரும் சிங்களவர் என்றழைக்கப்பட்டார்கள் என்னும் மகாவமிசக் கூற்று உண்மையுமன்றிச் சிங்கள சாதியாருக்கோர் பெருமையுந் தராத வெற்றுரையாதல் காண்க''. [2]இனி, சிறி ஈழம், சிஹளம், சிங்களம் ஆயிற்றெனக் கொள்வாரு முளர். இந்த ஈழத்திற்கும் சுமேரியாவிலுள்ள ஈழத் திற்குந் தொடர்புண்டென்பது நிச்சயிக்கப் படுமாயின், தமிழர் நாகரிகம் பரவி யிருந்தமைக்குச் சிறந்த எடுத்துக்காட் டாதல் கூடும்.

தமிழர் வாழ்ந்த நாடு தமிழகம் என்ருயினுற்போல ஈழர் வாழ்ந்த நாடு ஈழமென்ருயிற்ருதல் வேண்டும். சேரர், சோழர், பாண்டியர் என்ற தமிழரின் ஒவ்வோர் இனம்போல், ஈழரும் மற்ரே ரினமாய் இருத்தல் கூடும். இவ் வீழர்கள் தாம் இலங்கையில் நாகர்களுக்குஞ் சிங்க ளர்களுக்கும் முன்பு இருந்த பழங்குடி மக்கள். ஈழர் என்னுஞ் சொல்லையே ஆரியர்கள் இயக்ஷர் என வழங்கினுர்கள். ஆரியர்களுக்கு ழகரவெழுத்தொலி இல் லாமையால் அதற்கியைந்த ஷகாரமாக்கி இயக்ஷர் எனத் திரித்து வழங்குதல் கூடும். இவ் வீழர் தலைவன்தான் மிகப் புகழ்பெற்ற இராவணன் என்பவனும்.

1. ஈழகேசரி 15 – 8 – 37
2. யாழ்ப்பாணச் சரித்திரம் பக். 11—12.

குவேனியும் இவ் வியர் தலைவியே. இவ் வியர் என்னும் பெயர் சரித்திர வாராய்ச்சி யுடையார்க்குப் புலனாகாது போனது வருந் தத்தக்கது. ஈழர்கள் கல்வி, கைத்தொழில், வேளாண்மை முதலியவற்றிற் சிறந்திருந்து வாழ்ந்தவர்களெனப் பழைய நூல்களான் உணரவருகின்றது. '**ஈழத்துணவும்**' என்னும் **பட்டினப்பாலையான்** வேளாண்மை புலப்படும். '**ஈழத்துச் செப்பு**' எனும் பெருங்கதையானும், '**ஈழவக்கத்தி**' எனும் **நச்சினார்க்கினியர்** எடுத்துக்காட்டானும் விஜயன் கண்ணுற்றபொழுது ஈழர் தலைவி குவேனி நூல்நூற்றுக் கொண்டிருந்தன ளென்னும் மகாவம்சக் கூற்றானும் கைத் தொழிற் றிறமை பெறப்படும். ஈழக் குலச் சான்றார் வரலாற்றால் ஈழரது போர்ப் பயிற்சியும், ஈழத்துப் பூதன்றேவனார் வர லாற்றால் ஈழரது கவிப்புலமையும் பெறப் படுகின்றன.

இனி ஈழம் என்பது பொன், கள், கிழக்கு எனப் பல பொருள் தந்து நிற் றலின் இப் பொருளைக் கருத்தில் வைத் துப் புராணகாரர் பல கதைகளை உண் டாக்கிவிட்டனர். பொன்மலையெனப்படும் மேருவின் ஒரு சிகரமே ஈழநாடாயின தென்பது பௌராணிகர் கூற்று. ஈழுவர் எனுங் குடியினர் இந்தியாவிற் காணப் படலால், அவர்கள் இத்தீவினின்றும் இந்தியாவிற் குடியேறியவர்களாய் இருத் தலுங் கூடும். ஈழ நாட்டிலிருந்து தமிழ் நாட்டிலும், மலையாளத்திலும் குடியேறிய வர்கள் 'ஈழவர்' எனவும், திருநெல்வேலி யிற் குடியேறிய ஈழத்துப் பிள்ளைமார் 'இல்லத்துப்பிள்ளைமார்' எனவும் வழங் கப்படுதலும் ஈண்டு நினைவுகூர்தற்பாற்று.

## மும்முடிச் சோழமண்டலம்

இலங்கையின் வடபகுதியை வெற்றி கொண்ட இராஜராஜன் தனது நாட்டுள் ஒருபகுதியாக இதனைக் கருதி இதற்கு மும்முடிச் சோழமண்டலம் எனும் பெயரிட் டழைத்தானென்பது தென்னிந்திய சாச னங்களால் அறியக்கிடக்கின்றது.

## சிங்களம் அல்லது சிங்களத் துவீபம்

சிங்களர் வாழும் இடம் என்பது இதன் பொருள். சிங்களம் எனும் தீவில் வாழ்ந்தவர்கள் சிங்களர் எனப் பெயர் பெற்றனர் என்பது வைபவ மாலையுடையார் கூற்று. இங்ஙனமன்றிச் சிங்களர் எனும் மரபினர் வாழ் இடம் சிங்களமாயிற் றென்பாருமுளர். இடப் பெயர் ஆராய்ச்சி வல்லுநர் திரு. S. W. **குமாரசாமியவர்கள்**, 'சிங்களம்' எனும் சொல் சமஸ்கிருத மகாபாரதத்தில் வந்துள தெனக் குறிப்பிட்டிருக்கின்றார். அங்ஙன மாயின் சிங்களர் எனும் மரபினர் தோன் றுதற்கு முன்னரே சிங்களம் என்னும் இடப்பெயர் இருந்திருத்தல் வேண்டு மெனக் கருத இடமுண்டு.

மேலும் இவ் வறிஞர் கூறுவது: சிம்ஹ அல்லது சிங்க என்பது திரளான தானப் பெயர்களிலே [1] தலைநிற்றலா னும் மத்திய இந்தியாவிலும், மற்றுஞ் சிலவிடங்களிலும், ஆண் மக்கள் தம் இயற்கைப் பெயரோடு சிங் (சிங்கம்) என்னுஞ் சொல்லைச் சேர்த்து வழங்குத லானும், அவ்வண்ணம் வழங்குஞ் சாதி களிற் பலவற்றை வடதிராவிட ரென வும், திராவிடக் கலப்புடையோ ரென வும் ஆங்கிலக் கலைஞர் அறைதலானும், நாடகத் தமிழிலே சிங்கன் என்பதன் பொருள் குறவனாகையாலும், விஷ்ணு வுக்குச் சிங்கேசுவரன், சிங்கப்பெரு மாள், சிங்கதேவன், நரசிங்கனெனும் நாமதேய முண்மையானும் இராவணன் மகன் முதலிய இராக்கதர் சிலரும், அசு ரர் சிலரும், மற்றுஞ் சில வேந்தரும் சிம்ஹ என்னுஞ் சொல்லைத் தனித்தே னும் வேறு சொல்லோ டொட்டியேனும் தம் பெயராகக் கொண்டிருந்தமையா னும், சிங்வோ எனப் பெயரிய வொரு

1. சிங்பூர், சிங்கபாத்து, சிங்கபீர், சிங்கம்பட்டி, சிங்கநல்லூர், சிங்கபுரம், சிங்காசனம், சிங்கப்பூர்.

சாதி கடாரத்திலே இருக்கின்றமையானும், சிம்ஹ என்னும் வட சொற்கு அரசகுமாரன், தலைவன் நாதனெனவும் பொருளுண்மையானும், சிங்கப் பட்டம் எனப் பெயரியவொரு பட்டம் பெரும்பாலும் வேளாளர்க் குண்மையானும், கேசத்தினாலேனும், முகத் தோற்றத்தினாலேனும், வீரசக்தியினாலேனுஞ் சிங்கத்தையொத்த வொரு சாதியாரைச் சிங்கர் எனச் செப்புதல் தகுதியாதலானும், நாக வழிபாடுடைய மக்கட்கு நாகர் எனும் பெயர் அமைந்தவாறு, சிங்கதேவனை வழிபட்ட மாந்தர்க்குச் சிங்கரெனும் பெயர் அமைதல் முறைமையாதலானும், சிங்களம் என்னும் ஸ்தானப் பெயரிலுள்ள சிங்க என்பது சிங்கள மகா வம்சத்திற் சொல்லிய மிருகேந்திரனைக் குறியாது, பண்டை நாட் பரதகண்டத்தும் ஈழமண்டலத்தும் பரவியிருந்த (நாகரை யொத்த ஒரு சாதி நரேந்திரரையேனும், சிங்கேசுவரனையேனும் குறித்தது போலும்)[1]

சிங்களர் எனுஞ் சொல் கேரளர், போசளர், குந்தளர் என்றாற்போலும் ஆரியச் சொற்சிதைவாகிய இனப் பெயராயிருத்தல் வேண்டும். போசன் மரபினர் போசளர், குந்தன் மரபினர் குந்தளர், கேரன் (சேரன்) மரபினர் கேரளர் எனப் பொருள்படுமாறு, சிங்களர் என்பதும் சிங்கன் மரபினர் எனப் பொருள்படும். சிங்கன் எனும் பெயர் பகையரசர்களாகிய யானைகளுக்குத் தான் சிங்கம்போல்பவன் என்னுங் கருத்தால் தனக்குத் தானே இட்டுக்கொண்ட பெயராதல் பொருந்தும்; இங்ஙனமின்றிச் சிங்கன் எனும் சொல் வந்த வரலாறு உலகியலுக்கொவ்வாத புனைந்துரை வகையால் மகாவமிசத்திற் கூறப்பட்டு இக்காலத்து வழங்குகின்றது. சிங்களர்கள் பெரும்பான்மைத் தமிழ்க் கலப்புடைய ரென்பது அவரது மொழி நடையிலே தெரிந்துகொள்ளலால் சிம்ஹ என்பது சிங்க என வருவதும், தேவனம்பிரியதர்ஸ் என்பது தேவநம்பிய திஸன் என வருவதும் தமிழ்க்கலப் பென்பதற்குச் சிறிதும் ஐயமில்லை. (தேவனம்பிரியதர்ஸ் என்பது மகதநாட்டரசன் அசோகச் சக்கரவர்த்தியின் பெயர்). சிங்களர் விஷ்ணுவையும், கதிர்காமக் கடவுளையும் பத்தினித் தெய்வோவையும் (கண்ணகி) இன்னும் வழிபட்டு வருகிறார்கள். அன்றியும் கண்டியில் ஆண்டு தோறும் நடக்கும் (Perahera) பெருவிழாவில் இத் தெய்வங்களே முதன்மை பெற்றிருந்தமை சரித்திர வாயிலாற் பெற்ற உண்மை.

இனி, தமிழொழி பதினேழ் நிலங்களுள் முதற் கூறப்பட்டிருப்பது சிங்களம். இதனை நன்னூலுரை யாசிரியராகிய மயிலைநாதர் எடுத்துக் காட்டியிருக்கின்றார். அவர் கூறுவது: தமிழொழி பதினேழ் நிலமாவன: "சிங்களஞ் சோனகஞ் சாவகஞ் ........... தாமிவையே" என்பன. அருமணம், காம்போசம், ஈழம், கூவிளம், பல்லவம்: என்பன முதலானவை இவற்றின் பரியாயமும் இவற்றின் பேதமுமாய் இவற்றுள்ளே அடங்குமென்க. இவற்றின் மொழிகளும் வந்த வழி அறிந்துகொள்க.

"கன்னித் தென்கரைக் கட்பழந் தீவஞ்
சிங்களங் கொல்லங் கூவிள மென்னு...—"

**தாபிரபன** (Taprobane) பண்டைக் காலத்து யவன (உரோம) கிரேக்க ஆசிரியர்களாய Oncsritus, Diodorous, Siculus, Ovid, Strabo, Dionysius Periegetes Pomponius Mela, Solinus Polyhistor, Pliny முதலியவர்கள் இத் தீவு 'தாபிரபன' எனும் பெயரால் அழைக்கப்பட்டதென அறிந்திருந்தார்கள். இது மிகவும் பழைய தொரு பெயர். இச் சொல் (Tap-raban) அல்லது (Tab-ravan) எனப் பிரிக்கப்பட்டு இராவணன் தீவு எனப் பொருள்

1. வடமாகாணத்துள்ள சில இடப்பெயர்களின் வரலாறு—பக். 17—18.

படுமென்பர் ஒரு சாரார். இது தம்பபன்னியெனச் சிங்கள நூல்களால் இத்தீவுக் கிடப்பட்ட பெயரின் மருவென்பர் பிறிதொரு சாரார். தம்பபன்ன என்பதன் பொருள் செந்நிறமுடையது என்பது. விஜயனும் அவன் பரிவாரமும் முதன் முதல் இத் தீவில் இறங்கியபொழுது களைப்பினாலும் அலுப்பினாலும் நடக்கச் சக்தியற்றுத் தங்கள் கைகளை ஊன்றிக் கொண்டிருந்தார்களெனவும் தம் கைகள் செந்நிறம் படிந்தமை கண்டு 'தம்பபன' எனப் பெயரிட்டார்களெனவும் மகாவம்சம் கூறும். இத்தகைய வெற்றுரைகள் பல சிங்கள மகாவம்சத்தில் உளவென் பதற்கு இஃதோர் எடுத்துக்காட்டாகும். தென்னிந்தியாவில் தாமிரபரணியாற்றுக் கருகிலிருந்த தமிழர் இங்கு வந்து குடியேறிய பொழுது இத்தீவுக்கு இப்பெயரிட்டனர் என்பது சாலும். அன்றேல் தென்னிந்தியாவில் தமிழரைக் கண்ட பிறதேயத்தவர்கள் இங்கும் மகாவலிகங்கையையும் தமிழரையும் கண்டபொழுது, இத்தீவிற்கும் அப்பெயரையிட்டழைத்தனரெனக் கோடலும் ஒன்று. இதுவே **சேர் பொன். அருணாசலம்** அவர்களது கொள்கையாகும். இப்பொழுது பொதியின் மலையிலே பிறந்து கிழக்கோடி கொற்கையிலே கடலோடு கலக்கின்ற தாம்ரபரணியாறு முன்னொரு காலத்தில், அஃதாவது இப்பொழுதுள்ள கடல் கன்னியாகுமரிமுனைக்கு வடபால் இல்லாத பொழுது, கொற்கைக்கும் கிழக்கே நிலத்தோடி வந்து, இலங்கை வரையும் ஓடி இலங்கையினுள்ளும் சென்றதாதல் பற்றி அவ்வாற்றின் பெயரே பெயராக இலங்கைக்கு வழங்கினாரெனக் கொள்ளுதலுஞ் சான்று கிடைப்பின் உறுதிப்படும்.

### பாலாசி முண்டு (Palaesimoundu)

பிற்காலத்துக் கிரேக்கரும் உரோமரும் இத் தீவினைப் பாலாசிமுண்டு எனக் குறிப்பிட்டிருக்கின்றார்கள். இதைத் தமிழ்ச்சொல் எனக் கொள்வர் முதலியார் இராசநாயகம் அவர்கள். பழைய சீழமண்டலம் —சீலமண்டலம்—ஈழமண்டலம், இவற்றிலிருந்து ஏனைய பெயர்கள் வந்தவரலாற்றை முன்னர்க் குறிப்பிட்டுள்ளாம். ஆண்டுக் காண்க. பரசிறீ மண்டலம் என்பதன் மருவென்பர் வின்சென்ற் ஆசிரியர். இஃது ஓர் பட்டினத்தின் பெயரெனவும், இலங்கையின் வடமேற்குப் பகுதியில் இருந்ததெனவுங் கூறுவர் **பிறிடாம்** ஆசிரியர். **மேஜர் வோர்ப்ஸ்** எனும் சரித்திர வல்லுநர் இச் சொல் சிங்கள மொழியினின்றும் பிறந்ததெனக் கொண்டு—பாலயசிய மண்டலம்—கிழ்நாடு எனப் பொருள் படு மென்பர். Pali-Simanta-Palai Simundu —பாலி சிமந்த எனும் வடமொழிப் பதத்தினின்றும் போந்த பெயரெனவும், தரும நாற் றலைமை எனப் பொருள்படுமெனவும் பிறிதொருவர் கூறியுள்ளார்.

பாலாவி மன்று என்பது பாலாவி ஓடும் வெளியிடம். பாலாவி மன்று என்பது பாலாசி முண்டெனக் கிரேக்கர்கள் வழங்கியிருக்கவேண்டு மென்பர் சிவங். கருணாலய பாண்டியப் புலவர் அவர்கள். பாலாவி மன்று என ஓரிடத்தின் பெயராக இருந்ததனையே இலங்கை முழுதிற்கும் பெயராகக் கிரேக்கர்கள் வைத்துக்கொண்டார்களாதல் வேண்டும். இந்தியா என்பதும் கிரேக்கர்கள் அவ்வாறே இட்ட பெயரென்பது ஈண்டு நினைவுகூர்தற்பாற்று. மன்று மண்டு எனத் திரிந்து முண்டெனச் சிதைந்ததென்றல் பொருந்தும். நீலகிரியைச் சார்ந்த மன்று எனும் பல ஊர்களின் பெயர்கள், உதக மண்டு என்றாற்போல மண்டென வழங்குவது கண்டுகொள்க.

### சாலிக (Salika)

''தாபிரபன எனப் பழம் பெயர் பூண்ட தீவு இப்பொழுது சாலிக என அழைக்கப்படுகின்றது'' எனத் தொலமி என்பவர் எழுதியிருக்கின்றார். சலாவ அல்லது சாலியர் எனும் ஒரு வகைச் சாதி இலங்கையிலுண்டு. இவர்கள் இலங்

கைக்கே சிறப்பாகவுரியவர்கள். முன்னொருகால் கூலியாட்களாகவும் பின்னர் கறுவாப்பட்டையுரிக்கும் தொழிலாளர்களாகவும் வாழ்ந்துவந்தார்கள். இவர்களுடைய வரலாறு பலபடத் திரித்து வழங்கப்படுதலின், உண்மை வரலாற்றுப் பகுதி தெரிந்திலது. இனி, சாலிய என்பது சிலம் அல்லது சீழம் எனுஞ் சொல்லின் மருவென்பாருமுளர். மலையாளத்தார் இதனை 'சைலத்த' எனப் பெயரிட்டழைத்தனர்.

**சலாபதீபம்**

சலாபம் என்பது முத்துக் குளித்தல் எனப்படும். இப் பெயரால் இத்தொழிற் சிறப்பு மிகுந்த பட்டினமும் இலங்கையிலுண்டு. முத்துக்களாலும் வாசனைத் திரவியங்களாலும் இலாபத்தை யுண்டாக்கித் தன்னகத்தே பிறதேயத்து வணிகர்களை இழுக்கும் ஆற்றல் வாய்ந்த தீவு என்பது இதன் பொருள் போலும்.

**செறண்டிப் (Serendib) Selen-divis**

அராபிய ஆசிரியர்கள் Edirisi, Soleyman, Abou-Zeyn முதலியோர் இட்டழைத்த பெயர் 'செறண்டிப்' என்பது. டிவிஸ் (Divis) எனும் சொல் தீவு எனும் பொருளது. இதுவே பின்னர் மருவி Siren Zeilan, Ceylon, சிலோன் என்றாயிற் றென்பர் ஒரு சாரார்.

முதற் புத்தராகிய காகுசந்தன் காலத்தில் இத்திவு 'ஒச்சதிவம்' எனவும், கோனகம்ம புத்தன் காலத்தில் 'வர துவீபம்' எனவும், காசியப்ப புத்தன் காலத்தில் 'மத துவீபம்' எனவும் வழங்கப்பட்டுவந்ததென மகாவம்சம் குறிப்பிடுகின்றது. புத்தருடைய விரிவான வரலாற்று நூல்களில் அவர் இலங்கைக்கு வந்த வரலாறு கூறப்படவில்லை யெனக் கருதுகின்றனர் ஒரு சில ஆராய்ச்சியாளர். ஒபிர், தர்ஷிஸ் என எபிரேயர் குறிப்பிட்டவற்றின் ஒரு பகுதி இலங்கை யெனவும், சாலமோன் அரசன் தனது கப்பற்படை மூலம் பொன், வெள்ளி, இபம், மயிற்றோகை முதலியவற்றைப் பெற்றானெனவும் நம்பப்படுகின்றது. சியம் (Siam) தேசத்தவர் இதனைத் 'தேவலங்கா' வென்றழைத்தனர்.

**நாகத்திவு**

இயக்க வேந்தனாகிய குபேரன் இலங்கையில் ஆட்சி புரிந்தான் எனப் புராணங் கூறுதலால் இத் திவு **இயக்கதீவு** எனப் பெயர் பெற்றது. இனி நாகர்கள் முன்னொரு காலத்தில் இலங்கையில் வாழ்ந்தமையால் இத் திவு **நாகத்தீவு** எனவும் பெயர் பெற்றது.

---

**கடவுள் வாழ்த்து**

பொங்குருச் செல்வங் கல்வி பொருவிலா வாய்மை தூய்மை
எங்கெமக்கு அருள வல்ல இணையிலா எம்பி ராட்டி
பங்கயத் தடஞ்சூழ் கூடற் பவளமால் வரையை நீங்கா
அங்கயற் கண்ணி மங்கை அடிக்கம லங்கள் போற்றி.

*— திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்*

# நாக வழிபாடு

நாக வழிபாடு இந்தியாவின் பழங் குடிகளுள் மட்டுமல்ல உலகத்திலே சரித்திர காலத்துக்கு முற்பட்ட வேறநேக குழுவினருள்ளும் மிகப் பரவியிருந்ததொன்று என்பதற்குச் சான்றுகள் பலவுள. நாக வழிபாடு சம்பந்தமான அநேக குறிப்புக்களை **பண்டிதர் ந. சி. கந்தையாபிள்ளை** அவர்கள் எழுதிய **'பழந்தமிழர்'** என்ற நூலிற் காணலாம். அதன் சுருக்கத்தை மட்டும் இவ்விடத்திற் குறிப்பிடுதல் பொருத்தமுடையதாகவிருக்கும்:– "நாக வழிபாடு பகல் வழிபாடு போலவே உலகம் முழுமையிலும் வியாபகம் பெற்றிருந்தது. இவ் வழிபாட்டின் தொடக்கம் எவ்வகையினது என்று துணிதல் கூடவில்லை.[1] உலகின் பல பாகங்களில் கூட்டங்களாக வாழ்ந்த மக்கள் விலங்கு பறவை முதலியவைகளில் யாதோ ஒன்றைத் தமது குலக்குறியாகக் கொண்டனர். இதனை ஆங்கில மொழியில் 'Totem' என வழங்குவர். மயூரர், நாகர் லம்புக்கர்ணர், கருடர் முதலிய பெயர்கள் இதற்கு உதாரணமாகும். இக் குலங்களுக்குரிய விலங்குகளும், பறவைகளும் அவ்வம் மக்கட் கூட்டத்தினரால் புனிதமுடையனவாகக் கருதப்பட்டன; அவைகளின் உருவங்கள் கொடிகளினும் தீட்டப்பட்டன. ஆகவே ஒவ்வொரு கூட்டத்தினரும் ஒவ்வாரு கொடியுடையவர்களாயிருந்தனர்.

"ஆதி மக்கள், மொழியை ஓவிய முறையாக எழுதினர். கட்புலனாகும் பருப்பொருள்களை விளக்க, அவ்வப் பொருள்களின் வடிவங்கள் எழுதப்பட்டன. கட்புலனாகாத வீரம், கோபம், தந்திரம், அறிவு முதலியன போன்ற மனத் தோற்ற மளவிலுள்ள பொருள்களை விளக்க அவ்வக் குணங்களமைந்த உயிர்களின் வடிவங்கள் எழுதப்பட்டன. விவேகமின்மைக்கு ஈயின் உருவமும், விடா முயற்சிக்குத் தேனியின் உருவமும், வெற்றிக்குக் கருடனும் இன்னும் மற்றைக் குணாதிசயங்களுக்கு மற்றை உயிர்களின் உருவங்களும் அறிகுறிகளாக வழங்கி வந்தன.

பண்டை மக்கட் கூட்டத்தினர் ஒவ்வொருவரும் தம்மிடத்திற் காணப்பட்ட முக்கியதன்மை ஒன்றை விளக்க ஒவ்வோர் அடையாளமாகிய ஓவியத்தை வழங்கியிருக்கலாம். அவை பிற்காலத்தில் அம் மக்களால் வழிபாட்டுக்குரியனவும் ஆயின என்று கூறுதல் ஏற்றதாகத் தெரிகிறது. பாம்பு வணக்கத்தின் ஆரம்பமும் இதுவாயிருக்கலாம். இது ஆராயத்தக்கது."

---

1. ஆதி அநாகரிக மக்களுள் பாம்பு வழிபாடு பயத்தினால் எழுந்ததுபோலும். சத்தப்படாமல் நகர்ந்து போய்க் கள்ளனைப்போற் சதிமானஞ் செய்வதும், குப்பை கூளங்களுள், பொந்து சந்துகளுள் மறைந்து கிடந்து எவரும் காணுமுன்னரே அனர்த்தம் விளைப்பதும், தன் சத்துருவின் தோற்புரையில் கவ்வுதல் ஒன்றினால் அவனை மரணத்துக்கிடமாக்கி விடுகின்றதுமாகிய இத்தச் சொல்லரிய வல்லமையைப் பொருந்திய பிராணி, இயல்பாகவே சனங்களுடைய அச்சத்துக்கும் அதனால் உபாசனைக்கும் ஆதிதொட்டு இலக்காகிக்கொண்டது. — தமிழரின் பூர்வ சரித்திரமும் சமயமும் — **நல்லூர் சுவாமி ஞானப்பிரகாசர்.** பக். 58.

ஓல்ட்ஹாம்[1] என்னும் ஆசிரியர் நாக வணக்கத்தையும் ஞாயிற்று வணக்கத்தையும் ஆராய்ந்து சிறந்த நூலொன்று வெளியிட்டுள்ளார். டக்டர் வோகல் அவர்கள் சர்ப்ப வழிபாடு முதலியன பற்றி எழுதிய நூலிலும்[2] பிரான்சியர் பேராசியர் துப்ரே எழுதிய நூலிலும்[3] சரித்திரவாராய்ச்சி யறிஞர் திரு. எச். கிருஷ்ண சாஸ்திரி அவர்கள் எழுதிய 'தென்னிந்திய தெய்வ வடிவங்கள்' என்ற நூலிலும்[4] நாக வழிபாட்டின் தொன்மையுஞ் சிறப்பும் விரிவாக விவரிக்கப்பட்டுள்ளன. ஓல்ட்ஹாம் எழுதிய நூலின் முக்கிய குறிப்புக்களை மேற்கூறிய பண்டிதர் கந்தையாபிள்ளை அவர்களே அழகாக மொழிபெயர்த்துத் தந்துள்ளார்கள். அவற்றையும் சுருக்கமாகக் குறிப்பிட விரும்புகின்றேன்.

"இந்திய நாட்டில் படமுள்ள நாகம் பகல் வணக்கத்தோடு தொடர்பு பெற்று வருகின்றது. அது ஞாயிற்றினின்று தோன்றியவர்களெனச் சொல்லிக்கொள்ளும் மக்கட் கூட்டத்தினரின் குல இலச்சினையாகும். எங்கெங்கு பகல் வணக்கங் காணப்பட்டதோ அங்கெல்லாம் படமுடைய பாம்பு புனிதமுடையதாகக் கருதப்பட்டது. இந்தியாவிற் காணப்படுதல் போலவே ஞாயிற்றை வழிபடும் நாடுகளிலெல்லாம் நாகம் வழிபடப்பட்டது. சீனு, பேரு, ஆபிரிக்கா முதலிய நாடுகள் ஒன்றிலிருந்து ஒன்று மிகவும் தொலைவில் இருக்கின்றன. இந்நாடுகளின் இவ் வழிபாடுகள் மற்றைநாடுகளின் சம்பந்தமில்லாது தனித்துத் தோன்றின என்று கூறுதல் முடியாது. இவ் வணக்க முறை இங் நாடுகள் ஒன்றிற் காணப்படுவது போலவே மற்றை நாடுகளிலுங் காணப்படுகின்றது. ஆகவே ஞாயிற்றுக் குலத்தவர் என்று சொல்லிக்கொண்ட ஒரு குலத்தவர்களுடைய மத்தியிலிருந்தே இவ் வழிபாடுகள் பரந்து நாலுதிசைகளிலும் சென்றிருத்தல் வேண்டும்."

**உலகம் முழுமையிலும் நாகம் புனிதமுடையதாகக் கொள்ளப்பட்டது**

வரலாற்றுக்கால ஆரம்பத்தில் பாம்பு, பகல் வழிபாடுகள் நன்குக வளர்ச்சி அடைந்திருந்தன. மிகப் பழங்காலத்தில் யூபிராதசுக்கும் சிந்து நதிக்கும் இடையில் இவ்வழிபாடுகள் ஓங்கியிருந்தன. பபிலோனியாவிலும் அதனை அடுத்த நாடுகளிலும் பண்டை நாட்களில் ஞாயிற்று, பாம்பு வழிபாடுகளே இருந்தன. பாபிலோன் மக்களின் ஆதித் தெய்வங்களுள் ஒன்று ஈஆ; இது ஏழுதலை நாகவடிவுடையது. சூரியனும் நாகமும் பினீசியரால் வணங்கப்பட்டன. கிரேக்கர் ஞாயிற்றையும் பாம்பையும் வணங்கினார்கள். எகிப்தில் ஆதிகாலமுதல் பகலும் படமுள்ள பாம்பும் வணங்கப்பட்டு வந்தன.[5] மஞ்சூரிய மக்களின் பாம்புத் தெய்வங்கள் இன்றும் ஆறுகளுக்கும் மழைக்கும் அதிபதிகள். யப்பானியர் ஐதிகத்தின்படி மலைத் தெய்வங்கள் பாம்பு வடிவங்களை எடுத்துள்ளன. இந் நாடுகளில் ஞாயிற்று பாமபு வழிபாட்டு முறைகள் இந்தியாவிற் காணப்படுவன போன்றன. சேரநாடு நாகர்நாடு எனப்படும். சாரர என்பதே சேர என வந்தது. இன்றும் ஒவ்வொரு நாயர் சாதியினரின் கொல்லையிலும் நாக தெய்வங்கள் வழிபடப்படுகின்றன.

1. *The Sun and the Serpent by C. F. Oldham Ch. X—XI*
2. *Indian Serpent-Lore or The Nagas in Hindu Legend and Art by J. P. H. Vogel, Ph.D.*
3. *Iconography of Southern India by G. Jouveau Dubreuil.*
4. *South Indian Images of Gods and Goddesses by H. Krishna Sastri.*
5. *The lotus and hooded snakes were in Egypt, which make it probable that the religious symbols of both the countries originally came from the Hindus—The Symbolic Language of Ancient Art and Mythology. p. —109.*

**கிறித்துவ ஆண்டின் முற்பகுதிகளிற் சீன யாத்திரிகர்கள் இந்தியாவுக்குச் செல்லும் வழியிற் பாம்புத் தெய்வங்கள் எல்லா ஆறுகளையும் குளங்களையும் ஆள்வதைக் கண்டனர்.** திபெத்தில் இன்றும் குளங்களும், நீரூற்றுக்களும் பாம்புத் தெய்வங்களால் ஆளப்படுகின்றன. பேருவில் கசமார்க்கா என்னுமிடத்தில் பாம்பு ஆலயத்திற் பாம்பு வடிவக் கல் இருந்தது.

**பாம்பு வழிபாடு இந்தியாவில் ஆரம்பித்ததென ஆராய்ச்சியாளர் துணிவர்.**[1]

### நாக வழிபாடு நாகருடையது

நாக வகுப்பினரே நாக வழிபாட்டுக்கு ஆஸ்பதமா யிருந்தாரென எண்ணுவது ஏற்புடைத்துப் போலும்.[2] "பிற்காலத்தனவான புராண காவியங்கள் நாகர்களைப் பாதி பாம்பும் பாதி நரரூபமுமாகச் சித்திரிக்கின்றமை 'நாகர்' என்ற குலப் பெயருக்கு உற்பத்தி கொடுத்தோதும்படி உண்டாக்கிய கற்பனையேயன்றி உண்மையன்று. தக்ஷகன் எனும் பாம்பு ஒரு மானுட கன்னிகையைப் புணர்ந்து பெற்றவர்களை நாகர்கள் என்ற பௌராணிகர் கூற்றும் அவ்வாறேயாம். நாக வழிபாடு உள்ளோராயும், நாகத்தைத் தங் கொடியாகக் கொண்டோராயும் இருந்தமைதான் நாகருக்கு இப்பெயர் வருதற்குக் காரணமாயிற்று. இப்போது சென்னை நூதனசாலையில் வைத்திருக்கும் அமராவதிச் சித்திரங்களிற் கண்ட நாகரின் தலைமேல் நாகபடம் போன்ற ஒருவகைக் குடை கவிந்து நிற்பதைக் கவனிக்கலாம். உள்ளபடி இக்குலத்தார் இவ்வகையான ஓர் ஆபரணம் உள்ளோராய் இருந்தமை பொருத்தமாகாததன்று. இவர் உச்சியிற் கட்டும் கொண்டையும் மண்டலமிட்டுக் கிடக்கும் நாகத்தினுக்கு ஓர் சின்னமே என்ப.

**"நாகர் இந்தியாவிலும் இலங்கையிலும் பரந்த காலத்தில் நாகவழிபாடும் மிகப் பரவுவதாயிற்று.** இவர் முக்கியமாய் நிலையூன்றிய பிரதேசமாகிய மலையாளத்திலேதான் இன்றைக்கும் அது உறைத்து நிற்கின்றது. மலையாளத்துச் சேரகுலத்தவர் இந் நாகரின் பிதிர்வழியே போலும். இவருள், பெண்கள் இன்றைக்கும் நாக பாம்பின் வடிவமான ஆபரணங்களைக் காதிலுங் கையிலும் அணியும் வழக்கத்தை மிகப் போற்றுவாராகின்றனர். வட இந்தியாவிலும் ராகிபூர்ணிமை என்னுந் தினத்தில், பாம்பு கடிக்கு ஓர் காவலாகராகி என்றழைக்கப்படும் மணிக்காப்புக்களை ஒருவர் ஒருவருக்கு அனுப்பும் வழக்கமொன்றிருக்கிறது. இவ்வழக்கமும் நாகவழிபாட்டோடு சம்பந்தப்பட்டதே யென்பர் மெஸ். தத்தர். யாழ்ப்பாணத்தில் நாட்டுப்புறங்களில் வழங்கும் நாகபடம் என்னும் கால்விரல் ஆபரணத்துக்கும் காதாபரணத்துக்கும் உற்பத்தி யாது? நாகபத்தர்களது வழக்கந்தானேயோ? தென்னிந்தியாவில் குளம் நதிக்கரைகளிலும் முக்கியமாய் அரசமரத்தடியிலும் நாகபாம்பின் வடிவங் கொத்தப்பட்

1. *The mythical serpent of the Hindus too is generally represented with five heads to signify perhaps the five senses, but still it is the hooded snake, which we believe to be a native of India, and consequently to have been originally employed as a religious symbol in the country from whence the Egyptians and Phonecians probably borrowed it and transmitted it to the Greeks and Romans upon whose bracelets and other symbolic ornaments we frequeutly find it.—Symbolical Language of Ancient Art Mythology.* p. 16.

2. 'தமிழரின் பூர்வ சரித்திரமும் சமயமும்' —சுவாமி ஞானப்பிரகாசர்

டுள்ள கற்களைப் பலவிடங்களிற் காண லாம். இவைகளுட் சில வெகுகாலத்தன.'' நாகவழிபாடு ஞாயிறு, திங்கள் முதலியவற் றின் வழிபாட்டுக்கும் முற்பட்டதாயிருக்கக் கூடும் எனவும், பிள்ளைப்பேறில்லாதவர் கள் நாகப் பிரதிஷ்டை செய்வதாற் பிள்ளை களைப் பெறலாம் என்ற நம்பிக்கை தமிழகத் தில் நன்கு வேரூன்றியிருந்தது எனவும் திரு. **ஏச். கிருஷ்ண சாஸ்திரி** அவர்கள் தாம் எழுதிய நூலிற்[1] குறிப்பிட்டுள் ளார்கள்.

இனி, நம் சைவ சமயத்தை நோக்கு மிடத்துச் சிவபெருமான் சர்ப்பத்தை ஆபரணமாக அணிந்துள்ளார் என்று கூறப்படுகின்றது. இதன் கருத்து யாது?

''குண்டலினி சத்தி பாம்பு வடிவா யிருக்கிற தென்று உருவகப்படுத்துகிற படியாலும், அது அவர்க்குப் பரிக் கிரக சத்தியாதலுண்மையானும், அத னுடைய விரிவு சுருக்கங்களே பிரபஞ்ச தோற்ற ஒடுக்கங்க ளாகையானும், அதனையுடையராயிருத்தலாற் சகத்திற்கு நிமித்த காரணர் தாமே என்பதையும், இஃதன்றி, 'இருத்தியே நாகரூபம்' எனக் கூறலால், இருத்தி என்பதற்குப் பொருள் நல்ல செல்வம், ஐஸ்வரியம் அதிகப்படல், நிறைவு, மேலாந்தன்மை என்பனவாக இவைகளையுடையவர் தாமே என்பதையும் ஆன்மாக்களுக்கு அருளே தனுவாக எடுத்து அருள் செய் வோர் தாமே என்பதையும் பரம கருணா கர பரஞ்சோதிப் பிழம்பாகிய பரசிவம், சிற்றறிவினர்களாகிய ஆன்மாக்கட்கு அறிவித்து உய்விப்பான்கொண்ட திருச் சின்னங்களேயாம்'' என்று சைவசித்தாந் தந்த சரபம் மேலைப்புலோலி **நா. கதிரை வேற்பிள்ளை** அவர்கள் '**சிவக்ஷேத்திராலய மகோற்சவ விளக்கம்**' எனும் நூலில் விளக்கிக் காட்டியுள்ளார்கள்.

---

பூதமொடு பழகிவளர் இந்திரிய மாம்பேய்கள்
புந்திமுத லானபேய்கள்
போராடு கோபாதி ராக்ஷசப் பேய்களென்
போதத்தை ஊடழித்து
வேதனை வளர்த்திடச் சதுர்வேத வஞ்சன்
விதித்தானிவ் வல்லலெல்லாம்
வீழும் படிக்குனது மௌனமந் திராதிக்ய
வித்தையை வியந்தருள்வையோ
நாதவடி வாகிய மகாமந்திர ரூபியே
நாதாந்த வெட்டவெளியே
நம்சமய மானபயிர் தழையவரு மேகமே
ஞானவா னந்தமயிலே
வாதமிடு பரசமயம் யாவுக்கும் உணர்வரிய
மகிமைபெறு பெரியபொருளே
வரைராச னுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெணுமையே,

— தாயுமானசுவாமிகள்.

1. *South Indian Images of Gods and Goddesses—Nagas H. Krishna Sastri. P. 248—251.*

# நயினுதீவு

## நந்தாப் புகழ்வாய்ந்த நயினைத்தலச் சிறப்பு

நீருற வளைந்து புரண்டெழுந் திரைந்து நிறைந்திடும் பணைத்திரை விரித்துக்
காருற விடங்கொண் டுலகெலா மீன்ற கருணைநா யகிதிருக் கோலத்
தேருற விளங்கு முரகமோத் திருந்த விருங்கட னடுவணென் டிசையும்
பாருடன் புகழுந் திகழ்சிகா மணிபோற் படிந்ததந் நயினையம் பதியே.

பவக்கடற் கிடைவிழ்ந் தலமரு வோரைப் பாதுகாத் தின்பமே பயக்குஞ்
சிவத்திடைப் படரும் பச்சிளங் கொடிதன் றிருப்பதத் துணைமல ரெனவே
யுவப்புறத் தனைச்சூ ழாழிமே ஞவா யொழிதர மறலிநோ யுற்றுத்
தவிப்பவ ரயர்கைக் குறுபுணை யுமானத் தங்குமந் நயினையாந் தலமே.

— நயினை மான்மியம்.

யாழ்ப்பாணக் குடாநாடும் அதனை அடுத்துள்ள ஒவ்வொரு சிறு தீவுகளும் புராதனப் பெருமை வாய்ந்தனவாகக் காணப்படுகின்றன. லைடன்தீவு, காரை தீவு, எழுவைதீவு, அனலைதீவு, நயினு தீவு, புங்குடுதீவு, நெடுந்தீவு எனும் சப்த தீவுகளுக்கு நடுநாயகமாக அமைந் துள்ளது நயினுதீவு. இது யாழ்ப்பாணத்தி லிருந்து நெடுந்தீவுக்குச் செல்லுங் கடற் பாதையில் தென்மேற்குத் திசையில் 20 மைல் தூரத்தில் உள்ளது. நயினுதீவுக்கு வடக்கே 3 மைல் தூரத்திலுள்ளது அனலை தீவு. நயினுதீவு ஏறக்குறைய 4 மைல் சுற்றளவுள்ளது. மூன்று மைல் நீளமும் ஒரு மைல் அகலமும் உள்ளது. இது சதுர வடிவமுடையது. கடுகு சிறிதேனினும் காரம் பெரிதென்ற முதுமொழிக்கிணங்க, நயினுதீவு அளவாற் சிறியதேனினும், தொல்புகழாற் றலைசிறந்த தீவாக விளங்கு கின்றது. மேனாட்டு நாகரிக அலைகளால் எற்றுண்டு போகாது சைவத்தையுந் தமிழையும் பேணி வளர்த்து வந்தவர்கள் தீவுப்பகுதிச் சைவ நன்மக்களே எனக் கூறலாம்.

### தலத்தின் மறுபெயர்கள்

சரித்திரகாலத்திற்கு முன்தொட்டே பல சிறப்புப் பெயர்களால் அழைக்கப்பட்டு வந்த பெரும் புகழுடையது நயினுதீவு. இத் தீவின் பல்வேறு பெயர்களை அறிந்து கொள்வது அதன் வரலாற்றை அறிந்து கொள்ளுதலில் ஒரு பாகமாகும். இத் தலத் திற்கு நாகதிவயின, நாகதிவு அல்லது நாகத்திவு, நயினர்திவு, நாகநயினர்திவு, மணிநாகதிவு, மணிபல்லவத்திவு, மணித் திவு, பிராமணத்திவு, ஹார்லெம் சம்புத் திவு, நரித்திவு, நாகேஸ்வரம், நாகேச்சரம் முதலிய பல பெயர்கள் உள்ளன.

### தலத்தின் தொன்மை

இலங்கையில் விசயன் வந்து சேர்வ தற்குப் பல்லாயிரம் ஆண்டுகட்கு

முன்னரே நாகரிக முதிர்ச்சியுள்ள நாகர் வாழ்ந்து வந்தனர் என முன்னர்க் குறிப்பிட்டுள்ளாம். இந்த நாகர்கள் வாழ்ந்தனர் என்ற பேருண்மையினை இன்றும் நினைவுறுத்துவது நயினாதீவு, நாகர்கோயில் முதலிய தொல்பதிகளாகும். இப்பொழுதுள்ள நயினாதீவின் விஸ்திரணத்தைப் பார்க்கிலும் பண்டொருஞான் றிருந்த அதன் விஸ்திரணம் பன்மடங்கு கூடியது என யூகிக்க இடமுண்டு. இப்போது குடாநாடாகவிருக்கும் யாழ்ப்பாணம் முன்னொருகாலத்தில், அதாவது கிறித்துவுக்கு அநேகவாயிரம் ஆண்டுகட்கு முன்னரே இரண்டு தீவுகளாக இருந்தது. மேற்கே நாகதிவம், மணிநாகதிவம், மணிபுரம், மணிபல்லம் என்னும் நாமங்களால் வழங்கப்பட்ட பெருந்தீவும், கிழக்கே எருமை முல்லைத்தீவு, எருமைதீவு என்று பெயர்பெற்ற சிறு தீவும் ஆக இருந்தது. காலந்தோறும் பூகம்பங்களினாலும் பிரளயங்களினாலும் அழிக்கப்பட்டு மேற்கே ஒன்றாயிருந்த பெருந்திவகம் பல தீவுகளாகப் பிரிக்கப்பட்டது சரித்திரகாலத்துக்குள்ளே, அதாவது கி. மு. மூன்றாம் நூற்றாண்டிலே திஸ்ஸன் என்னும் நாகவரசன் கல்யாணியில் அரசாண்ட காலத்திற் சம்பவித்த கடற்கோளினால் இலங்கையின் மேற்குக் கரையில் ஒரு பெரும்பாகம் கடல்வாய்ப்பட்டபோது இத்திவும் பிரிக்கப்பட்டிருக்கலாம்.

'' காரைதீவு, வேலணை, மண்டைதீவு, புங்குடுதீவு, அனலைதீவு, நயினாதீவு, நெடுந்தீவு முதலிய தீவுகளும் வலிகாமமும் அப்பெருந் தீவகத்தின் பகுதிகளேயாம். அவ்வாறே கிழக்கே ஒன்றாகவிருந்த சிறுதீவகம், களப்புக் கடலால் வடமராட்சி, தென்மராட்சி, பச்சிலைப் பள்ளியென்னும் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டது'' என்று முதலியார் இராசநாயகம் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.1

எனவே வட இலங்கையை யடுத்துள்ள சிறு தீவுகளின் இப்போதைய நிலப்பரப்பின் அளவை ஆதாரமாகக் கொண்டு பழந்தமிழ் நூல்களிலும் சிங்கள நூல்களிலுங் கூறப்பட்டுள்ள நாடுகளின் பண்டைக்கால நிலைமையை வரையறுத்துக் கூறுவது இயலாததொன்றாகும். இதனாற்றான் நாகதிவு யாண்டுளது என்பது பற்றி இதுவரை பலவகைப்பட்ட கருத்துக்கள் கிளம்பியுள்ளன.

### நாகதீவு

நயினாதிவுக்கு இடப்பட்ட பழைய பெயர் நாகதிவு அல்லது நாகத்திவு என்று கோடலே பொருத்தமாகத் தெரிகின்றது. பிறிதொரு காலத்தில் வட இலங்கை முழுவதுமே நாகதிவு என்றழைக்கப்படலாயிற்று. இப் பெயரே பின்னர் இலங்கை முழுவதிற்கும் இடப்படலாயிற்று.

''இதன் பழைய பெயர் நாகதீபம். பகவான் புத்தர் தரிசித்த காலத்தி லுள்ள நாமம் அதுவே. அக்காரணம் பற்றியே பௌத்தர்கள் இன்றும் அதனை நாகதீபம் என்றே அழைக்கின்றனர். மணிமேகலை விஜயஞ் செய்தபோது அதன் பெயர் மணிபல்லவமாக இருந்ததாய் அறிகின்றோம். சிவபெருமானுக்குத் தில்லை, அண்ணாமலை முதலிய பஞ்சலிங்க ஸ்தலங்களை அமைத்த முறையில், பராசக்திக்குக் குண்டலினியோகத்தி லுள்ள ஆறு ஆதாரங்களை உருவகப்படுத்தி அவற்றை விளக்கிநிற்க ஆறு ஸ்தலங்களை அமைத்து நம் ஆன்றோர்கள் நயினாதிவை மணிபூரகமாகப் பாவித்து அதற்கு மணிபிடகம் என்று திருநாமஞ் சூட்டியதாகவும் அறிகின்றோம். அதுவுமன்றி சக்திபீடங்கள் அறுபத்து நான்கனுள் இது ஒன்றே இலங்கையில் இருப்பதுங் குறிப்பிடவேண்டிய விஷயமாகும்.

1. யாழ்ப்பாணச் சரித்திரம். -- பக். 1 - 2.

"மாந்தரின் வருகையால் பரவிய புத்தமதத் தொடர்பில், தற்போதுள்ள வடமாகாண எல்லேக்குள் அடங்கிய பிரதேசம் முழுவதுமே நாகதீபமென அழைக்கப்பட்டது. இலங்கையைக் கொழும்பெனவும், இங்கிலாந்தை லண்டன் எனவும், ஈழத்தை யாழ்ப்பாண மெனவும் அழைக்கும் முறையில் தோன்றியதாகும் பிந்திய நாகதீபம் என்னும் பெயர். இந்த உண்மையை யறியாத ஆராய்ச்சியாளர் இன்னும் பழைய நாகதீபத்தைத் தேடி அலேகின்றனர்." என்று **ஆத்மஜோதி** ஆசிரியர் **திரு. க. இராமச்சந்திரன்** அவர்கள் கூறியுள்ளார்கள்.[1]

யாழ்ப்பாணக்குடாநாடு முழுவதுமே நாகதீபம் அல்லது மணிபல்லவம் என்று கருதினுர்கள் **முதலியார் இராசநாயகம்** அவர்கள். "நயினுதிவு மட்டும் பதினேந்தாம் நூற்ருண்டில் நாகதிவு என அழைக்கப்பட்டபோதிலும், நாகர்கோயிலுக்கும் அத்திவுக்கும் இடைப்பட்ட நம் குடாநாடு முழுவதும் அதன்முன் பல நூருண்டுகளாய் நாகதிவுப் பெயர் கொண்டிருந்தமை மறுக்கப்படுவதன்று. சிங்கள மகாவமிச நூல் இப் பெயரையே பலவிடங்களில் யாழ்ப்பாணத்துக்குச் சூட்டுகின்றது" என்று கூறுகின்ருர்கள் நல்லூர் **சுவாமி ஞானப்பிரகாசர்** அவர்கள்.[2] நாகதிபம் என்ற கட்டுரையினே வெளியிட்ட **முதலியார் ஏ. எம். குணசேகர** அவர்கள் புத்தளம், சலாபம் ஆகிய கரையோரப் பகுதிகளும் அவற்றையடுத்துள்ள திவும் நாகதிவு என்றழைக்கப்பட்டதெனப் பிறிதொரு கொள்கையினே வெளியிட்டுள்ளார்.[3] இதற்கு ஆதாரமாக **இரசவாகினி** எனும் பாளிமொழி நூலிலும் **சத்தர்மாலங்காரய** என்ற சிங்கள இலக்கியத்திலும் வரும் நாக உபாசிகையின் கதையை எடுத்துக் காட்டியுள்ளார். **'நாகதீபமும் யாழ்ப்பாணத்திலுள்ள பௌத்த சின்னங்களும்'** என்ற கட்டுரையில் டக்டர் **போல் பீரிஸ்** அவர்கள் நாகர்கோவில் தொடக்கம் நயினுர்திவு வரையுள்ள யாழ்ப்பாணக் குடாநாடு அல்லது தமிழ்ப்பட்டினம் முழுவதுமே நாகதிபம் என்றழைக்கப்பட்ட தெனவும் பிற்காலத்தில் நாகதிவயின என **'நம பொத்த'** எனும் நூலிற் கூறப்பட்டிருப்பது இப்பொழுதுள்ள நயினுதிவையே குறிக்கும் எனவுங் கூறியுள்ளார்கள்.[4]

இனி வல்லிபுரக்கோயிற் பொற்சாசனத்தைப்பற்றி எழுதிய தொல்பொருட் பகுதி அதிபர் **டக்டர் பரணவித்தான** அவர்கள், "நாகதிபம் எங்கேயுள்ளது என்பதைப்பற்றி ஆராய்ச்சியறிஞர் சந்தேகங் கொள்வதற்கிடமின்றிச் செய்துவிட்டது இச்சாசனம். அதன்படி யாழ்ப்பாணமே நாகதிவு என வழங்கப்பட்டது" எனக் குறிப்பிட்டுள்ளார்கள்.[5] இக் கொள்கையினேயே இலங்கையின் சரித்திரச் சுருக்கம் எழுதிய **எச். டபிள்யு. கொட்றிங்டன்**[6] அவர்களும் சூலவம்சத்தை மொழி பெயர்த்த **கைகர்** அவர்களும் ஏற்றுக் கொண்டனர்.

---

1. ஆத்மஜோதி — சோதி 3; சுடர் 5. பக். 148 – 149
2. யாழ்ப்பாண வைபவ விமர்சனம். — பக். 22
3. *Nagadipa by Mudaliyar A. M. Gunasekera—Royal Asiatic Society* (C.B.) *Ceylon Notes and Queries p. CXXI—CXXIV.*
4. *Nagadipa & Buddhist Remains in Jaffna.—by Dr. P. E. Peiris, R. A. S. C. B. Vol. XXVI — No. 70 Part 1 (1917), Vol. XXVIII—No.* 72 (1919)
5. *Epigraphia Zeylanica Vol. IV Part 5—Vallipuram Gold Plate Inscription of the Reign of Vasabha pp. 229—237.*
6. *A Short History of Ceylon by H. W. Codrington. P. 8.*

வல்லிபுரக்கோயிற் பொற்சாசனம் இது :

1. ஸித$_4$ மஹிரஜ வஹயஹ ரஜெஹி அமெதெ
2. இஸிகி$_3$ ரய நகதி$_3$வ புஜமெனி
3. ப$_3$த$_3$கர - அதனெஹி$^3$ பியகு$^3$கதிஸ
4. விஹர கரிதெ

(இதிற் குறிக்கப்பட்டுள்ள எண்கள் சமஸ்கிருத அக்ஷரவரிசை எண்கள் எடுத்தலோசையுடன் உச்சரிக்கப்படல் வேண்டும்.

இதன்பொருள்: "வாசப அரசன் காலத்தில் நாகதிவை ஆட்சிபுரிந்த அமத்தன் (அமைச்சன்) இஸிகிரயன் என்பவன் பதகர அ(த்)தனையில் பியகுகதிச விகாரையைக் கட்டினான்" என்பது. பிக்கு ராகுலரின் கட்டுரையைத் தமிழில் மொழி பெயர்த்த நண்பர் 'Badakra Atana' என ஆங்கில எழுத்துக்களிலிருந்த உருவத்தை 'படகர ஆற்றுன்' எனத் தவருகப் பெயர்த்துவிட்டார். இதன் சரியான உச்சரிப்பு 'பதகர அதன'. 'பதகர அதன' எனக் குறிக்கப்பட்ட இடம் எத்திசையிலுள்ளதென்பதைத் திடப்படுத்துவதற்குச் சரித்திர ஆராய்ச்சியாளர்க்கு ஓர் அரிய சந்தர்ப்பம் எனப் பிக்கு ராகுலர் கூறியிருந்தார். ஒருவாரத்தின் பின்னர் நல்லூர் **சுவாமி ஞானப்பிரகாசர்** இதற்குச் சரியான ஒரு பொருள் கொடுத்திருந்தார். "வடகரை என்ற தமிழ்ச்சொல்லின் திரிபே குறித்த சாசனத்தில் பதகர எனக் குறிக்கப்பட்டிருத்தல் வேண்டும். அதன என்னும் சொல் கூடியிருப்பதால் வடகரை நாடு எனப் பொருள்கொள்வது சாலும். வல்லிபுரக்கோயிலில் இச்சாசனங் காணப்பட்டதெனின் அப்பகுதியை விளக்கும் வடகரைநாடு என்ற பொருள் மிகவும் பொருத்தமுடையது. இப் பொற்சாசனத்திலிருந்தும் யாழ்ப்பாணத்தில் அக்காலத்திலே தமிழ்மொழிதான் பேசப்பட்டுவந்ததென்பது பெறப்படுகின்றது.[1]

இனி மகியங்கனைக்கருகே புராதன தாதுகர்ப்பம் ஒன்றிருக்கின்றது. இவ்விடமே நாகதீபம் என்றழைக்கப்பட்டதென்பர் பிறிதொரு சாரார். 'மகியங்கனம், நாகதிபம்' என்ற பாலிச்சூத்திரத்தில் மகியங்கனைக்கு அடுத்தபடியாக நாகதீபம் குறிப்பிடப்பட்டிருப்பதால் இக்கருத்துப் பரவியிருக்கலாம். மகாவமிசத்தில் வரும் நாகமன்னர்களின் கதையைக் கொண்டு களனியே நாகதிபம் எனக் கருதுகின்றனர் பிறிதொரு சாரார். 'சத்தர்மாலங்காரய' என்ற சிங்கள இலக்கியத்தில் வரும் நாக உபாசிகையின் கதையை ஆதாரமாகக்கொண்டு இவ்விடம் தெல்வத்தையிலுள்ள தொட்டகமுவை விகாரையேயெனக் கூறுவாருமுளர். மாத்தறைக்கருகே நாகம் என்ற சொல் தழுவிய இடப்பெயர்கள் பரக்கக் காணப்படுதலால், அதுவே நாகதீபம் என்பாருமுளர். பாம்பன்தீவை அல்லது மன்னார்தீவை நாகதீபம் என்பாருமுளர். இக் கருத்துக்கள் எவ்விதமாயினும் யாழ்ப்பாணமே நாகதீபம் என்பது சரித்திரச் சான்றுகளின் மூலமாக அறியக்கிடக்கின்றது என்று உதவித் தொல்பொருள் அதிபர் **திரு. எஸ். கருணாரத்ன** அவர்கள் 'தினமின' பொஸன் மலரில் (11-6-57) குறிப்பிட்டுள்ளார். "மணிபல்லவமேனும் நாகதீபமேனும் யாழ்ப்பாணக்குடாநாடல்ல என்பது வெளிப்படை" என்ற கருத்துப்பட நயினாதீவு **திரு. செல்லையா தில்லையம்பலம்** அவர்கள் **'நற்றவம் மிக்க நயினாதீவு'** என்னுங் கட்டுரையில் எழுதியுள்ளார்கள்.[2]

1. வல்லிபுரக்கோயிற் பொற்சாசனம் — 'தமிழ்மாணவன்' வரைவது — இக் கட்டுரையை (ஈழகேசரி — 6-11-38) எழுதியவர் இலங்கைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேராசிரியர் டக்டர் க. கணபதிப்பிள்ளை அவர்கள் போலும்.

2. ஈழகேசரி 14-3-37—பக் 13 பார்க்க. இக்கட்டுரையாசிரியர், 1928ஆம் ஆண்டு 'ஒற்றுமை' எனும் பத்திரிகையின் ஜூன், ஜூலை இதழில் *V. P.* எனும் பெரியார் நாகரைப்பற்றி எழுதிய ஆராய்ச்சிக் கட்டுரையின் முக்கிய பாகத்தையும் எடுத்துக் காட்டியிருத்தல் பாராட்டத்தக்கதொன்று.

### வெடியரசன் வரலாறு[1]

தென்னாட்டிற் கற்புக்கரசி கண்ணகி வாழ்ந்த காலத்தில் தீவுப் பகுதிகளை வெடியரசன் எனும் அரசன் ஆண்டு வந்தான் என வெடியரசன் நாடகம் கூறுகின்றது. இந்த நாடகம் நவாலியூர் **வைரவி இராமு** என்பவரால் இயற்றப் பெற்றது. இவர் வாழ்ந்த காலம் 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியும் 19ஆம் நூற்றாண்டின் முற்பகுதியும் எனலாம். இந் நாடகம் இயற்றி அரங்கேற்றப் பெற்ற காலம் 1844ஆம் ஆண்டளவிலென இந்நூலின் முகவுரையிற் குறிப்பிட்டிருக்கின்றது. ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியுடைய வலது தொடையில் உதித்த பிள்ளை தான் குகனென்றும், அவனுக்கு வெடியரசன் என்னும் பட்டத்தையும் கருடக் கொடியையும் **நீலகேசி** யென்னும் பெண்ணையும் கொடுத்து அவனுக்குச் சகோதரர் நால்வரையும் சிருஷ்டித்துக் கொடுத்து நாக நகரை அரசாளும்படி வைத்தார் என்று இந் நாடக நூலாசிரியர் குறிப்பிட்டுள்ளார். காருக்தி புதல்வனான மீகாமன் சோழவரசனுடைய கட்டளைப்படி, மாநாய்கன் எனும் வணிகேசன் மகள் கண்ணகியின் பாதச்சிலம்பு செய்தற்கேற்ற நாகரத்தினம் வாங்க, நயினாதீவு என்று சொல்லப்படும் நாகதீவை நோக்கி வந்தான். அத் தீவு வெடியரசனுடைய ஆளுகைக்குட்பட்டது. வெடியரசன் நெடுந்தீவிற் கோட்டை கட்டி தீவுப்பகுதியை ஆண்டுவந்தான். வெடியரசனின் மாலுமி, மீகாமனையும் சேனையையும்கரையிலிறங்காதபடி தடுத்து, அவன் வரவை வெடியரசனுக்கு அறிவிக்க, அவன் தன்சமுகத்துக்கு மீகாமனை அழைக்கிறான். அவன் வந்து நாகரத்தினம் கேட்க,வெடியரசன் வெதண்டு மீகாமனைப் போருக்கழைக்கிறான். பின்னர் மீகாமன் வெடியரசனைச் சிறைசெய்கிறான். இதற்கிடையில் நீலகேசி தன் மைத்துனன் **வீரநாராயணதேவனுக்குச்** செய்தி சொல்லியனுப்ப, அவன் தன் சேனைகளுடன் போர்க்களம் ஏகச் சித்தம் செய்கிறான்.

மீகாமன் நாகரத்தினம் கிடைக்குமோ கிடையாதோ என்று பிராமணன் ஒருவரிடம் சாத்திரங்கேட்கப் பின்னவன் வெடியரசனைக்கொண்டு அரவத்திடம் நாகரத்தினம் கேட்பித்தால் கிடைக்கும் எனக் கூறுகிறான். மீகாமன் அப்படியே செய்து நாகரத்தினத்தைப் பெறுகிறான்.

வீரநாராயணன் வந்து மீகாமனைப் போருக்கழைக்கிறான். இருவரும் போர் புரிகிறார்கள். வீரநாராயணன் மீகாமனை வெட்டுகிறான். மீகாமன் குற்றுயிராய் விழும்போது 'கண்ணகையே' என்று கதறுகிறான். கலைமுனிவன் களரிமீது வந்து உதிக்கிறான். மீகாமனும் உயிர் பெற்றெழுகிறான். கலைமுனிவன் ஒரு வேலாயுதத்தை மீகாமன் கையிற் கொடுக்கிறான். மீகாமன் அவ்வேலாயுதத்தால் வீரநாராயணனை மடியச் செய்கிறான்.

வெடியரசனின் ஏனைய சகோதரர் **விளங்கு தேவன், போர்வீரகண்டன், ஏரிலங்குருவன்** ஆகிய மூவரும் தத்தம் சேனையுடன் வருகின்றனர். போர் நடக்கிறது. மீகாமன் தோற்று அஞ்சலியஸ்தனாகி நிற்கிறான். அவனை வெடியரசன் முன்கொண்டு ஏகினார்கள். மீகாமன் கண்ணகைக்கு நாகரத்தினம் வாங்கும் பொருட்டு சோழவரசன் அனுப்பிய தூதனேயல்லாது யுத்தஞ் செய்யக் கரவாக வந்தவன் அல்லன். ஆகவே அவனை ஒன்றுஞ் செய்யாமல் நாகரத்தினத்தைக் கொடுத்து விட்டுவிடுங்கள்" என வெடியரசன் கட்டளையிடுகிறான். தம்பிமார்களும் அப்படியே செய்கிறார்கள். மீகாமன் நாகரத்தினத்தைப் பெற்றுக்கொண்டு

1. ஈழத்தில் இயற்றப்பெற்ற நாடகங்கள் — வெடியரசன் நாடகம் — வெள்ளவத்தை மு. இராமலிங்கம் — இந்துசாதனம் 4-10-49.

சோழதேசஞ் செல்ல, வெடியரசனும் தம்பிமாரும் வீரநாராயணனின் ஈமக்கடன்களை முடித்துக்கொண்டு தத்தம் இருப்பிடம் ஏகுகிறார்கள். இது செவிவழி வருஞ் செய்தியாதலின் இதனைச் சிறிது மாற்றியும் கூட்டியும் பல கதைகள் முளைத்துள்ளன. இவ்வரலாற்றினையே,

> "நசையாத நாகதீவில் நாகத்தின் மணிவாங்கக்
> கசிவான மனதுடனே கடுகவுமை யழைத்
> தோங்காண்"

எனக் **கண்ணகி வழக்குரைகாதை**[1] அடிகள் குறிப்பிடுகின்றன.

கடல்சூழ் இலங்கைக் கயவாகு மன்னன் அரசாண்ட காலத்தில் நிகழ்ந்த கண்ணகியின் வரலாற்றுடன் சம்பந்தப்பட்ட கதையொன்றினைப் பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர் நாடகமாக இயற்றுமிடத்து, தாம் செவிவழிக் கேட்டு வந்த செய்தியைக்கொண்டே இயற்றினாராதல் வேண்டும். இவர் வாழ்ந்த காலத்தில் நாகதிவு நயினாதிவு என்றே வழங்கப்பட்டதென்பதற் கையமில்லை. இதுவும் ஆராயத்தக்கது.

இதுவரை எடுத்துக்காட்டியவற்றை நோக்குமிடத்து நாகதிபம் எது என்பது பற்றித் தீர்மானிப்பது இலகுவான செயலன்று என்பது புலனாகும். புத்தர்பெருமான் தரிசித்த பதினாறு புனித தலங்களைக் குறிப்பிடுஞ் சூத்திரத்தில் மகியங்கனை, ஸ்ரீபாதம், களனி எனத் தலங்களின் பெயர்களே குறிப்பிடப்பட்டிருப்பதால் நாகதிவு என்பது ஒரு சிறு இடமாக இருந்திருக்கவேண்டுமேயன்றி, குடாநாடு முழுவதையுங் கருதிய பெயராகக் கொள்வது பொருத்தமற்றதாகத் தெரிகிறது. ஆகவே நயினாதிவுக்கு முதற்கண் வழங்கிய பெயரே பின்னர் குடாநாடு முழுவதற்கும் வழங்கப்படலாயிற்று என்ற கொள்கை வலியுறுகின்றது. எனினும் இது நன்கு ஆராயப்படவேண்டியதொன்றாகும்.

கல்வியென்னும் பல்கடலில் விழ்ந்த மக்கள் இவ்வாறு நாகதிபத்தைப்பற்றி ஆராய்ந்து முடிவுகட்டாதிருந்தபோதிலும் பௌத்தப் பொதுமக்களுஞ் சைவப் பொதுமக்களும் நயினாதிவுதான் பௌத்தர் தரிசித்த புனித தலமெனவும், நாகேஸ்வரி கோயில்கொண் டெழுந்தருளியிருக்கும் அருட்டலமெனவுங் கருதி யாத்திரைசெய்கின்றார்கள். நயினாதிவு இப்பொழுது நித்திய யாத்திரைத் தலமாகிவிட்டது. புத்தபகவான் நாகதிபத்தைத் தரிசித்ததாகக் கூறப்படுங் கதை மகாவம்சத்தில் முதலாவது அதிகாரத்தில் மிக விரிவாகக் கூறப்பட்டுள்ளது. ('ஸ்ரீலங்கா'—ஜூன் 1952—பக். 18–19 ததாகதர் தரிசனம் பார்க்க.) மகாவம்சத்தின் தமிழ் ஆக்கத்தினை யான் 'ஸ்ரீலங்கா' பத்திரிகையிலே தொடர்ந்து வெளியிட்டுவருகின்றேன். இரு நாகஅரசர் ஒரு மணியாசனத்துக்கு உரித்துக்கொண்டாடிச் சண்டையிட்டபோது கௌதம புத்தர் வான்வழியாக வந்து பஞ்சசீலத்தை அவர்களுக்குப் போதித்ததாக மகாவம்சம் குறிப்பிடுகின்றது. இச்செய்தி மணிமேகலையிலுங் கூறப்பட்டுள்ளது. இந்நூல் அச்செய்தி மணிபல்லவத்தீவில் நிகழ்ந்ததாகக் கூறுகின்றது.[2]

## மணிபல்லவத்தீவு

மணிபல்லவத்திவு நாகதிபமாகிய யாழ்ப்பாணமே யென்பது முதலியார் இராசநாயகம், நல்லூர் சுவாமி ஞானப்பிரகாசர், பண்டிதர் அ. சிற்றம்பலம் முதலிய

1. இந்நூலின் கையெழுத்துப் பிரதியை எனக்குப் பார்க்கத் தந்துதவிய என் அருமை நண்பர் சோம. சரவணபவன் அவர்களுக்கு நன்றி செலுத்துங் கடப்பாடுடையேன். வெடியரசன் நாடகப்பிரதி யொன்றைத் தேடுமாறு என்னைத் தூண்டியதும் இவரிடம் யான் கண்ட நாடகப்பிரதியேயாகும்.

2. மணிமேகலை—VIII 1 - 2, 43 - 63.

அறிஞர்களின் கருத்தாகும். "இம் மணி பல்லவத்தைக் காவிரிப்பூம்பட்டினத்தி லிருந்து அடைய 'ஆறைந்தியோசனை தென்றிசை மருங்கில்' செல்லவிருப்ப தாலும்[1] புத்தரின் அடியிணை பதிந்த சமந்தம் என்னும் சமனொளிச் சிலம்பு இதற்கு 'அயலகத்து' இரத்தினதிவத்தி லுள்ள தெனப்படுவதாலும்,[2] அச் சிலம் புச்சியிற் சேர்ந்து புத்தரை வழிபாடாற்றி னோர் பாதகண்டத்துக்கு மீளும்வழியில் மணி பல்லவத்தையுங் கடந்து செல்வர் என்னப் படுவதாலும்[3], மணிபல்லவம் நாகதிபமாகிய யாழ்ப்பாணமே என்பது மலையிலக்கு.[4] இதனை முன்னவரா யெடுத்து விளக்கி னோர் முதலியார் செ. இராசநாயகமவர்கள்.[5] மணிபல்லவமும் ஜம்புகோல பட்டினமும் ஒன்று என்பது **மயிலை சீனி வேங்கடசாமி** அவர்கள் கருத்து.[6] கம்பலச்செட்டி, சாவகநாட்டரசன், மணிமேகலை, ஆபுத் திரன் முதலியோர் மணிபல்லவத்தைத் தரிசித்தனர் என மணிமேகலை கூறுகின் றது. மணிபல்லவம் என்ற தீவில் இருந்து சென்றவர்களே பல்லவர் என **முதலியார் இராசநாயகம்** குறிப்பிட்டுள்ளார்.[7] இதனை வித்துவான் **மா. இராசமாணிக்கம்** அவர் கள் தாம் எழுதிய 'பல்லவர் வரலாறு'[8] எனுஞ் சிறந்த ஆராய்ச்சிநூலிற் குறிப்பிட் டுள்ளார். 'இங்ஙனம் பல்லவர் என் பார் பஹ்லவர் மரபினரே' என்று முடிபு கொண்டவர் பலர் உளர். இலங்கையிற் சிறந்த ஆராய்ச்சியாளராக இருந்த இராச நாயகம் என்பவர், இலங்கையை அடுத் துள்ள மணிபல்வம் (காரைத்திவு) பல் லவர் பிறப்பிடமாகும். மணிமேகலையிற் கூறப்பட்டுள்ள சோழனை மணந்த பீலி வளை என்பவள் நாகர் மகள் ஆவாள். அவள் பெற்ற மைந்தனே திரையாற் கடத் தப்பட்டுக் கரைசேர்ந்த முதற் பல்லவன். அவன் தொண்டைக்கொடியாற் சுற்றப் பட்டு இருந்தமையின் **தொண்டைமான்** என்றும், திரைகளால் உந்தப்பட்டுவந்தமை யின் திரையன் என்றும் வழங்கப்பெற் றான். அவன் மரபினரே தம் தாயகப் பெயரைத் தாங்கிப் (மணி - பல்லவம்) பல் லவர் எனப்பட்டனர். பல்லவர் முதல் அரசன் பெரும்பாணாற்றுப்படையிற் புகழப் பெற்ற **தொண்டைமான் இளந்திரையன்** ஆவன் என விளக்கியுள்ளார்".

யாழ்ப்பாணம், யாழ்ப்பாண மக்களால் மணிபுரம் எனப்படுகிறது; அங்கு நாகரும் இருந்தமையால் மணிநாகபுரம் என்னும் பெயர் பெற்றது. இந்தியாவிலிருந்து இலங்கை நோக்கி வருபவர்க்கு யாழ்ப்பா ணம் ஒரு போது (போத்து Sprout) போலக் காணப்படுதலின், அது போது (போத்து) எனப்பட்டது. **போது, போத்து, பல்லவம்** என்பன ஒரே பொருளைக் குறிப்பன. யாழ்ப்பாணத்திலிருந்து போந்த வராதலின், தம்மைப் '**போத்தர்**,' என்றும் '**பல்லவர்**' என்றும் பல்லவ அரசர் கூறிக் கொண்டனர். **மணிபல்லவம்** என்னும் தீவு மணிமேகலையிற் குறிப்பிட்டிருத்தல் காண்க. இவற்றை நன்கு ஆராயின், **பல்லவம்** என்னுஞ் சொல் மணிமேகலை காலத்து மக்கட்கு விளங்கி இருத்தல் புலனாகும். பல்லவத்திலிருந்து வந்தவர் பல்லவர்என்று தம்மைக்கூறிக்கொண்டமை

1. மணிமேகலை VI—211 - 212.
2. மணிமேகலை XI—21 - 26.
3. மணிமேகலை XXVIII—107 - 109,
4. R. A. S. CA—N. 70
5. யாழ்ப்பாண வைபவ விமர்சனம்—பக் 23 - 24
6. மணிபல்லவம்—ஜம்புகோல பட்டினம்—ஈழகேசரி 26-6-49.
7. *Indian Antiquary Vol. iii—pp* 75 - 80
8. பல்லவர் வரலாறு—வித்துவான் மா. இராசமாணிக்கம்—பக். 25 - 26.

இயல்பே. அன்றே?[1] வீரகூர்ச்சன், நாகர் மகளை மணந்து அரசு பெற்றான் என்று பல்லவர் பட்டயம் கூறுதலும், கரிகாலன் நாகர் மகளை மணந்து பெற்ற இளந் திரையன் தொண்டைமண்டலம் ஆண்டான் என்பதும் ஆராய்ச்சிக்குரியன. மேலும் பல்லவர் இன்ன இடத்திலிருந்து தாம் வந்ததாக ஒரு பட்டயத்திலுங் கூறிற்றிலர் என்பது கவனிக்கத்தக்கது. முதலியார் இராசநாயகம் அவர்கள் பல்லவ உற்பத்தி பற்றி விரிவான கட்டுரையொன்று தமிழிலும் வெளியிட்டுள்ளார்கள்.[2] நயினாதீவே நாகதீவு என்பது வலியுறுமானால், மணிபல்லவமும் நயினாதீவுதான் எனக் கொள்வதில் விவாதத்துக்கிடமின்று.

**நாகநயினார்தீவு**

மாநாய்கர் எனும் வணிகரே நயினாப்பட்டர் அல்லது நாயனார்பட்டர் என்பவரை நாகபூஷணி அம்பாள் ஆலய அர்ச்சகராகக் கொணர்ந்தார் என்பது ஐதிகம். எனவே அவர் வாழ்ந்த தீவு நாகநயினார்தீவு அல்லது நாகநயினாதீவு, நயினாதீவு என்றாயிற்று எனக் கூறப்படுகின்றது.

"நச்சுவிழி நாட்டியஞ்செய் வோர்கள் தானும்
நாகநயி னாதீவில் வாழு வோரும்"

என **வையா பாடலில்** நாகநயினாதிவு என்ற பெயரே குறிப்பிடப்பட்டிருப்பதைக் காணலாம். நாகர் தாம் வழிபட்ட நாகத்தை நாகநயினார் நாகதம்பிரான் எனப் போற்றியிருத்தல் கூடுமாதலின், அத் தெய்வம் கோயில்கொண்டெழுந்தருளிய தலம் நாகநயினார்தீவு, நயினாதிவு எனப் பெயர்பெற்றதாகவுங் கூற இடமுண்டு.

**மணித்தீவு**

சக்தி பீடங்கள் அறுபத்து நான்கனுள் புவனேஸ்வரி பீடமும் திரிபுரபைரவி பீடமும் மணித்தீவிலுள்ளன என்று **பிரபஞ்ச உற்பத்தி**[3], **யாமளதாண்டகம்**[4] முதலிய நூல்கள் குறிப்பிடுவதாலும், நயினாதீவிலுள்ள அம்பாள் ஆலயமே ஒரு சக்திபீடமாகக் கருதி வழிபாடியற்றப்பட்டு வருகின்றமையாலும், நயினாதீவு மணித்தீவுஎனவும் பெயர் பெறலாயிற்று. புவனேஸ்வரியின் மகத்துவத்தை அச்சுவேலி சிவஸ்ரீ ச. குமாரசுவாமிக் குருக்கள் பக்தி சிரத்தையுடன் விரிவாக எழுதியுள்ளார்.[5] எனினும் கோயிற் கட்டியத்தில் அம்பாள் நாகராஜேஸ்வரி என்றே போற்றப்படுகிறாள். அம்பாள் அநேக அம்சங்கள் உடையவள். யார் யார் எந்த அம்சத்தை விசேடமாகப் பெற விரும்புகின்றனரோ அததற்கேற்ற தேவியம்சத்தைப் பெரிதும் போற்றி வணங்குகின்றனர். உற்று நோக்குமிடத்து, பிரபஞ்சத்தைத் தோற்றுவித்து நடாத்துகின்ற பராசக்தி பரசிவத்தின் வேறானதன்று என்பது புலப்படும். விளக்கும் ஒளியும் போல சக்தியும் சிவமும் ஒன்றே.

அருளது சத்தி யாகும்
அரன்தனக்கு அருளை யின்றித்
தெருள்சிவம் இல்லை அந்தச்
சிவம்இன்றிச் சக்தி இல்லை

எனச் **சிவஞானசித்தியாரிற்** கூறியிருப்பதை நோக்குக.

**நாகதீவயின**

தீவயின[6] என்னும் சிங்களப் பதம் தீவு என்னும் பொருளுடையது. துவீப என்னும் சம்ஸ்கிருத பதத்துக்குச் சகோதரத்துவமுள்ளது. யாழ்ப்பாணத்துத் தீவுகளைக் குறித்த சிங்களச்சொல் இஃதே

1. *Mysore Gazetteer Vol. II Part II—pp* 515 – 517
2. பல்லவ உற்பத்தி—C. இராசநாயக முதலியார்—'செந்தமிழ்' தொகுதி 21—பக். 205 – 216.
3. பிரபஞ்ச உற்பத்தி—சிறுமணவூர் முனிசாமி முதலியார்—பக். 460.
4. யாமளாதண்டகம்—ஸ்ரீ சதாசிவ ஐயர் தமிழாக்கம்—மல்குமணித்தீவில் எனுந் தொடரினை நோக்குக.
5. புவனேசுவரி மகத்துவமும் திருவூஞ்சலும்—அச்சுவேலி சிவஸ்ரீ ச. குமாரசுவாமிக்குருக்கள்.
6. வடமாகாணத்துள்ள சில இடப்பெயர்களின் வரலாறு—தெல்லிப்பழை ஸ்ரீ ச. குமாரசுவாமி பக். 112.

என்பதற்கு **நம் பொத்த** என்னும் சிங்கள நூல் சான்ருகும். நயினுதீவின் பழைய சிங்களப் பெயர் நாகதிவயின. அதற்கு நாகர்தீவு என்பது அர்த்தமாகும். நயினு— ஒருவன் பெயர். நயினுப்பட்டர் எனப் பெயரிய ஓர் இந்திய பிராமணேத்தமர் பண்டு நயினுதீவிலே மாநாய்க்கன், மாசாத்துவன் என்னும் நாமதேயமுடைய இளங்கோக்களினுலே இயற்றுவிக்கப்பட்ட நாகராஜேஸ்வரி கோவிலுக்கு ஆதிபூசகராய் அமர்த்தப்பட்டார் என்பது ஐதிகம். நயினுகட, நயினுவெல, நயினுமடம் முதலியதான நாமங்களை நோக்குக.

**ஹார்லெம்**

ஒல்லாந்தர் ஆட்சிக்காலத்தில் தீவுகளெல்லாவற்றிற்கும் ஒல்லாந்த தேசப் பெயர்கள் இடப்பட்டன. நயினுதிவுக்கு ஹார்லெம்[1] என்றும், காரைதிவுக்கு அம்ஸ்ரடாம்[2] என்றும், அனலைதிவுக்கு றெற்றர்டாம்[3] என்றும், புங்குடுதிவுக்கு மிடில்பேர்க்[4] என்றும், நெடுந்திவுக்கு டெல்வ்ற்[5] என்றும், ஊராத்துறைக்கு கைற்ஸ்[6] என்றும், வேலணை அல்லது தண்ணித்திவுக்கு லேடின்[7] என்றும் பெயர்கள் கொடுக்கப்பட்டன.

**நரித்திவு**

ஆங்கிலேயர் இலங்கையை வெற்றி கொண்டபோது இலங்கையிற் சத்திய வேதத்தைப் போதித்துவந்த பல்டேயஸ் பாதிரியார்[8] எழுதிய இலங்கைச் சரித்திர நூலில் நயினுதிவு என்ருல் நரிகள் வாழுந் திவு என்ற பொருளுடையது என்று குறிப்பிட்டுள்ளார். பாதிரியார் நயினுதிவு எப்படி ஏற்பட்டது என்று யாரையாவது வினவியிருத்தல்கூடும். அது சம்புத்திவு என்று பழங்காலத்தில் அழைக்கப்பட்டதென்ற விடை கிடைத்திருக்கலாம். சம்பு என்ருல் என்ன என்று பாதிரியார் கேட்டிருக்கவேண்டும். யாரோ ஒருவர் சம்பு என்ருல் நரி என்று விடைபகர்ந்திருக்கலாம். அந்நியரான பாதிரியார் அந்தக் கருத்தை உடனே தனது குறிப்புப் புத்தகத்தில் எழுதிக்கொண்டார்போலும்.

**படகுதுறை**

நயினுதிவு பண்டைக் காலத்திற் சிறந்த துறைமுகமாகவும் விளங்கிற்றெனச் சரித்திரம் பேசுகின்றது. அந்நிய நாடுகளுக்குக் கப்பல்கள் செல்லும் பாதையில் நயினுதிவு இருக்கின்றமையால், தமிழ் நாட்டுக் கப்பல்களும் அந்நிய நாட்டுக் கப்பல்களும் இத்துறையிற் றங்கியே சென்றிருக்க வேண்டும். இத் திவின் மேற்குக் கடற்கரையிற் படகுதுறை என்ற பெயரால் ஓர் இடம் இன்னும் அழைக்கப் படுகின்றது. மேற்குப் பகுதிக் கடல் மிக ஆழமாகவும் பெரிய கப்பல்கள் போக்கு வரவு செய்யக்கூடியதாகவும் இருக்கின்றது. கற்பாறைகளில் மோதுண்டு கப்பல்கள் உடைவது முண்டெனக் கருத இடமுண்டு. நாகபூஷணியம்மன் கோயிலிலுள்ள சிலாசாசனமும் இக்கொள்கையினை வலியுறுத்துகின்றது.

**நயினுதிவுச் சிலாசாசனம்**

நாகபூஷணியம்பாள் கோயிலின் கிழைக் கோபுர வாயிலில் இந்தச் சிலாசாசனம் காணப்படுகின்றது. நல்லூர் **சுவாமி ஞானப்பிரகாசர்** அவர்கள் 1922ஆம் ஆண்டு மாசி மாதம் நயினுதிவுக்குச் சென்றபொழுது, சாசனக்கல்லை அக் கோயிற் பூசகர் **பிரம்மஸ்ரீ நா. சாமிநாதக் குருக்கள்** அவர்களுடைய உத்தரவோடு புரட்டுவித்துப் பின்னர் திரு. **லோசன்** எனும் பிரதிமைப்படக்காரரைக் கொண்டு கல்லை நன்கு உரோஞ்சிக் கழுவிப் புகைப்படம்

1. *Haorlem* 2. *Amsterdam* 3. *Rotterdam* 4. *Middleburg* 5. *Delft* 6. *Kayts* 7. *Leyden* 8. *A Description of Ceylon by Baldeus.*

எடுப்பித்துக்கொண்டு திரும்பினார்கள்.[1] இந்தப் படத்தை **முதலியார் இராசநாயகம்** அவர்கள் சுவாமியாரிடமிருந்து பெற்று முழுச்சாசனத்தையுந் தெளிவாக வாசித்துத் தமது 'புராதன யாழ்ப்பாணம்' எனும் நூலிற் பதிப்பித்தார். யாழ்ப்பாணச் சரித்திரத்திற் கரிசனை கொள்ளுமாறு எனக்கு ஊக்கமளித்த இவ்விரு அறிஞர்களின் உதவியால் இந்தச் சாசனத்திலுள்ள வரலாற்றுக் குறிப்புத் தமிழகத்துக்குக் கிடைத்துள்ளது. அந்தச் சாசனம் பின் வருமாறு :

ஊராத்துறையிற் பரதேசிகள் வந்து இருக்கவேணு மென்றும் இவர்கள் ரக்ஷைப்படவேணுமென்றும் பு(து) துறைகளில் பரதேசிகள் வந்த (ாலித்) துறையி(ல) சந்திக்க(ே)வணு மென்றும் நா(வாய) ஆனை குதிரை யொடு(ம்) பண்டார சேவைக்கு ஆனை குதிரை கொடு வந்த மரக்கலங் கெட்டதுண்டாகில் நாலத் தொன்று பண்ட(ா)ரத்துக்கு கொண்டு மூன்று கூறும் (உ)டையவனுக்கு விடக்கடவதாகவும் —வாணிய மரக்கலங்கேட்டதுண்டாகில் செமபாகம் பண்டாரத்துக்குக் கொண்டு செமபாகம் உடையவனுக்கு விடக்கடவதாகவும் இவ்வ்யவஸதை ........ தித்து ......... தனை யுங் கல்லிலுஞ் செம்பிலும் எழுத்து வெட்டுவித்து இவ்வ்யஸதை செய்து கொடுத்து தேவ பராக்கறம பூஜோ...............

இந்தச் சிலாசாசனம் மகாபராக்கிரமவாகுவால் 12ஆம் நூற்றாண்டிற் பழைய எழுத்துக்களிற் செதுக்கப்பட்டுள்ளது. நெடுந்தீவு, நயினாதீவு ஆகியவற்றை அடுத்துள்ள கடற்பகுதிகளிற் கப்பல்கள் அடிக்கடி சேதமுற்றன என்பது இதனால் அறியக்கிடக்கின்றது. மேலும் வருடந்தோறும் 60 கப்பல்கள் சேதமடைவதாக ஜோன் எனும் கிறிஸ்தவ பாதிரியார் ஒருவர் குறிப்பிட்டுள்ளாரென **முதலியார் இராசநாயகம்** அவர்கள் எடுத்துக் காட்டியுள்ளார்கள். நயினாதீவின் தென்பகுதி மலையடிவாரம் என்றழைக்கப்படுகின்றது. ஊர்காவற்றுறையிலிருந்து நெடுந்தீவுக்குச் செல்லும் வத்தைகள் ஏழாற்றுப் பிரிவினையும் 'மலையடி'யை யடுத்துள்ள கொந்தளிப்பான சமுத்திரத்தையுந் தாண்டிச் செல்லவேண்டும். நாவாய்கள் தம்முடன் மோதும் அலைகளினால் மேலெழும்பிக் கீழே விழும்பொழுது அவற்றினுள்ளே இருக்கும் பிரயாணிகள் பெருங் கஷ்டப்படுவது வழக்கம். இரண்டு தீவுகட்கிடையே செல்லும் கடற்பகுதியை ஓர் ஆறாகக் கருதி, ஏழு தீவுகட்கிடையே செல்லும் ஏழு கடற் பகுதிகளையும் ஏழு ஆறுகளாகக் குறிப்பிடும் மரபினை ஆதாரமாகக் கொண்டு, ஏழாற்றுப் பிரிவு என்ற பெயர் ஏற்படலாயிற்று. அம்பிகையின் சந்நிதியை யடைய முன்னர் ஏழாற்றுப் பிரிவினைக் கடத்தல் வேண்டும். நெடுந்தீவுக் கடலிற் கப்பல்கள் சேதமடைவது சர்வ சாதாரண மென்பதற்கு வைபமாலையுடையார் குறிப்பிட்டிருப்பதும் தக்க சான்றாகும். "வட இலங்கையைச் சங்கிலி அரசன் ஆட்சிபுரிந்த காலத்தில் நாற்பத்தொன்பது வன்னியர்மார் தென்னாட்டிலிருந்து மரக்கலமேறி வருகையில் நெடுந்தீவிற் கடலில் அமிழ்ந்துபோயினர்[2] என்ற குறிப்புக் காணப்படுகின்றது.

### சீனத்துச் சாடிகள்

சில ஆண்டுகளுக்கு முன் பப்பரவன் சல்லி என்னுங் காணியிற் கிணறு ஒன்று தோண்டியபோது அழகான சில சாடிகள் கண்டெடுக்கப்பட்டன. இவற்றுட் சிலவற்றைத் திரு. வி. செல்லத்துரை அவர்கள் 1937ஆம் ஆண்டில் கொழும்பு நூதனசாலைக் கனுப்பிவைத்த பொழுது, அவை

1. நயினாதீவுச் சிலாசாசனத்தைச் சுட்டிய சில குறிப்புக்கள்—நல்லூர் சுவாமி ஞானப்பிரகாசர்—ஈழகேசரி 21-2-37.
2. யாழ் வைபவமாலை—பக். 60.

சீனதேயத்துச் சாடிகள் எனவும் 12ஆம் நூற்றுண்டிற் செய்யப்பட்டவையா யிருத்தல் கூடும் எனவுங் குறிப்பிட்டு, இத்தகைய சாடிகள் இன்னுங் கிடைத்தால் தங்கட்கு அனுப்பிவைக்குமாறு நூதன சாலை அதிகாரி கேட்டுக்கொண்டார். எனவே பன்னிரண்டாம் நூற்றுண்டிலும் சீனவுக்கும் நயினாதிவுக்கும் தொடர்பு இருந்தது என்பது புலனாகின்றது. இத்தகைய சாடிகளை நயினாதிவில் இன்றுங் காணலாம். இவற்றில் தீட்டப்பெற்ற வர்ணங்கள் சிறிதும் சிதையாமல் இருப்பது வியப்பை விளைவிக்கும்.

### பௌத்த விகாரை

நயினாதிவிற் பழைய விகாரை யொன்றிருந்த தெனக் கருத இடமுண்டு. இந்த விகாரை யிருந்த இடம் புத்தர் கோயிலடி என்று அழைக்கப்பட்டு வருகின்றதென முதியோர் கூறுவர். இவ் விகாரை யிருந்த இடத்துக் கண்மையில் ஒரு பொய்கை யிருந்த அடையாள முண்டெனவும், அதுவே கோமுகி யெனப்பட்டதெனவுங் கூறுவர். நயினாதிவில் கடற்கரையோரத்தில் இப்பொழுது ஒரு புத்த விகாரை கட்டப்பெற்றுள்ளது. அநேக பௌத்தர்கள் இந்தக் கோயிலுக்குச் சென்று வழிபடுகின்றார்கள். நயினாதிவு இப்பொழுது பௌத்த யாத்திரைத் தலமாக விளங்குகின்றது.

### கற்சில்லு

கோயில் வீதியில் ஒரு கற்சில்லும் இரண்டு பீரங்கிகளும் கிடக்கின்றன. இந்தப்பீரங்கிகள் ஒல்லாந்தர் காலத்தனவாயிருத்தல் கூடும். இவை இத் தீவின் அயலிலுள்ள ஆழ் கடலில் இருந்தெடுக்கப்பட்டன. கற்சில்லு கப்பல்களின் நங்கூரமாய் உபயோகிக்கப்பட்டிருத்தல் கூடும். போர்த்துக்கீசர் ஆட்சிக் காலத்திற் கடலுள் உருட்டிவிடப்பட்ட தேர்களின் சில்லுகளுள் ஒன்ருக இருக்கலாம் எனச் சிலர் கருதுகின்றனர்.

ஒல்லாந்தர் காலத்திலும் ஆங்கிலேயர் காலத்திலும் நயினாதிவை யடுத்த கடலிற் சங்கு குளித்தல் நடைபெற்றது. இதனால் அரசாங்கத்துக்குப் பெரும் ஊதியம் கிடைத்துவந்தது. இப்பொழுது இது நடைபெறுவதில்லை. முன்னர்க் குறிப்பிட்ட காலத்திற் சங்கு குளிப்பதற்காக வந்திருந்த முஸ்லிம்கள் வணங்கும் பொருட்டு ஒரு பள்ளிவாசல் கட்டப்பெற்றுள்ளது. அதற்கருகில் முஸ்லிம் பெரியார் ஒருவருடைய சமாதியும் உண்டு.[1]

### மணிமேகலா தெய்வம்

மணிமேகலா தெய்வம் இத் தீவுகளைப் பாதுகாத்துவந்த தென்ற ஐதிகம் ஒன்றுண்டு. மணிமேகலா தெய்வமானது அரக்கர் வாதைபண்ணாதபடி இந்திரன் ஏவலாலே சில தீவுகளைப் பாதுகாத்துக்கொண்டிருந்தது. கோவலன் தன் குலத்தவன் ஒருவனை இத் தெய்வம் கடலிற் பாதுகாத்த நன்றிக்காகத் தன் புதல்விக்கு மணிமேகலை யென்று பெயரிட்டான். இந்த மணிமேகலையை உபவனத்திலிருந்து மணிப்பல்லவங் கொண்டு சென்று புத்த பீடிகைக் காட்சியாற் பழம் பிறப்புணர்த்திற்றென மணிமேகலை யெனும் காப்பியம் கூறுகின்றது.

### தலத்தைத் தரிசித்தோர்

மணிபல்லவத்திற் சிறந்த துறைமுகமிருந்தமையால் மேனாட்டு வணிகரும் தமிழக வணிகரும் தங்கள் பிரயாணத்தின் போது இத்தீவினைத் தரிசித்தனர். மேலும் பல ஞானிகளும் அடியார்களும் காலத்துக்குக் காலம் இத்தலத்தைத் தரிசித்து வந்தனர். "சாவகநாடு (ஜாவாதிவு), காகநாடு (பர்மாநாடு) முதலிய கீழ்நாடுக

1. *Ceylon by Bertolacci pp. 274 - 276*

ளுக்குத் தமிழ்நாட்டிலிருந்து வாணிகத்தின் பொருட்டு மரக்கலம் ஓட்டிச்சென்ற தமிழ் வணிகர், இடைவழியிலே மணிபல்லவத் துறைமுகத்தில் தங்கிச்செல்வது வழக்கம். இதனை மணிமேகலை 14ஆம் காதையினுல் அறியலாம். கம்பளச்செட்டி என்பவன் கடலிற்சென்று வாணிகம் செய்து திரும்பி வருகிற வழியில் மணிபல்லவத்திலே தங்கினுன் என்றும், சாவகநாட்டரசன் புத்தரது பாதபீடிகையை வணங்க மரக்கலம் ஏறி மணிபல்லவம் வந்தான் என்றும் மணிமேகலை கூறுகிறது''.[1] மணிமேகலை என்பவளும் ஆபுத்திரனும் மணிபல்லவத்துக்கு வந்த செய்தி மணிமேகலையில் விபரமாகக் கூறப்பட்டுள்ளது.

கிறித்துவுக்கு 1500 ஆண்டுகளுக்கு முன் வட இந்தியாவிலிருந்து அரசாண்ட பாண்டவர்களில் ஒருவனுகிய அருச்சுனன் தீர்த்தயாத்திரை காரணமாக மணிபுரத்துக்கு வந்து அங்கே சித்திராங்கதையென்னும் நாககன்னிகையைக் கண்டு காதல்கொண்டு மணமுடித்தான் என்று மகாபாரதம் குறிப்பிடுகின்றது.

கி. பி. 150—200 வரை ஆண்ட **நெடுமுடிக்கிள்ளி** என்னும் சோழ அரசன் யாத்திரை காரணமாக மணிபல்லவத்திற்கு வந்து **வளைவணன்** என்னும் நாகவரசன் மகள் **பீலிவளை** என்பாளை மணந்து ஓர் ஆண்மகவைப் பெற்றுன். சோழவரசன் இப்பேரழகு வாய்ந்த பெண்மணியை ஓர் ஆதொண்டைச் செடியின் அருகேதான் முதன்முதலாகக் கண்டானும். பீலிவளை தான் பெற்ற மகனைக் **கம்பளச்** செட்டியென்னும் வணிகனிடம் கொடுத்து, அவள் தந்தையிடம் சேர்க்கும்படி கையடையாகக் கொடுத்தாள். அச் செட்டி யேறிப்போந்த கப்பல் காற்றினுல் அடிபட்டுக் கரையிலேற்றப்பட்டு உடைந்து பிள்ளையுந் தவறிப் போனபடியால்,

'கெடுகல மாக்கள் புதல்வனைக் கெடுத்தது
வடிவேற் கிள்ளி மன்னனுக் குரைப்ப
மன்னவன் மகனுக் குற்றது பொறாஅ
னன்மணி யிழந்த நாகம் போன்று
கானலுங் கடலுங் கரையுந் தேர்வுழி'

தொண்டைக் கொடியாற் சுற்றப்பட்டுக் கரையிலிருந்த புதல்வனைக் கண்டெடுத்துத் தொண்டைமான் இளந்திரையன் எனப் பெயர் வகித்துத் தக்க பருவத்திலே தனதரசுரிமையி னெருபகுதியை அவனுக்குக் கொடுத்துக் காஞ்சிபுரம் என்னும் நகரிலிருந் தரசாளும்படி வைத்தான். அவனரசாண்ட பூமி **தொண்டைமண்டலம்** எனப் பெயர்பெற்றது.[2] இவனுக்கு ஆதொண்டைச் சக்கரவர்த்தி என்னும் பட்டம் சூட்டப்பட்டதெனவும் கூறுவதுண்டு. இவ்வாறு வணிகர், யாத்திரீகர், சித்தர், ஞானியர் முதலியோர் இத்தலத்தைத் தரிசித்துள்ளனர்.

### நயினுதீவுச் சுவாமியார்

நயினுதீவுச் சுவாமியார் என்று வழங்கப்பெற்று வந்தவராகிய முத்துக்குமார சுவாமியெனும் துறவியானவர் நயினுதீவிற் றுன் பிறந்தார். சுவாமியவர்கள் துறவுக் கோலம்பூண்டு நைட்டிகப் பிரமச்சாரியாக வாழ்ந்து வந்தபடியால் அவர்கள் நயினுதீவுக்குமட்டுமன்றிச் சைவ உலகம் அனைத்துக்கும் உரியவராவர். அவர் தோன்றிய பூமி நற்றவம் மிக்க நயினுதீவு எனினும், அவருடைய சீடர்கள் தீவுப்பகுதியிலும் யாழ்ப்பாணத்திலும் கொழும்பிலும் உண்டு. யாழ்ப்பாணம் இந்துக்கல்லூரிக் கண்மையிலுள்ள சிவலிங்கப்புளியடி என்னுமிடத்தில், முன்னுள் கல்விப்பகுதியில் வேலைபார்த்த என் நண்பர் திரு. எஸ். சிவசுப்ரமண்யம் அவர்கள் இல்லத்தில் சுவாமியவர்களைக் காணும் பாக்கியம் அடியேனுக்கு இடைக்கிடை கிடைத்தது. ''நயினுதீவுச் சுவாமிகளிடத்து விளங்கிய

1. மணிபல்லவம்—மயிலை சீனி வேங்கடசாமி—ஈழகேசரி 26-6-49
2. யாழ். சரித்திரம்—முதலியார் இராசநாயகம்—பக். 17-18

தெய்வபக்தி, ஞானம், தூய்மை, மன அடக்கம், இன்சொல், அருளோடுகூடிய நோக்கு, எந்தநேரமுஞ் சிவசிந்தனை, இன்னலுற்றுத் தம்மையடைந்தார்க்குச் சொல்லும் தேறுதல் வாக்கு, தவக்கோலம், கோபம் முதலிய தீய குணங்கள் அறவே யில்லாமை முதலிய சுகுணங்களோடு தூய செயல்களையுடையவர் என்று அவருடைய சீடர்களில் ஒருவர் கூறினர். 1949ஆம் ஆண்டில் சுவாமியவர்கள் இயற்கையுடன் கலந்தார்கள். ஞானிகளுடைய வரலாறுகளை ஞானிகள்தாம் அறிந்து கொள்ள முடியும். இவர்களிற் சிலருக்கு விசர் என்ற பட்டத்தையுஞ் சூட்டியது உன்மத்த உலகம்.

"பாலரொடு பேயர்பித்தர் பான்மையென
நிற்பதுவே
சீலமிகு ஞானியர்நஞ் செய்கை பராபரமே"

என்று ஞானியர்களின் செய்கையைக் குறிப்பிடுகின்ருர் தாயுமானசுவாமிகள்.

ஞாலமதின் ஞானநிட்டை
யுடையோ ருக்கு
நன்மையொடு தீமையிலை
நாடுவதொன் றில்லை
சீலமிலை தவமில்லை
விரதமொடாச் சிரமச்
செயலில்லை தியானமிலை
சித்தமல மில்லை
கோலமிலை புலனில்லை
கரண மில்லை
குணமில்லை, குறியில்லை
குலமு மில்லை
பாலருடன் உன்மத்தர்
பிசாசர்குண மருவிப்
பாடலினெ டாடலிவை
பயின்றிடினும் பயில்வர்.

என அருணந்திதேவரும் அறுதியிட்டுக் கூறியுள்ளார். எனவே சுவாமியவர்களைப் பற்றி எழுதுவதற்கு அவருடைய அணுக்கத் தொண்டரே அருகராவர். சுவாமியாரின் சமாதி காட்டுக் கந்தசுவாமிகோயில் கருப்பக்கிரகத்துக்குப் பின்புறமாக உண்டு. இதற்கண்மையில் **ஸ்ரீசத். சித்திரமுத்து அடிகளால்** அத்திவாரமிடப்பட்டு திரு. சபாபதிப்பிள்ளை அவர்களுடைய பொருளுதவிகொண்டு கட்டிமுடிக்கப்பெற்ற திருவருள் ஒளிநிலையமும் உண்டு.

நயினுதிவிற் புராதனப் பெருமையும் பக்திப் பெருக்கமும் உள்ள நாகேஸ்வரி ஆலயத்தைத் தவிர வேறு பழைய கோயில்களும் உண்டு. இத்தீவின் தென்புறத்திற் காணப்படும் காளிகோயிலும் மிகத் தொன்மை வாய்ந்ததெனக் கருதப்படுகின்றது. யாழ்ப்பாணத்திலிருந்த கடையிற் சுவாமிகள் இந்தக் கோயில் உள்ள தில்லை வனத்தில் திரிவது வழக்கம் எனவும், தில்லைக்காளியே இங்கு எழுந்தருளியிருக்கின்ருள் எனச் சுவாமிகள் அடிக்கடி கூறிவந்தார்கள் எனவும் திரு. கா. ஆறுமுகம் அவர்கள் குறிப்பிட்டார்கள். 1882இல் தயாரிக்கப்பட்டு யாழ்ப்பாணக் கச்சேரியில் வைக்கப்பட்டுள்ள பழைய கோயிற்பதிவு டாப்பில் நயினுதிவில் அப்பொழுது நாகபூஷணி அம்மன் கோவில், இளைய பண்டாரம் அல்லது முருகமூர்த்தி கோயில், ஐயனுர் கோயில், முருகமூர்த்தி கோயில், பிடாரி கோயில், காளிகோயில் எனக் கோயில்கள் பதியப்பட்டுள்ளன.

நயினையம்பதியிலிருந்து நாற்றிசையும் ஆளும் அகில லோக நாயகியான நாகபூஷணி அம்பாள் எழுந்தருளியிருக்கும் ஆலயத்தின் சிறப்பினைச் சிறிது நோக்குவாம்.

# யாத்திரை விளக்கம்

யாழ்ப்பாணத்திலிருந்து இருவேறு மார்க்கமாக நயினைதிவுக்கு யாத்திரை செய்யலாம். தென்னிலங்கையிலிருந்து யாத்திரை செய்ய விரும்புவோர் யாழ்ப் பாணத்தை விடியற்காலை ஆறு மணியள விற் சென்றடைகின்ற புகையிரதத்திற் பிரயாணஞ் செய்தல்வேண்டும். அங் கிருந்து நேரே மோட்டார்வண்டி மூலம் காரைநகர்ப் பாலம்வரை செல்லலாம். அன் றேல் புகையிரத நிலையத்திலிருந்து யாழ்ப் பாணம் பெரியகடை யென்னுமிடத்தி லுள்ள பஸ்வண்டி நிலையத்துக்கு வந்து காரைநகருக்குச் செல்லும் பஸ்வண்டியில் ஏறிக்கொள்ளவேண்டும். காரைநகர்த் துறைமுகப் பாலத்திலேயே சில சமயங்க ளில் நயினைதிவுக்குஞ் செல்லும் இயந்திரத் தோணிகள் நிற்கக்கூடும். அவை அங் கில்லையானல், காரைநகருக்கும் ஊர்கா வற்றுறைக்கும் இடையில் ஓடும் தாமியங்கி மூலம் இரண்டு சதம் சலார் கொடுத்து ஊர்காவற்றுறைப் பாலத்துக்குப் போக லாம். அங்கே நயினைதிவுக்குப் போகக் கூடிய லாஞ்சிகள் கட்டி நிற்கும். அவை சாதாரணமாக காலை 8–30 மணியளவில் புறப்படும். ஊர்காவற்றுறையில் இருந்து புறப்பட்டால் ஒன்றரை மணித்தியாலத்தில் நயினைதிவுக்குப் போய்விடலாம். இனி யாழ்ப்பாணத்திலிருந்து பண்ணை மார்க்க மாகப் புங்குடுதீவிலுள்ள பூவரசடித்துறை வரை வந்து, அங்கிருந்து மோட்டார் லாஞ்சி மூலம் ஒரு மைல்தூரமுள்ள கடலைத் தாண்டி நயினைதீவை யடையலாம். யாழ்ப் பாணத்திலிருந்து காலையிற் புறப்பட்டால் நயினைதீவில் அம்பிகையின் உச்சிக்காலப் பூசையைத் தரிசித்துக்கொண்டு பிற்பகல் இரண்டு மணியளவிலே திரும்பி வரும் மோட்டார் லாஞ்சியில் திரும்பி விடலாம். ஆறுதலாக அம்பிகை தரிசனம் பெற்று வருவதானல் அல்லது நேர்கடன் நிறை வேற்றுவதானல் ஒரு நாள் முன்னரே சென்று மடத்தில் தங்கி ஆறுதலாகத் திரும்பலாம்.

---

**உமாதேவியார்**

செறிதரு முயிர்தோறுந் திகழ்ந்து மன்னிய
மறுவறும் அரனிட மரபின் மேவியே
அறுவகை நெறிகளும் பிறவும் ஆக்கிய
இறைவிதன் மலரடி இறைஞ்சி ஏத்துவாம்.

— கந்தபுராணம் — கடவுள் வாழ்த்து

# நாகபூஷணி அம்பாள் ஆலயம்

முன்னமொர் கோவணந் தட்டினி லிட்டு முயன்றடிமை
தன்னை மதிக்கச்செய் தோன்றில்லை வாழுஞ் சபேசனிடந்
துன்னி யொளிரு மொருநாக பூடணி தொல்லைமுன்னுண்
மன்னத் தவஞ்செய் நயினையு மீழநன் மண்டலமே.

—ஈழமண்டல சதகம்

ஆழிவெண் டிரைக்கை தன்னால் அணிவளைக் குழவி தாங்கி
மாழையங் கரைச்செஞ் சாலி மஞ்சமேற் றவழ வேற்று
வீழுமார் திபத் தான்றே ரிதயமே யுணரும் வித்தாம்
எழில கவித்த வன்னை யெழுந்தருள் கின்ற ளன்றே.

பீடுறும் பரம ஞர்வம் பெருக்கிய வுவமையா யன்று
விடுகண் மணியா யெல்லா நிலைக்குமா தார மாய்வின்
கூடுதென் கயிலை யீசன் குலவிய பிரானை யாய்மேல்
நாடநும் பரிசி னின்றுள் நாகபூ டணியா யுற்றுள்.

போதநா யகி புவனநா யகியென் புயங்கநா யகியிருஞ் சாம
கீதநா யகியெங் கிளைக்குநா யகிவான் கிருமைநா யகியுல களிக்கும்
பேதநா யகிவின் னவர்க்குநா யகிமால் பிரமநா யகிநறுக் கமல
பாதநா யகியென் றுன்னுவா ரகமும் பவமெனும் பாவகன் டிடுமோ.

பெற்றதா லன்னை பெறுமுயி ரனைத்தும் பேனலா லன்னைபெற் றிடுவோர்
உற்றதா லன்னை விரும்பிய வனைத்து முதவலா லன்னையெக் கலையுஞ்
சொற்றதா லன்னை யுலகொடு வானுந் தொழுதலா லன்னையென் றென்றும்
பற்றதாங் கருணை பொழிதலால் அன்னை பராபரை நாகபூ டணியால்.

—நயினைமான்மியம்

சைவ இலங்கை

இலங்கையில் வாழ்ந்த பூர்வீகக் குடிகள் இந்து சமயத்தையே கைக்கொண்டனர். குபேரன், இராவணன், மண்டோதரி முதலியோர் சிறந்த சிவபக்திபுடையவராகத் திகழ்ந்தனர். இராவணனுடைய சிறந்த சிவ பக்தியைத் திருஞானசம்பந்த சுவாமிகளும், மண்டோதரியின் சிவபக்தியை மாணிக்க வாசக சுவாமிகளும் பாராட்டியுள்ளார்கள்.

இலங்கைச் சரித்திர வாராய்ச்சியி லீடுபட்ட மேனுட் டறிஞர்களும் இலங்கையின் புராதன சரித்திரத்தைக் கூறப்போந்தவிடத்து இந்துசமயமே எல்லாச் சமயங்கட்கு முன்னர் இலங்கையில் விளங்கிற்றென அறிவுறுத்துகின்றார்கள். "இலங்கைத்திவில்

உள்ள பல்வேறு குடிகளின் மொழி, இலக்கியம், சமயம், பழைய ஞாபக சின்னங்கள் ஆதியனவற்றை நோக்குமிடத்து, இத்தீவானது வரலாற்றுக் கப்பாற்பட்ட காலந் தொடக்கமாக இந்துசமயக் குடிகளையே கொண்டதாதல்வேண்டும் என்பது புலனாகும் ” என சேர் உவில்லியம் ஜோன்ஸ் குறிப்பிட்டுள்ளார். இதன் விரிவான விளக்கத்தை யான் எழுதிய **இலங்கையும் இந்து சமயமும்** எனும் கட்டுரையிற் காணலாம்.[1]

## சத்தி வழிபாடு

ஈசனருள் இச்சைஅறி வியற்றல் இன்பம் இலயமொடு போகஅதி கார மாகித்
தேசருவம் அருவுருவம் உருவ மாகித் தேவியுமாய்த் தேசமொடு செல்வ மாகிப்
பேசரிய உயிரையெலாம் பெற்று நோக்கிப் பெரும்போக மவையளித்துப் பிறப்பினையு மொழித்திட்
டாசகலும் அடியருளத் தப்பனுட னிருக்கும் அன்னையருட் பாதமலர் சென்னி வைப்பாம்.

—சிவஞானசித்தியார்

பூரணி புராதனி சுமங்கலை சுதந்தரி புராந்தகி த்ரியம்பகி யெழிற்
புங்கவி விளங்குசிவ சங்கரி சகஸ்ரதள புட்பமிசை வீற்றிருக்கும்
நாரணி மனாதீத நாயகி குணாதீத நாதாந்த சத்தி யென்றுன்
நாமமே யுச்சரித் திடுமடியர் நாமமே நானுச்ச ரிக்கவசமோ
ஆரணி சடைக்கடவுள் ஆரணி எனப்புகழ அகிலாண்ட கோடி ஈன்ற
அன்னையே பின்னையுங் கன்னியென மறைபேசும் ஆனந்த ரூபமயிலே
வாரணியு மிருகொங்கை மாதர்மகிழ் கங்கைபுகழ் வளமருவு தேவை யரசே
வரைராச னுக்கிருகண் மணியாய் உதித்தமலை வளர்காத லிப்பெணுமையே.

—தாயுமானவர்

நின்று மிருந்துங் கிடந்தும் நடந்தும் நினைப்பதுன்னை
என்றும் வணங்குவ துன்மலர்த் தாளெழு தாமரையின்
ஒன்று மரும்பொரு ளேயரு ளேயுமை யேயிமயத்(து)
அன்றும் பிறந்தவ ளேயழி யாமுத்தி ஆனந்தமே.

—அபிராமியந்தாதி

ஆதியாஞ் சிவனுமவன் சோதியான சக்தியுந்தான்
அங்குமிங்கு மெங்குமுள வாகும்—ஒன்றே
யாகினு லுலகனைத்தும் சாகும்—அவை
யன்றியோர் பொருளுமில்லை, அன்றியொன்று மில்லையிதை
ஆய்ந்திடில் துயரமெல்லாம் போகும்—இந்த
அறிவுதான் பரமஞான மாகும்.

—பாரதியார்

**அக்கினியோடு சூடுபோலச் சிவத்தோடு பிரிவின்றி உள்ளதாகிய வல்லமை சிவ சத்தியாகும்** என்று **ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர்** அவர்கள் ஒரு வாக்கியத்திலேயே சிவ சத்தி யாது என்ற கேள்விக்கு விடையிறுத்துவிட்டார்கள். சக்தியைப்பற்றி ஒரு தனி நூல் வெளியிடுவதற்கேற்ற கருத்துக்களை யெல்லாம் அடக்கியுள்ளது இந்த மகா வாக்கியம். சிவ சக்தியின் தன்மையினை,

1. இலங்கையும் இந்து சமயமும்—இந்துசாதன வச்சிர விழா மலர்.

"தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத் தருஞ்சத்தி
பின்னமிலா னெங்கள் பிரான்" என **உமாபதிசிவாசாரியரும்,**

ஒருவனே இராவ ணாதி பாவக முற்றுற் போலத்
தருவனிவ் வுருவ மெல்லாம் தன்மையும் திரியா னாகும்
வரும்வடி வெல்லாஞ் சத்தி சத்திதான் மரமுங் காழ்ப்பும்
இருமையும் போல மன்னிச் சிவத்தினோ டியைந்து நிற்கும்.

அருளது சத்தி யாகும் அரன்தனக் கருளை யின்றித்
தெருள்சிவ மில்லைஅந்தச் சிவமின்றிச் சத்தி யில்லை
மருளினை அருளால் வாட்டி மன்னுயிர்க் களிப்பன் கண்கட்கு
இருளினை ஒளியா லோட்டும் இரவியைப் போல ஈசன் என **அருணந்திதேவரும்**
விளக்கியுள்ளனர்.

சத்தியின் பெருமையைச் சைவப் பெரியார் அச்சுவேலி சிவஸ்ரீ ச. குமார சுவாமிக்குருக்கள் அவர்கள் சைவநன் மக்கள் எளிதில் அறிந்துகொள்ளக்கூடிய பான்மையில் எழுதியுள்ளார்கள். அதி லிருந்து ஒருபகுதியை[1] ஈண்டெடுத்துக் காட்டுதும்:

"சத்தி என்பதற்கு வல்லமை என் பதே பொருளாகும். சத்தியானது நீருக் குக் குளிர்ச்சியும் அக்கினிக்குச் சூடும் போலச் சிவபிரானோடு பிரிப்பின்றி நிற்ப தாம். அக்கினி பொருளால் ஒன்றாயினும் வடிவாற் செம்மை என்றும், குணத்தாற் சூடு என்றும் பிரித்தெண்ணப்படுமாறு போல, பரம்பொருள் ஒன்றேயாயினும் எவற்றையுங் கடந்து நிற்கும் ஒளியாகிய வடிவால் சிவமெனவும், எவற்றினுங் கலந்து அவைகளைத் தன்பால் இழுக்கும் வலியாமையாகிய குணத்தால் சத்தி என வும் பிரித்துக் கூறப்படும். சத்தியும் சத்தனும் மரமும் வைரமும் போலக் குண குணிபாவமாய் நிலைத்தலானும் இருவருக் கும் பேதமின்மை நன்கு தெரியப்படும்.

சூரியன் உலகத்திலுள்ள புறவிருளை நீக்கி ஒளியை உண்டாக்குவது போல, சிவபெருமான் திருவருளால் ஆன்மாக்க ளது மயக்கத்தை நீக்கி, அனுக்கிரகஞ் செய்வர். சத்தியே உலகிற்குக் காரணம். சத்தியின்றேல் யாவுமின்று. திருவருளே சிவபெருமானுக்குச் சத்தியாகும். அவ் வருட் குணமாகிய சத்தியின்றிச் சிவமில்லை. சிவத்தை விட்டுச் சத்தி நீங்குவதில்லை. **சத்தியின் வடிவம் ஞானமேயாம். அதுவே பராசத்தி எனப்படும்.**

அரசனது ஆஞ்ஞா சத்தியானது மந்திரி, பிரதானி, படைத்தலைவர், நியா யாதிபதி முதலாகக் கீழே நின்ற சேவகன் இறுதியாகவுள்ள அங்கத்தார் மாட்டுப் பதிந்து காரிய வேறுபாட்டாற் பலவகைப் படல் போல, பராசக்தி ஒன்றே இச்சித்தல், அறிதல், செய்தல் என்னும் வேறுபாட் டால் இச்சா சத்தி, ஞான சத்தி, கிரியா சத்தி என மூவகையாகவும், பின்னரும் அவாந்தர வேறுபாட்டால் அநந்த சத்தி யாகவும் வியாபரிக்கும். கிரியா சத்தி யானது **ஆரிணி, செநநி, இரௌத்திரி, ஈசானி, பூரணி, ஆர்த்தி, வாமை, மூர்த்தி** என எட்டாக வியாபரிக்கும். அவற்றுள் ஆரிணி, செநநி, இரௌத்திரி என்னும் முச்சத்திகளும் சிவபெருமானுக்குச் சூக் கும வடிவாகவும் ஏனைய ஐந்தும் தூல வடிவாகவுஞ் சொல்லப்படும். அன்றியும், செநநியாற் படைப்பும், இரௌத்திரியாற் காத்தலும், மறைத்தலும், ஆரிணியால்

1. புவனேசுவரி மகத்துவமும் திருவூஞ்சலும்—சிவஸ்ரீ ச. குமாரசுவாமிக் குருக்கள்.—பக். 2-5.

அழித்தலும் அருளலும் ஆகிய சூக்கும கிருத்தியங்களும், ஈசானி முதலிய ஐந்தாலும், தூல கிருத்தியங்களும் செய்தருளுவர். இவ்வுண்மைகள்,

" அவருடைய பராசத்தி பலதிறப்படுவது " என உபநிடதமும்,

" சிவபிரானுக்குத் தீயின் சூடு போல, சத்தியார் வேறுபடாதுள்ளார். சத்தியின்றிச் சிவபிரான் இல்லை. சிவனையின்றிச் சத்தி இல்லை எனச் சிவாகமும்,

**"உமையலா துருவமில்லை"**

எனத் தேவாரமுங் கூறுமாற்றானும் பிறவாற்றானும் உணரப்படும்.

சத்தியாகிய உமாதேவியார் காமாட்சி என்னும் திருநாமத்தோடு முப்பத்திரண்டு அறங்களையும் வளர்க்கின்றார். சிவகாமி அம்மையார் என்னும் திருநாமத்தோடு பிறவிப் பிணியை நீக்கும்பொருட்டுச் சிவபெருமானது திருநிருத்தத்துக்குச் சாட்சியாய் நிற்கின்றார். விசாலாட்சி என்னும் நாமத்தோடு ஆன்மாக்களுடைய இளைப்பை நீக்கியருளுகின்றார். மீனாட்சி என்னும் திருநாமத்தோடு உலகத்தில் நீதிநெறிகளை நிலைபெறச் செய்தருளுகின்றார். **புவனேசுவரி என்னுந் திருநாமத்தோடு மும்மூர்த்திகளும் முத்தொழில் செய்வதற்கு அதிகாரம் கொடுத்தருளுகின்றார்.**

இனி, ஈசுவரன் என்னுந் திருநாமம் காரணப் பெயராய் நின்று பிறரையும் உணர்த்துமேனும் காரண இடுகுறிப் பெயராய்ச் சிவபெருமான் ஒருவரையே உணர்த்தும். அதுபோல் ஈசுவரி என்னும் பெயரும் உமையம்மையாரையே உணர்த்தும். ஆகவே, பரமேசுவரி, மகேசுவரி, **ராஜேசுவரி, புவனேசுவரி** முதலிய நாமங்களும் தேவியாருக்கே உரிய திருநாமங்களாம். **புவனேசுவரி என்பது உலகங்கட்கெல்லாம் ஐசுவரியத்தைக் கொடுப்பவர் எனப் பொருள்படும்."**

தேவி அம்சங்களைப் பற்றி வேறு பல கொள்கைகளுமுண்டு. அவற்றுள் முக்கியமான கொள்கைகளைத் திருப்பராய்த்துறையில் தபோவனம் வைத்து நடாத்திவரும் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் 'சக்தி தத்துவம்' எனும் நூலிற் கூறியுள்ளார்கள். அதனையும் ஈண்டுக் குறிப்பிடுதல் இயைபுடைத்தாகும்.

**தேவியின் அம்சங்கள்**

"வேந்தன் முதல் வேலையாள் வரையில் உள்ள காரியஸ்தர் அனைவரும் அடங்கியது அரசாங்கம். ஒவ்வொரு உத்தியோகஸ்தனுக்கும் பிரத்தியேகமான பிரவிருத்தி உண்டு. அம்முறையில் அம்பாள் அநேக அம்சங்களையுடையவள். யார் யார் எந்த வைபவத்தை விசேஷமாகப் பெற விரும்புகின்றனரோ அதற்கேற்ற தேவியம்சத்தைப் பெரிதும் போற்றி வணங்குகின்றனர். எங்கும் நிறைபொருளாகக் கருதப்படும்போது அவளுக்குப் பூரணி என்றும், பராசக்தி என்றும், ராஜராஜேஸ்வரி என்றும், மூலப்பிரகிருதி என்றும் பெயர். முத்தொழில்களைச் செய்யுமிடத்து பிராம்மணி, வைஷ்ணவி, ருத்ராணி என்று அவள் பேர் படைக்கின்றாள். சகுணபிரம்மம் அல்லது ஈசுவரனுக்கு ஒப்பாகும்போது அவளுக்குத் துர்க்கை என்னும் திருநாமம் வருகிறது. கால சொரூபிணியாகக் கருதப்படும்போது அவள் காளியாகின்றாள். வித்தையின் வடிவமெடுக்கும்போது அம்மாளுக்கு சரஸ்வதி என்றும், தனதானிய வடிவெடுக்கும்போது லக்ஷ்மி என்றும் பெயர். ஞாலத்தை ஆதரிக்கும்போது மகாதேவியானவள் ஜகதாத்திரியாகவும் பவதாரணியாகவும் பாராட்டப்படுகிறாள்."

*— சக்தி தத்துவம்—சுவாமி சித்பவானந்தர் பக். 23-24*

# நாகேஸ்வரி ஆலயம்

**ஐதிகங்கள்**

எவர் எவர் எந்த எந்த மார்க்கத்தைக் கைக்கொண்ட போதிலும் இறுதி இலட்சியம் ஒன்றுதான் என்பதை உணர்த்தும் தலங்கள் இக்காலத்தில் உலகெங்கணும் இருக்கத்தான் செய்கின்றன. எங்கள் சிறிய இலங்கையிலும் கானக மத்தியில் விளங்கும் **கதிர்காமம்**, வானுறவோங்கும் **சிவனொளிபாதம்**, வங்கம் மலி மாதோட்டத்துத் **திருக்கேதீச்சரம்**, கோயிலுஞ் சுனையுங் கடலுடன் சூழ்ந்த **கோணேச்சரம்**, வடிவாம்பிகையின் அருள்பெருகும் **முன்னேஸ்வரம்**, புலகரிச் **சிவன்கோயில்கள்**, கொழும்பு **மாரியம்மன் ஆலயம்**, **பொன்னம்பலவாணேஸ்வரர் ஆலயம்**, வட இலங்கையிலுள்ள **செல்லச்சந்நிதி**, நயினுதிவிலுள்ள **நாகேச்சரம்** ஆதியன சைவர் மட்டுமன்றிப் பிறமதத்தினரும் வழிபடும் பெருமைவாய்ந்தனவாய் அமைந்துள்ளன.

**பாரே கூற வல்லார்**

நயினுதிவிலுள்ள நாகேஸ்வரி அல்லது நாகபூஷணி அம்பாள் ஆலயம் எப்பொழுது தோன்றியது? யார் தாபித்தது? அது எவ்வாறு விருத்தியடைந்து புகழ் பெற்றது? என்றின்னேரன்ன வினக்களுக்கு ஆராய்ச்சியாளர் திருப்தியடையக் கூடியதாக விடை கூறுஞ் சரித்திர நூல்கள் இல்லை. எனவே, செவிவழிவரும் கதைகளைக் (கன்னபரம்பரை) கொண்டும் பிற்காலத்தவர் ஆங்காங்கு எழுதிய குறிப்புக்களைக் கொண்டும் இத்தலத்தின் பூர்விக வரலாற்றினையும் பெருமையையும் ஓரளவுக்கு யூகிக்க முடியுமே யன்றி நிதார்த்தமாக அதுபற்றிக் குறிப்பிடத் துணியவொண்ணுது.

"இலங்கா திபத்தின் உத்தர பாகமாகிய யாழ்ப்பாணத்தைச் சார்ந்த திவுகளிலொன்ருகிய நயினுர் திவிலே சகல லோக நாயகராகிய சிவபெருமானேடு அக்கினியும் வெம்மையும் போலப் பின்னமற்று விளங்கிய பராசக்தியாகிய அம்பிகை மெய்யன்பர்களுடைய வழிபாட்டை யேற்று அவர்கள் வேண்டிய வேண்டிய வரங்களை யெல்லா மீந்தருளும் பொருட்டு ஸ்ரீ நாக பூஷணியம்மை என்னுந் திருநாமமுடையராய் எழுந்தருளி இங்கே வசிப்பவர்களுக்குப் 'பானினைந்தூட்டுந் தாயினுஞ் சாலப் பரிந்து' திருவருள் பாலித்தும் பிறவூர்களில் வசிப்பவர்களுக்குச் சொப்பனத்திற் றேன்றித் தம்மை வந்து தரிசிக்கும்படி உணர்த்தியும் பல அற்புதங்களைப் பிரத்தியட்சமாகக் காட்டியும் **அடித்தடித்து வக்காரமுன்றீற்றிய வற்புதமாக** அவர்களை வலிந்தாட்கொண்டும் விளங்குங் கருணைத் திறம் இவ்வளவிற்றென்று கூறுதற்கரிது.

மகோற்சவ காலங்களிலும் ஏனைய காலங்களிலும் பல ஆயிரக்கணக்கினராக யாழ்ப்பாணத்திலும் பிறவிடங்களிலுமுள்ள அன்பர்கள் வந்து வழிபாடு செய்து அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நால்வகையினைச் சார்ந்த பேறுகளை யெல்லாம் வேண்டிய வேண்டியவாறே பெற்று வருதல் எவரும் நன்கறிந்த உண்மையேயாம்.

''இத்தகைய திருவருட்பெருங் கொடையாளராகிய ஸ்ரீ நாகபூஷணியம்மை எழுந்தருளி யிருக்கும் ஆலயம் முதன்முதல் எக்காலத்தில் எவரால் ஆக்கப்பட்டதென அறியப்படாப் புராதனமுடையது. இந்தியாவிலுள்ள சிவஸ்தலங்கள் போல முற்காலத்தில் சிவசந்நிதி தேவிசந்நிதி முதலியவற்றையும் ஏழு பிரகாரங்களையும் கோபுரங்களையும் கொண்டு விளங்கியது. செம்பினால் ஆக்கப்பட்ட தேரொன்றும் பவளரத்தினம் இழைத்துச் செய்யப்பட்ட தேரொன்றும் இங்கே யிருந்தன. ஒரு சர்ப்பம் இங்கே நெடுநாள் வசித்துத் தவஞ்செய்து தனது சாபம் நீங்கப் பெற்றது. அதனைத் தமது திருமேனியில் அணிந்து சாபநிவிர்த்தி செய்தருளியமையாற்றான் இங்கே எழுந்தருளிய அம்பிகை நாகபூஷணியம்மை யென்னுந் திருநாமம் உடையராயினர்.'' இவ்வாறு நயினார்தீவு **தியாகர் இராமச்சந்திரர்** பூர்வீகக் கதைகளைப் பயபக்தியுடன் குறிப்பிட்டுள்ளார்.[1] ஆதிசேடன், அனுமான், அருச்சுனன், இராவணன் முதலியோர் நாகபூஷணி அம்பாளை வழிபட்டனர் என்பது செவி வழி வரும் செய்தியாகும். ஆபுத்திரன், மணிபல்லவத்திற் பட்டினிகிடந்து உயிர் துறந்த வரலாறு மணிமேகலையில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

**நாகம் அர்ச்சனை செய்தது**

முன்னொரு காலத்தில் நயினாதிவிலுள்ள அம்பிகையை ஒரு நாகம் பூசித்துவந்ததாம். ஒருநாள் அந்நாகம் அர்ச்சனை செய்தற் பொருட்டுப் பூக்கள் கொய்து கொண்டு புளியந்திவிலிருந்து மீளும் வழியில் ஒரு கருடன் அதனைக் கொல்லும்பொருட்டு எதிர்த்து வந்தது. கருடனைக்கண்டஞ்சிய நாகம் கடற்கரைக்குச் சமீபத்திலிருந்த கல்லொன்றினைச் சுற்றிக்கொண்டிருந்தது. கருடனும் அந்த நாகத்தைக் கொல்லாமலும் அதனை விட்டகலாமலும் அதற்கெதிரேயிருந்த கல்லொன்றின்மீது இருந்தது. இங்ஙனம் இவையிரண்டும் பகைமைகொண்டிருக்கும் சமயத்தில், அக்கடல்வழியாக மரக்கலத்திற் சென்ற வைசிகன் ஒருவன் (மாநாய்கன் என்பர் சிலர்) அந் நாகத்தின் பயத்தைக் குறிப்பாலுணர்ந்து, மரக்கலத்தை நிறுத்தி அக் கருடனை விலகும்படி கேட்டான். ''உனது செல்வம் யாவற்றையும் கொணர்ந்து நாகம்மாள் கோயிலுக்குக் கொடுப்பாயானால் விலகுவேன்'' என்றது கருடன். வணிகனும் அங்ஙனமே செய்தான். நாகமும் தனது நன்றியைச் செலுத்தி நயினாதீவை அடைந்தது. வணிகனும் தனது நாட்டுக்குத் திரும்பினான். நடந்தவற்றையெல்லாம் தன் மனைவியிடங் கூறினான். அன்றிரவு வணிகனும் மனைவியும் நித்திரை கொள்ளும்பொழுது ஒரு பேரொளி தோன்றி அவர்களுடைய கண்களைச் சிறிதுநேரம் கூசச்செய்தது. பின்பு அவர்கள் எழும்பிப் பார்த்தபொழுது நாகரத்தினக் கற்கள் அவ்வறையிலே இருப்பதைக் கண்டார்கள். நயினாதிவிலுள்ள அம்பிகையின் திருவருள் இருந்தவாறென்னேயென அவர்கள் வியப்புற்று நயினாதிவுக்கு யாத்திரை செய்யப் புறப்பட்டார்கள். அவர்கள் நயினாதிவுக்குச் சென்று வடகிழக்குக் கடற்கரையில் நாகம்மாளுக்குச் சிறந்ததோர் ஆலயம் கட்டுவித்தார்கள்.

ஏழு வீதிகளும் கோபுரங்களும் அமைத்தார்கள். **நயினாப்பட்டர்** எனும் பிராமண குருவைப் பூசகராக நியமித்தார்கள். இத்தீவுக்கருகில் இப்பொழுதும் பாம்பு சுற்றிய கல், கருடனிருந்த கல் என இரு கற்களைப் பக்தர்கள் காட்டுகின்றார்கள். இக் கற்கள் அலைகளினால் மோதுண்டு இயற்கையாகப் பெற்ற வடிவங்களை ஆதாரமாகக்கொண்டுமேற்கூறிய கதைகள் உருவாகியிருத்தலும் கூடும்.

1. நயினார்தீவு க்ஷேத்திர வைபவம்—தியாகர் இராமச்சந்திரர்.—பக். 3 –5.

### நயினுப்பட்டர்

நாகபூஷணி அம்பாள் கோயிலுக்குப் பூசகராக வந்த நாயனார்பட்டர் அல்லது நயினார்பட்டர் நயினார்தீவு தெற்கு மண்ணிப்புலி என்னும் இடத்தில் வாழ்ந்தனர் எனவும், அது இக்காலத்தில் பட்டர் வளவு என அழைக்கப்படுகின்றதெனவும் திரு. **சு. ஐயாத்துரைச் சோதிடர்** அவர்கள் கூறுகின்றார்கள்.[1]

### வீராசாமிச் செட்டியார்

மேற்கூறிய மாநாய்கரின் வழித்தோன்றலாகிய **வீராசாமிச் செட்டியாரும்** வியாபாரத்தின் பொருட்டுப் பிரயாணஞ் செய்யும்பொழுது நாகபூஷணி அம்பாளை வழிபட்டுச் செல்வது வழக்கம். அம்பாளும் அவருக்குக் காட்சிகொடுத்து அனுக்கிரகஞ் செய்தபடியால் அவர் அம்பாள் கோயிற் றிருப்பணியில் ஈடுபட்டார் என்பது ஐதிகம்.

வெடியரசனுடைய கதையும் ஆதொண்டைச் சோழனுடைய கதையும் ஏற்கெனவே கூறப்பட்டுள்ளன.

### நாகேச்சரம்

பண்டொருஞான்று ஈழநாட்டில் நயினுதீவு எனப்படும் நாகேச்சரத்தில் அல்லது நாகேஸ்வரத்தில் அம்மன் சந்நிதியும் சுவாமி சந்நிதியும் வெவ்வேருக இருந்தனவென்றும், நாகேச்சரத்து அப்பன் **நாகேஸ்வரன், நாகராஜேஸ்வரன், நாகதம்பிரான், நாகநயினர்** எனவும், தேவி **நாகேஸ்வரி, நாகராஜேஸ்வரி, நாகராசேசுவரி, நாகபூடணி, நாகம்மாள்** எனவும் அழைக்கப்பட்டனர் என்றும் பல நூல்கள் குறிப்பிடுகின்றன. அன்றியும் அப்பனும் அம்மையும் கோயில்கொண்டெழுந்தருளியிருந்த ஆலயம் ஏழு வீதிகளையும் கோபுரங்களையுங் கொண்டதாகவும் விலையுயர்ந்த தேர்களையுடையதாகவும் இருந்தது என்பது செவிவழிவரும் செய்தியாகும்.

### நாக வழிபாடு

இப் புனித ஆலயம் சரித்திர காலத்துக்கு அப்பாற்பட்ட நாக வழிபாட்டை எடுத்துக் காட்டும் சின்னமாக அமைந்துள்ளது என்ற கருத்தொன்றும் உண்டு. இக்கருத்தின்பிரகாரம் இலங்கையில் இப் புனித ஆலயத்தைப்போன்ற தொன்மை வாய்ந்த ஆலயம் பிறிதொன்றில்லையெனலாம். "மூலஸ்தான விக்கிரகத்தின் அமைப்பைப் பார்த்தால் அது ஆயிரம் வருடங்களுக்கு முந்தியதாகப் புலப்படுகிறது. ஆனல் நாகப்பிரதிஷ்டை இதற்கு முன்னுல் ஏற்பட்டிருக்கலாம். மூலஸ்தான விக்கிரகத்துக்குப் பின்னர் உள்ள நாகபடம் பார்க்கப் பயங்கரமாகவிருக்கிறது. சிறுவதுபோல் இருக்கிறது" என்று காரைக்குடி எம். செல்லக்கண்ணு ஸ்தபதியார் குறிப்பிட்டுள்ளார்.[2] இந்து மதச் சரித்திரத்தில் நாகபாம்பு ஓர் உன்னத ஸ்தானத்தை வகித்து வந்துள்ளது. இன்னும் வகித்து வருகின்றதென்று கூடச் சொல்லலாம். நாக வழிபாட்டைப்பற்றி முன்னரே கூறியுள்ளாம். "நயினுதிவில் மூலஸ்தானத்தில் அம்மன் உருவம்போல இருப்பது பழைய நாகப் பிரதிஷ்டையே. இது மிகவும் தேய்ந்து அம்மன் உருவம் போலத் தெரிகிறது. இதற்குப் பின்னுல் ஐந்தலை நாகப் பிரதிஷ்டை ஒன்றுண்டு. இந்தியாவிலும் நாக வழிபாட்டுக்கே பிரத்தியேகமாகவுள்ள இவ்வளவு புராதன கோயிலைக் காண்பதரிது. கலப்பற்ற தூய்மையான நாக வழிபாட்டுப் பண்பினை நயினுதிவிற் காணலாம். சரித்திர காலத்துக்கு எட்டாத காலந் தொடக்கமுள்ள கோயில் இது என்பது புலனுகின்றது" என்று இத் தலத்தைத் தரிசித்த தென்னிந்திய சிற்ப சாத்திர

1. நயினார்தீவு என வழங்கும் நாகதீவகத்தலம்—சு. ஐயாத்துரைச் சோதிடர்—பக். 6-7
2. நயினுதீவில் திகழும் நாகபூஷணி அம்பாள் ஆலயம் —"சாது" எழுதியது வீரகேசரி, 11-3-1951

வல்லுநர் திரு.எம்.நரசிம்மன் அவர்கள் தமது கருத்தை வெளியிட்டிருக்கின்றார்கள்.[1] உயிருள்ள நாகபாம்பு வழிபாடுகூட நயினை தீவில் இருந்ததெனச் **செல்வி சி. எவ். கோர்டன் கம்மிங்**[2] குறிப்பிட்டிருப்பதாக வண. ஜேம்ஸ் காட்மன்[3] எடுத்துக் காட்டியுள்ளார். மணமுடித்து நெடுங்காலமாகப் பிள்ளைப்பாக்கியம் இல்லாதிருக்கும் பெண் மணிகள் நாகராஜனை வழிபட்டு, நாகப் பிரதிஷ்டை செய்தால், கைமேற் பலன் உண்டாகும் என்ற நம்பிக்கை நம் மக்களிடையேயுண்டு. நயினைதீவில் வேப்ப மரத்தடியிலுள்ள நாகப்பிரதிஷ்டை இதனை வலியுறுத்துகின்றது

### கோயிலை இடித்தல்

புராதனப் பெருமைவாய்ந்த நாகேஸ்வரி ஆலயம் வர்த்தகரின் பொருள் கொண்டு விஸ்தரிக்கப்பட்டு விளங்குவதைக் கண்ட போர்த்துக்கிசர் இதனைச் சும்மா விட்டுவைப்பார்களா? இந்த ஆலயத்தில் உள்ள பொருள் பண்டத்தை அபகரிக்கும் பேராசைபிடித்த போர்த்துக்கிசர் இதனை அழிக்கத் தொடங்கினர். கோயில் தரைமட்டமாக்கப்பட்டது. இந்த வன்கண்ணரின் கொடிய செயலைக் கண்டு சைவ மக்கள் அனலிடைப்பட்ட புழுப் போலத் துடிதுடித்தனர். தாங்கள் பக்தியுடன் வழிபட்டுவந்த மூர்த்திகளையும் பூசைப் பாத்திரங்களையும் தேர்களையும் அந்நியர் தீண்டக்கூடாதெனக் கருதிய சைவ நன்மக்கள் அவற்றை வெவ்வேறிடங்களில் ஒளித்து வைத்தார்கள். அம்பாளை மேற்குக் கடற்கரையிலுள்ள ஓர் ஆலமரப் பொந்தில் வைத்து வழிபட்டு வந்தனர். இந்த மரம் "அம்மாள் ஒளித்த ஆல்" என வழங்கப்பட்டதென ஓர் ஐதிகமுண்டு. அந்நியர் கோயிலை இடித்த போதிலும் அம்பாள் வழிபாட்டை நிறுத்த முடியவில்லை. அவள் நயினைதீவு மக்கள் ஒவ்வொருவருடைய உள்ளமாகிய பெருங் கோயிலில் உறுதியான இடம்பெற்று விளங்கினாள். அந்நிய மதத்தினர் இன்னல் செய்தவிடத்தும் நயினைதீவு மக்கள் சைவப்பற்றினைக் கைவிடவில்லை யென்பதனை இது உறுதிப்படுத்துகின்றது. இக் கோயிலை அந்நியர் அழிக்க வந்தபொழுது கோயிற் தேர் தானாகவே உருண்டு மேற்குக் கடலில் ஆழ்ந்துவிட்டதாம். ஒரு சமயம் அக்காலச் சைவமக்கள் அதனைக் கடலினுள் தள்ளிவிட்டிருத்தலுங் கூடும். சிற்சில காலங்களில் தேர்முடி கடலில் பௌர்ணமைத் தினத்தில் தெரிகிறது என்ற ஒரு கதையும் அடிக்கடி கேட்கப்படுவதுமுண்டு. இது பண்டைக்காலத்தில் தேர் முதலிய கடலினுள் தள்ளப்பட்ட நிகழ்ச்சியின் எதிரொலியாக இருக்கலாம். இவ்வாலயத்திற்குச் சமீபமாகவிருக்கும் தென்னந் தோப்புக்களிற் சில விடங்களிற் கிண்டிப் பார்த்தபொழுது, தரையின்கீழ் பழைய கட்டடங்கள் காணப்பட்டன. திருக்குள மொன்று வெட்டியபொழுது கோயிற் பூசைக்குரிய வெண்கலப் பொருள்கள் சில வெளிக்கிளம்பின.

### கோயிற் புனரமைப்பு

டச்சுக்காரர் ஆட்சியின் பின்னர் நயினைதீவில் மீண்டும் நாகேஸ்வரி ஆலயம் சிறிய அளவிற் கட்டப்பெற்றது. எனினும் அங்கே தாபிக்கப்பெற்றிருந்த சிவலிங்கத்தைச் சைவர்கள் தாம் மறைத்து வைத்திருந்த இடத்திற் காணாமையாற் பெரிதும்

1. *The Religious Associations of this Island are probably much earlier than the date of the Buddha—'Nagadipa and Buddhist Remains in Jaffna'—by Dr. P. E. Peris, R A S C B No.* 70 *p* – 13.
2. *Two Happy Years in Ceylon—Miss C. F. Gordon Cumming.—Vol. I. p.* – 127.
3. *Hinduism in Ceylon—by Rev. James Cartman.—p.* - 84.

கவலைகொண்டார்கள். எனினும் நயினாதீவுக்கு வடபால் உள்ள புலியேத்தி அல்லது புளியந்தீவு எனும் சிறுதீவில் பழைய சிவலிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டிருப்பதாகக் கேள்வியுற்ற சைவர்கள் ஒருவாறு மனந்தேறினார்கள். இக் கோயில் நாகதம்பிரான் கோயில் என அழைக்கப்படுகின்றது. புலியேத்தியிலுள்ள நாகதம்பிரான் கோயிலிலே தாபித்திருக்கும் சிவலிங்கம் நயினாதீவு நாகேஸ்வரி ஆலயத்தின் சுற்றுப்பிரகாரத்தில் முன்னரே பிரதிஷ்டை செய்யப்பட்டிருந்த சிவலிங்கங்களுள் ஒன்றாயிருத்தல் கூடும் என்ற கொள்கையும் உண்டு.

டச்சுக்காரர் ஆட்சிக்குப் பின்னர் நாகேச்சரத்தில் தேவி ஆலயமே முதன்மை பெற்றுளதெனக் கருத இடமுண்டு. அற்றன்று; பண்டுதொட்டு இது தேவியாலயமாகவே விளங்கிற்று என வாதிப்பாருமுளர்.

## இப்போதுள்ள கோயிலமைப்பு

நயினாதீவின் கிழக்குத் திசையிற்றான் துறைமுகம். இத் துறைமுகத்திலிருந்து செல்லும் பாதை அம்பாளின் கீழைவீதி வரை சென்று பின்னர் தெற்கு நோக்கிச் செல்கின்றது. எனவே நயினாதீவுத் துறைமுகத்தில் வந்து இறங்குகின்ற சகலரும் அம்பாளிடம் விடை பெற்றே ஊருக்குள் உலாவவேண்டும் என்ற முறையிற் கோயில் கிழக்கு நோக்கிய சந்நிதியுடையதாய்க் கட்டப்பட்டுள்ளது. யாத்திரிகர் நாவாயில் வரும்பொழுதே தூரத்தில் தூலலிங்கமாகிய கோபுரத்தைத் தெரிசித்து அம்பாளுடைய புனித தலத்திற் கால் வைக்கின்றனர். கோயிலும் அதனைச் சார்ந்த நிலமும் 150 லாச்சம் விஸ்திரணமுள்ளது. கோயிலும் வீதியும் 15 பரப்பு வரை இருக்கும். மூர்த்தி தலம் தீர்த்தம் எனு மும்மையாலும் சிறந்து விளங்குவது இந்த நாகேஸ்வரி ஆலயமாகும்; கோயிலுக்குத் தென்புறத்திலும் வடபுறத்திலும் தீர்த்தம் உண்டு.

## இராமலிங்கர் இராமச்சந்திரர்

யாழ்ப்பாணக் கச்சேரியில் சைவசமயக் கோயில்களைப் பதிவு செய்து வைத்திருக்கும் பழைய இடாப்பு ஒன்று உண்டு. இது 1882ஆம் ஆண்டளவில் தயாரிக்கப்பட்டது. அதில் இந்த நாகபூஷணி அம்பாள் ஆலயத்தைப்பற்றி எழுதப்பட்டிருக்கும் விவரம் பின்வருமாறு :

நாகபூஷணி அம்மன் கோவில்

இராமலிங்கர் இராமச்சந்திரர் 1788இல் கட்டியது. மனேச்சர்: இராமலிங்கர் கார்த்திகேசரும் பிறரும். கல்லுக் கட்டடம்

திருவிழா : ஆண்டுக்கொருமுறை ஆனி 10ஆந் தேதி தொடக்கம் 20ஆந் தேதி வரை 10 நாட்கள் திருவிழா.

கோயில் வீதியில் மக்கள் அம்பாளைக் காவிக்கொண்டு வலம் வருதல் அல்லது தேரில் வலம் வருதல்.

திருவிழாக் காலங்களில் 10,000 பேர் வரை வருகின்றனர். யாழ்ப்பாணத்திலும் அயலிலுள்ள தீவுகளிலுமிருந்து யாத்திரிகர் வருகின்றனர்.

மேலே குறிப்பிடப்பட்ட இராமச்சந்திரரின் ஆண் சந்ததியினரே இக் கோயில் மனேச்சராக இருந்துவருகின்றனர் எனச் சொல்லப்படுகின்றது.

காலத்துக்குக்காலம் இக் கோயிலில் அநேக திருப்பணிகள் நடைபெற்று வந்துள்ளன. திருக்கோயிலின் கீர்த்திக்கியைய வானுற ஓங்கிநிற்கும் கோபுரமொன்று கிழக்கு வாயிலில் அமைக்கப்பெற்றுள்ளது. இத் திருப்பணியில் வட்டுக்கோட்டையைச் சார்ந்த இரகுப்பிள்ளை மணியம் அவர்கள் அதிக அக்கறை எடுத்து வந்தார்கள். பின்னர் வேலணைச் சோமசுந்தரமணியம்

அவர்களும் இத் திருப்பணியில் ஈடுபட்டுழைத்தனர். இந்தக் கோபுரம் 1935ஆம் ஆண்டளவிற் கட்டப்பெற்றது. இந்தக் கோயில் ஏனைய சாதாரண கோயில்களைப் போலவே கர்ப்பக் கிருகம், அர்த்த மண்டபம், மகாமண்டபம் முதலியவற்றைக் கொண்டுள்ளது. கோயிலின் தென்புற உள்வீதியில் தேவஸ்தான அலுவலகம் உண்டு. மேற்கு வீதியில் பிள்ளையார் கோயில், வாகனசாலை, சுப்பிரமணியர் கோயில் என்பவை உண்டு. கிழக்கு வீதியில் நவக்கிரகங்கள், வைரவர் கோயில் முதலியன உண்டு. தேரோடும் வெளி வீதியில் வேப்ப மரங்கள் காணப்படுகின்றன. யாத்திரிகர் தங்குவதற்கு வசதியான கிழக்கு மடம், மேற்கு மடம், தெற்கு மடம், தென்மேற்கு (சோமபதி) மடம், வடமேற்கு (நகரத்தார்) மடம், வடக்கு (இளந்தையசிங்க முதலியார், வட்டுக்கோட்டை) மடம், குணரத்தின மடம் ஆதியனவுண்டு.

### விமானப் புனர்மைப்பு

நாகபூஷணி அம்பாள் கோயிலின் விமானப் புனரமைப்பு வேலையை, ஸ்தபதிகள் பரம்பரையில் உதித்தவரும் சிற்பத் தொழிலில் புகழ் பெற்றவருமாகிய காரைக்குடி திரு. எம். செல்லக்கண்ணு ஸ்தபதியார் 1951ஆம ஆண்டு தை மாதம் மேற்கொண்டார். பாண்டிய நாட்டுச் சிற்ப முறையில் இரண்டு நிலை விமானம் அமைக்கப்பட்டது. அம்பாள் கோயிலின் விமான வேலையை முடித்தபின்னர், பரிவார மூர்த்திகளின் பண்டிகைகளும் திருத்தியமைக்கப்பட்டன. 26-4-51இல் ஸ்ரீ நாகபூஷணாம்பிகை புநராவர்த்த சம்புரோக்ஷண மஹாகும்பாபிஷேகம் நடைபெற்றது. அப்பொழுது வெளிவந்த விஞ்ஞாபனப் பத்திரிகையில் இந்தத் தலத்தின் பெருமை இரத்தினச் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளது. அது பின்வருமாறு:

ஸ்ரீ விராட்புருடனது சரீரமாகிய பிரமாண்டத்தின் இடை நாடிக்கு ஸ்தானமென்று சாந்தோக்கியம் முதலிய உபநிஷத்துக்களிலே எடுத்தோதப்பெற்றதும், இவ்விலங்கா தீபத்தின் கண்ணே அனேகம் சிவஸ்தலங்களோடு கூடியதும், வடமேற்றிசையில் ஆழிய சாகரம் மத்தியில் தோன்றி சப்தத்வீபங்களுட் சிறப்புற்று விளங்கும் நயினார்தீவில் இற்றைக்குப் பல்லாயிரம் வருடங்களுக்கு முன் சர்வலோக ரக்ஷகியாகிய உமையம்மையாருக்குப் பிரபல வாசஸ்தானங்களாயமையப்பெற்ற அறுபத்துநான்கு பீடங்களுள் ஒன்றாயதும், நாகர்களினால் பூஜிக்கப் பெற்றதும், அருச்சுனன் முதலிய அரசர்களால் தரிசிக்கப்பெற்றதும், சிவானுபூதிச் செல்வர்களாலும் பிறராலும் சிவபூமி சுவர்ணபூமி புண்ணிய பூமி அனுக்கிரக ஸ்தலம் என்று வியந்து கூறப்பெற்றதும், இவ்விலங்கா தேவியின் பராசக்திக்கு முக்கிய ஸ்தானமாகவுள்ளதும், சர்வான்மாக்களுக்கும் மனோபீஷ்டப்படி அனுக்கிரகிக்கும் சர்வரோக நிவாரணியும், ஆன்மாக்களது தியானாதிகளுக்குத் தாம் அகப்படுதல் வேண்டுமென்னுந் திருவருளினாலே சக்திகாரியமாகிய உருவத் திருமேனி கொண்டு திவ்விய மந்திர சிம்மாசனத்தின்மீது ஸ்ரீ நாகராஜேஸ்வரி எழுந்தருளியிருக்கும் திருக்ஷேத்திரத்திலே......''

சலாபத்திலுள்ள முன்னேஸ்வரத்தில் வடிவாம்பிகைக்கு ஸ்ரீ சக்ரபூசை நடாத்தி வந்த பிரமஸ்ரீ சோமாஸ்கந்தக்குருக்களின் சீடராகிய நயினாதிவு பிரமஸ்ரீ சுவாமிநாதக் குருக்கள் அவர்கள் ஸ்ரீ சக்ரபூசையை நாகேஸ்வரி ஆலயத்திலும் ஆரம்பித்து வைத்தார்கள். குருக்கள் அவர்கள் கோயிற் கிரிகைகளைப் பயபக்தியுடனும் முறை பிறழாமலும் செய்வதைப் பார்த்துக் கொண்டிருப்பவர் உள்ளத்தில் பக்தி தானாகவே அரும்பிவிடும். இவரிடம் கற்ற நயினாதிவு பிரமஸ்ரீ கயிலாயநாதக் குருக்கள் அவர்களும் கோயிற் கிரிகைகளை முறையாகச் செய்வதிற் பிரசித்திபெற்று விளங்குகின்றார்கள்.

### தியானஞ் செய்வதற்கேற்ற ஆலயம்

"அந்தராத்ம யோகத்தில் ஈடுபட்டவர்களுக்குத் தியானஞ் செய்வதற்குத் தகுந்த சூழ்நிலையை நயினுதீவு அம்பாள் கோயிற் சுற்ருடலிற் காணலாம். நாலா பக்கமும் கடலினுற் சூழப்பட்டு அழகிய சிறு தீவாக நயினுதீவு விளங்குகிறது. பௌர்ணிமைத் தினத்தன்று நடுநிசியின் போது ராஜகோபுரத்தின் கீழமர்ந்து தியானஞ் செய்தால் பயங்கரமான தொரு தெய்வீக சக்தி நம்முள் இறங்குவதை உணரலாம். பயங்கரமாக அச் சக்தி இருப்பதற்கு நம்மிடமுள்ள குறைபாடுகளே காரணமாகும். சுயநல வழிகளில் அகம்பாவத்துடன் செல்லும் நம் மனசானது, சக்திவாய்ந்த தெய்வசாந்நியத்துடன் சம்மதப்படும்பொழுது ஒருவித அதிர்ச்சியை அடைகிறது. இந்த அதிர்ச்சியானது 'நான்' என்ற அகம்பாவத்தை ஈடாகச் செய்வதற்கே ஏற்படுகிறது. 'நான்' என்ற உணர்ச்சியைப் பரித்தியாகஞ் செய்ய நாம் இலேசில் இடங் கொடுப்பதில்லை. ஆனுல் 'நான்' என்ற உணர்ச்சி அற்றுப் போகாத விடத்துத் தெய்வ அருள் கிட்டாது"[1] சித்தர்களும் யோகிகளும் இந்தச் சூழ்நிலையைப் பெரிதும் விரும்பிச் செல்கின்ருர்கள்.

### ஆலய பூசையும் விழாவும்

உஷத்காலம், காலைசந்தி, உச்சிக் காலம், சாயரட்சை, அர்த்தசாமம், என ஐந்து கால நித்திய பூசை நடைபெறுகின்றது. கோயிலுக்கென நித்திய மேளம் உண்டு. சிவன், அம்பாள், விநாயகர், சுப்பிரமணியர், விஷ்ணு முதலிய ஐவரின் பூஜைத் தினங்கள் ஒவ்வொரு மாதத்திலும் நடைபெறும். ஆனி மாதத்தில் மகோற்சவம் நடைபெறும். திருவிழா பத்து நாள் நடைபெறும். புரட்டாதியில் நவராத்திரி பூசை சிறப்பாக நடைபெறும். பகலிற் சங்காபிஷேகமும் இரவில் ஸ்ரீ சக்கர பூசையும் நடைபெறுவதுடன் விஜயதசமியன்று அம்பாயுத பூசையும் வன்னிவிருட்ச பூசையும் நடைபெறும்.

இவ் வாலயத்திற் பாரம்பரியமாகச் சந்தான கோபாலப்பிரதிஷ்டை செய்து அளவிறந்த பக்தர்கள் புத்திர சந்தானமுடையவர்களாய் மீண்டும் அம்பாள் தரிசனை செய்து விலைமதித்தற்கரிய திருவாபரணம், வாகனம், தீபம் முதலியவற்றைக் காணிக்கையாகக் கொடுத்திருக்கின்றனர். இந்தக் கோயிலில் அழகிய கைலாச வாகனம், சர்ப்ப வாகனம், காமதேனு வாகனம் முதலியன உண்டு. இவை யாவும் பக்தர்கள் காணிக்கையாகக் கொடுத்து உதவியனவாகும்.

### ஆலய நிர்வாகம்

யாழ்ப்பாணத்திலுள்ள சைவக்கோயில்களுக்குச் சாதாரணமாக ஏற்படும் நோய் அம்பாள் ஆலயத்தையும் விட்டுவிடவில்லை. ஆலய நிருவாகம் சம்பந்தமாக வழக்குகள் தொடரப்பட்டன. ஆனுல் இப்பொழுது நிர்வாகப் பொறுப்பு ஒன்பது அங்கத்தவர்களைக்கொண்ட தர்மகர்த்தா சபையிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. இதன் பயனுக ஆலய நிர்வாகஞ் சீராகவுஞ் சிறப்பாகவும் நடைபெறுகின்றது.

---

மன்றின்மலி விளக்கெனலாம் மருவுமுக நகைபோற்றி
ஒன்றியபங் கலநாணின் ஒளிபோற்றி உலகும்பர்
சென்றுதொழ அருள்சுரக்குஞ் சிவகாம சுந்தரிதன்
நின்றதிரு நிலைபோற்றி நிலவுதிரு வடிபோற்றி.

—கோயிற்புராணம்—பாயிரம்.

1. நயினதீவில் திகழும் நாகபூஷணி அம்பாள் ஆலயம்—'சாது'—வீரகேசரி, 11-3-1951.

# இரதோற்சவம்

**அம்பிகையின் அருளொழுகு வடிவம்**

நாகேஸ்வரியின் சாற்றற்கரிய சாந்நித்யத்தையும் தேஜோமயத்தையும அருளொழுகு வதனத்தையும் நீங்கள் உண்மையிற் கண்டு கடைத்தேற விரும்பினுல் இரதோற்சவத்துக்கு ஒருமுறை சென்று பாருங்கள். அந்தச் சக்தி வெள்ளத்தில் இறங்கி ஆடிப் பாருங்கள். அம்பிகையின் திருமுன் நின்று அனுதினமும் போற்றுந் தொண்டர்தம் பெருமை யார் சொல்ல வல்லார் என்று வரகவி நயினை நாகமணிப் புலவரே கூறுவாராயின், அம்பிகை தேரின் மீது இவர்ந்து பல்லாயிரக்கணக்கான பக்தர்களுக்குக் காட்சியளிக்கும் அற்புதக் காட்சியை ஒரு முறையாவது காணப்பெறுவீர்களாயின், நீங்கள் எடுத்த பிறவியாற் பயனடைந்துவிட்டீர்கள் என்று சொல்லலாம்.

''எழுதரு மறையுங் கடந்தநா யகிநின்
 திருந்தருள் செய்யுமத் தலத்திற்
பழுதறுஞ் சைவ தந்திர முறையாற்
 பத்தியோ டவளடி பரசி
யழுதகண் ணெடுமெய் யரும்பநாத் தழும்ப
 வகங்குழைந் தென்பெலா முருகத்
தொழுதகை யொடுநின் றனுதினம் போற்றுந்
 தொண்டர்தம் பெருமையார் சொல்வார்.

வாய்ந்தசெந் திருவுங் கலைகளுங் கானை
 மலங்குமன் பிணையுளங் கானை
வேய்ந்தவெம் பிணியாங் கடற்கரை காண
 வுடற்றிடு மறலிபின் கானை
வாய்ந்தமந் திரத்தின் பொருளது காண
 வம்பிகை யோங்குசி றடிகள்
காய்ந்தபுன் கண்க ளாமெனு தனிநேர்
 காணுவார் கண்களே கண்கள்.

ஈர்த்தவே எருங்கைச் சிலையலர் கூம்ப
 வின்றிடுங் கருப்பைகள் கூம்பப்
போர்த்ததீ நிரையக் குழிகள்வாய் கூம்பப்
 புறச்சம யாந்தகங் கூம்ப
மூர்த்தமா யிருந்த கவுரியா லயத்து
 முன்புநின் றன்பொடு தலைமேற்
கூர்த்தநீ டுரக்கை இவையனு துயர்த்திக்
 கூப்புவார் கைகளே கைகள்.

— நயினைமான்மியம் மூர்த்திவிசேடச் சருக்கம்.

ஆனிமாதத்தில் இலங்கையின் பல பாகங்களிலுமிருந்து வடபகுதிக்கு யாத்திரிகர் திரள்திரளாகச் செல்வதைக் கண்டால் அவர்கள் நயினுதிவு நாகம்மாள் ஆலயத்துக்கே செல்கின்றனர் எனத் திடமாய்க் கூறிவிடலாம். பூசைகளுக்கும் நேர்கடன்களுக்குமாக நாளாந்தம் மக்கள் இக் கோவிலுக்குச் சென்றுகொண்டிருக்கின்றன ரெனினும், ஆனி மாதத்திற் பத்து நாட்களுக்கு அம்பாள் பவனி வந்து பக்தர்களை ஆசிர்வதிக்கும் திருவிழா மிகச் சிறப்பாக நடைபெறுங் காலத்தில் மக்கள் பெருந்தொகையாகச் செல்கின்றார்கள். அம்பாள்மீது கொண்ட ஆராத பக்தியினுல் மக்கள் பிரயாணக் கஷ்டங்களையும் பொருட்படுத்தாது 'மோட்டார் லாஞ்சி'களிலும், பாய்விரித்தோடும் தோணிகளிலும், வத்தைகளிலும், வள்ளங்களிலும் இங்கு வந்து குவிகின்றனர். இந் நாட்களில்

துறைமுகத்தில் நூற்றுக்கணக்கான தோணிகளும் மோட்டார்ப்படகுகளும் பல்லாயிரக்கணக்கான யாத்திரிகர்களும் போய்வந்துகொண்டும், ஏறி இறங்கிக் கொண்டும் இருப்பதைப் பார்க்கப் பார்க்க, புராணங்களிற் கூறப்பட்ட சத்த தீவுகளில் ஒன்று இதுதானோ என்ற ஐயம் ஏற்படும். பூவுலகைக் கடந்து தெய்வலோகத்திற் சஞ்சரிப்பதைப் போன்ற பக்திபரவசம் ஏற்படும். இத்தீவுக்கு முதன் முதலாகச் செல்லும் ஒருவர் வட இலங்கையிற் பெரிய துறைமுகம் நயினாதீவுதான் என்று முடிவுகட்டிவிடக் கூடும். இவ்வாறு அநேக நாவாய்கள் தங்கிநிற்பதை உற்று நோக்குமிடத்து நாகேஸ்வரி தான் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் தலத்தின் பண்டைப் புகழை ஒருவாறு எங்கள் அகக் கண்முன் கொண்டுவருதற்கு ஏற்படுத்திய ஜாலவித்தை யென்றுஞ் சொல்லலாம். வர்த்தகக் கப்பல்கள் இடையிலே தங்கிச் செல்லும் பெரிய துறைமுகம் ஒன்று பண்டைக் காலத்தில் இங்கிருந்த தென்பதை இத்தலத்தின் வரலாற்றிற் குறிப்பிட்டுள்ளேன்.

திருவிழாத் தொடங்கிவிட்டால், அதற்கு வரும் பக்தர்களை நயினாதிவு மக்கள் அன்புடன் வரவேற்றுத் தங்கள் வீடுகளிலுங் குடிசைகளிலுந் தங்குதற்கு இடங்கொடுத்து ஆதரவளிக்கின்றனர். சனநெருக்கம் அதிகமாயிருப்பதாற் பக்தர்கள். கோயில்வீதிகளில் பரந்த வேப்ப மரநிழலிலும் தோட்ட வெளிகளிலும் கூடியிருந்து அம்பாளின் அருட்கோலத்தைத் தரிசிக்க ஆயத்தஞ் செய்வார்கள்.

பக்தர்கள் அதிகாலையில் துயில்விட்டெழுந்து காலைக்கடன் முடித்தபின், தாமரைக்குளம்போன்ற நன்னீர்க்குளங்களுக்குச் சென்று நீராடுவது கண்ணுக்கு இன்பமளிப்பதாகும். ஒவ்வொரு வீட்டிலுள்ள கிணறுகளைச் சுற்றியும் பக்தர்கள் கூடி நிற்பதைக் காணலாம்.

அதிகாலை ஆறு மணிக்கு முன்னரே அம்பாள் தரிசனத்துக்காக மக்கள் கோவிலை யடைகின்றார்கள். எங்கே பார்த்தாலும் தொழுவாரும் அழுவாரும் புரளுவாருமாகவே காணப்படுவர். தம்மை மறந்து, தம் மனைவி மக்களை மறந்து, அகிலாண்ட ஈஸ்வரியின் அடிக்கமல பாதங்களையே சிந்தித்து நின்று உரோமஞ் சிலிர்ப்ப உரைதடுமாறி, 'தாயே! தாயே! அரோகரா! நாகம்மாளுக்கு அரோகரா!' என்று கற்றாவின் மனம்போலக் கசிந்து கண்ணீர்மல்கிக் கதறும் மக்களின் ஒலி பாம்பன் கடலொலியையும் மலையடிவார அலையொலியையுங் கடை ஒலியையும் மீறிவிடும்.

புயற்காற்றடித்து ஏழாற்றுப் பிரிவு குமுறிக்கொண்டிருக்குங் காலத்திற் பல்லாயிரக் கணக்கான பக்தர்கள் யாத்திரை செய்வதில் ஈடுபட்ட போதிலும் அம்பாள் கடைக்கண் பார்வை செய்தருளுவதால், அந்தயாத்திரிகர்கட்கு எவ்வித தொல்லையும் ஏற்படுவதில்லை. நயினாதிவிலுள்ள தொண்டர் சபைகளும் முன்னேற்றச் சங்கங்களும் பொலிசாரும் ஒருங்கு சேர்ந்து எடுக்கும் நடவடிக்கைகள் மக்கள் கூட்டத்தில் நடைபெறக்கூடிய சாதாரண குழப்பங்களைக் குறைக்கின்றன.

### அம்பாள் அலங்காரத் தேரில் வீற்றிருக்கும் அற்புதக் காட்சி

பால் நினைந்தூட்டுந் தாயினும் சாலப் பரிவுள்ள உலக நாயகியாகிய நாகேஸ்வரி கருணைத் திருக்கோலத்துடன் வானளாவிய அலங்காரத் தேரின்மீது வந்து பக்தர்களுக் கருள் புரியுங் காட்சியைக் காணில் கருங்கல் மனமுங் கசிந்துருகும். திருவிழாவில் பத்தாம் நாளாகிய தேர்த் திருவிழாவன்று அம்பிகையின் அருள்வடிவக் காட்சியோர் அற்புதக் காட்சி; ஆனந்தக் காட்சி! சொற்பிரபஞ்சத்துக்குள் அடங்காத காட்சி! நினைந்து நினைந்து நெக்குநெக்குருகவேண்டிய காட்சி; சொல்லொணாக் காட்சியைத் தாமாகவே யுணர்ந்து இன்புற்றிருக்க

வேண்டிய காட்சியை நாயேன் சொல்லத் துணிந்த பெருங் குற்றத்தை அம்பாள் பொறுத்து இரட்சிக்குமாறு கும்பிடுகின் றேன்.

அம்பாளின் அற்புத வடிவத்தைச் சொல்லோவியத்தில் தீட்ட முயன்றனர் புலவர் பலர். அவள் பக்திவலையிற் படுப வள் ஆதலின் பக்தி நிரம்பிய அடியாருக்கு எளியள் அல்லவா? ஆகவே அவளை ஒரு வாறு வர்ணிக்க முயன்றனர். வரகவி முத்துக்குமாருப் புலவர்,

"பேர்தங்கு மகிலான் டடுக்குமதி லூறுபொருட்
பிரிவுஞ் சராசரமெனும்
பெருயிர்க ளுந்தந்து பாதுகாத் தருளுமுன்
பெருமையாம் பாடவெளிதோ

என்று கைவிட்டுவிட்டார். எனினும் அவர் வரைய முயன்ற சொல்லோவியம் இது :

சோடுற்ற நவரத்தின கும்பியும் மேலிட்ட
தொங்கலும் அகிலளாவிச்
சொருகிட்ட கொண்டையுஞ் சுட்டியு
மலர்க்கையாற்
றெட்டிட்ட சிந்தூரமும்
தோடுற்ற கொந்தளக மரகதக் கொம்புமார்
துணைவிழியி லெழுதுமையும்
துகளற்ற வெண்டரள முருகுநற் பவளவாய்த்
துருவமொளிர் நளினமுகமுந்
தேடுற்ற செங்கமல பொற்பதமு மழகான
திருமெய்யு மறிவினுலே
தெரிசிக்க வருள்தந்து நீடாயு ளும்பெருஞ்
செல்வமுந் தரவேண்டு(ம்)நீ
நாடுற்ற பலவளமு முறையுமிகு நயினு
நகர்க்கண்மரு வுங்கௌரியே
நாகமணி யும்பரமர் பாகமுறு மேகசுக
நாகயிஸ் வரிஅம்மையே

யாழ்ப்பாணத்தில் சாந்தயர் மடத்துக் கண்மையில் வாழ்ந்த புலவர் ஒருவர் யாழ்ப் பாணம் வந்து தோணியேறி நயினுதிவுக்கு வந்து அம்பாளைத் தரிசித்து அவள் அழகைப் பாடத் தொடங்கினர். அவரும் கடைசியிற் கூத்தாடத் தொடங்கிவிட்டார். **நயினையாத்திரை விளக்கம்** என்ற பக்திச் சுவை ததும்பும் பாடலில் ஒரு பகுதியை மட்டும் எடுத்துக்காட்ட ஆசைப்படுகின் றேன்.

மங்கள நயினர்தீவில் வாழும்—மாதா
நாகபூஷணிதன் மலர்ப்பதத்தை
யிங்கென் மனத்திருத்தினேன்
எனக்கேற்ற யாத்திரைக்கு
நல்லவரந் தாவென்றேன்
நல்லவரம் பெற்றுமகிழ்ந்தேன்—வெளிப்பட்டு
நானும்வந்தவழியிற் சாந்தயர்மடத்திற்
சொல்லும் பிள்ளையாரைத் தொழுதேன்
அந்தத் தும்பிமுகன்பாதஞ்
சிரமேற் கொண்டேன்

..................................................

வந்துகரை சேர்ந்தவுடனே—நயினர்தீவில்
வத்தையை விட்டிறங்கினேன்
மனம் பூரித்தேன்
முந்துநாக பூஷணிவாழும்—ஆலயத்தை
முழுச் சந்தோஷமாய்க் கண்டு
முன்வணங்கினேன்.
மூலத்தானத் தழகுங் கண்டேன்—அந்த
மூர்த்திகரத்தை யென்னென்று
முழுதுஞ் சொல்வேன்
கோலநாகபூஷணித் தாயார்—நன்மைகள்
கூட்டிவைக்க வந்து
குடிகொண் டருளினர்.
அபயவரதச் சிறப்பும்—கருணைசேர்
அருட்கண் படைத்த
நெடுங்கடைக்கண் பார்வையும்
உபயபாதத்தி னழகும்—பாடகம்
உற்றதண்டை கொலிசு சிலம்பழகும்
பத்துவிரல் மோதிரமும்—நல்ல
பருத்தவொட்டி யாணத்தின் பளபளப்பும்
முத்துமூக் குத்தியி னழகும்—நேராம்
மோகனமாலை பிலாக்குற்ற வழகும்
நங்கணங்கள் கம்மலழகும்—காதணி
காப்பும் வளையலணிந்த காட்சியழகும்
பொங்கு மங்கலியத் தழகும்—நல்ல
பொற்பட்டாடை யளகத்தின் பொலிவழகும்
கண்டேன் கண்டதிசயித்தேன்—என்னைக்

காப்பாற்றிக்கொள் தாயே என்று
காலில் விழுந்தேன்
கொண்டேன் பாவசமாய்—மெய்யாய்க்
குதுகலித் தேனின்று கூத்தாடினேன்.

**வேலணைத் தம்பு உபாத்தியார் கண்ட காட்சி இது:**

அரதனப் பன்மையின் மாற்றுயர் பசும்பொன்னி
னணிமுடியு மழகொழுக்கும்
அரியபொற் சுட்டியும் பிறையுமொவ் வாதநுத
லணியுமணி மூக்குத்தியும்
இருபரிதி யென்னவொளிர் கம்மலுந் தோள்களி
லிலங்குசாம் புனதவளையும்
இணையுமுன் கைகளிற் கங்கணமு மணிவிரலி
லங்குமரி யாழிவகையும்
பரிதிமுத லாவென்று கோளெலா நாளெலாம்
படிமுறையி னன்னுமதுபோற்
பளபளப் புறுமதா ணிகளுமே கலையுமொண்
பட்டுடையு மொட்டியாணமும்
சரியுஞ் சதங்கையும் பாடகமு மிளிரவரு
டாவருங் காலமிதுகாண்
சரணநா கேசுவரி யேதயா நிதியே
சகம்போற்று பெருமாட்டியே

— *திருநாகதீபப் பதிகம்*

நயினாதீவு ஸ்ரீ நாகபூஷணி அம்பாள் கோயிலிலுள்ள உற்சவ மூர்த்தியைப்பற்றி **திரு. செல்லக்கண்ணு ஸ்தபதியார்** பின்வருமாறு தெரிவித்துள்ளார்:—

"ஸ்ரீ நாகபூஷணி உற்சவ விக்கிரகம் லக்ஷணமாகவும், சாந்நித்தியம் பொருந்தியதாகவும், தேஜோமயமாகவும் இருக்கிறது [நவராத்திரி காலங்களில், ஸ்ரீ சக்கர பூஜையின் மகத்துவத்தினாலும் மற்றும் சில அமானுஷிக காரணங்களாலும் இவ்விக்கிரகம் அசாதாரண சோபையுடன் காட்சியளிப்பதை எவருங் கண்டு களிக்கலாம்.]

"மிகுந்த அழகும் சாந்நித்தியமும் பொருந்திய இந்த உற்சவ விக்கிரகம் தேஜோமயமாக விளங்குகிறது. அதின் பூரண சோபையைக் கண்டின்புற விரும்புவோர் அங்கே ஆனி மாதத்தில் நடைபெறும் திருவிழாவின் இறுதி நாளன்று அம்பாள் தேரில் எழுந்தருளுங் காட்சியைப் பெறவேண்டும்" என்று சுருங்கச் சொல்லி விளங்கவைத்துள்ளார் ஆத்மஜோதி ஆசிரியர் திரு. க. இராமச்சந்திரன் அவர்கள்.

ஆகவே நயினாதீவுத் தேர்த்திருவிழாவின் போது அம்பிகையை வணங்குவது பெறற்கரிய பெரும் பேருகவே சைவ நன்மக்கள் கருதிவருகின்றார்கள்.

சர்வலோக நாயகியாகிய நாகேஸ்வரி அம்பாள் அலங்காரத் தேர்மிதிவர்ந்து வீதிவலம்வந்து இருப்புத்தானத்துக்கு வரும்வரை பக்த கோடிகள் நற்றவமிக்க நயினையம்பதியை விட்டகலமாட்டார்கள். அதுவரை யாத்திரிகர் விரும்பினாலுங்கூட நயினாதிவை விட்டுப் புறப்பட முடியாது. வத்தைக்காரர் புறப்படவே மறுத்துவிடுவர். வீதிவலம் வரும் அம்பாள் மீண்டும் இருப்பிடத்துக்கு வந்ததும், மக்கள் அர்ச்சனை முதலியவற்றைச் செய்வித்துத் தம் இறுதி வழிபாட்டையும் ஆற்றி அன்னையிடம் விடைபெற்றுக்கொண்டு பாலத்தை நோக்கிச் செல்வார்கள். அங்கே படகுகளிலும், லாஞ்சிகளிலும், போட்டுகளிலும், வள்ளங்களிலும் மக்கள் ஒருவரையொருவர் முந்திக்கொண்டு ஏறும்வரையும், 'அரோகரா அரோகரா' என்று சொல்லும் நாவும் அவ்வாறு அடிக்கடி சொல்லிச் சொல்லிப் பயின்ற வாசனை காரணமாகப் பண்பட்ட உள்ளமும் படைத்த மக்கள் அரோகராச் சொல்லிப் பாயிழுத்து நாவாய்களிற் செல்வதால் சனத்தொகை சிறிது சிறிதாகக் குறைவடைவதையும் கடைசிவரை ஒருவர் பார்த்துக்கொண்டிருந்தால், சுவர்க்கலோகத்துக்குப் போய் மீண்டுவந்திருப்பதாகவே தோன்றும். நம் வாழ்வென்பது ஓர் சந்தையிற் கூட்டம் என்பதும், மனத்திற் பதியாமற் போகாது.

இரதோற்சவத்தின் பின்னர் அன்று சாயந்தரம் தீர்த்தோற்சவம் நடைபெறும். இது துறைமுகத்தண்மையில் நடைபெறும். அடுத்த நாள் இரவு தெப்போற்சவம் நடைபெறும். இரு வத்தைகளை ஒன்றாகப் பிணைத்து அதன்மேல் அழகிய மேடையமைத்து அதன்மேல் அம்பிகையை வாகனத்தில் இவர்ந்த வண்ணம் எழுந்தருளச் செய்து மின் விளக்குகளால் இரவைப் பகலாக்கி நடைபெறும் இத் திருவிழா கண்கொள்ளாக் காட்சியாகும்.

# அம்பிகை அருள் பெற்றோர்

இந்தக் கோயிலில் நடைபெறும் தேர்த்திருவிழா அல்லது இரதோற்சவத்துக்குப் பல்லாயிரக்கணக்கான சைவர்கள் போகிருர்களே? அன்றியும் இப்பொழுது நயினதீவு நித்திய யாத்திரைத் தலமாக விளங்குகின்றதே. இதற்குக் காரண மென்ன? அங்குள்ள நாகேஸ்வரி ஆலயந்தான் என்பதற் கையமில்லை. கலியுகத்திலும் கண்கண்ட தெய்வமாக ஆட்சி புரிகின்ருள் அகிலாண்ட ஈஸ்வரியாகிய நாகேஸ்வரி. இந்தக் கோயிலில் அம்பாள் அநுக்கிரகம் உண்டா? அற்புதங்கள் இக் காலத்திலும் நடைபெறுகின்றனவா? என்று பலருங் கேட்பது வழக்கந்தானே. இதற்கு ஆணித்தரமான மறுமொழி கொடுத்தார் **வரகவி நயினை நாகமணிப் புலவர்.** "இந்தக் கேள்வியை என்னிடம் கேட்காதீர்கள். நீங்கள் ஒருமுறை நயினதீவுக்குப் போய்ச் சிறிது நேரம் ஆலயத்தில் நின்று பாருங்கள். அங்கே பக்தர்கள் கொண்டுவந்து குவிக்கும் காணிக்கைகளைக் கவனியுங்கள். அங்கே செய்யப்படும் நேர்கடன்களின் அளப்பருந் தொகையைக் கொண்டு ஓரளவுக்கு அன்னையின் அருட்செயல்களை நீங்களே மட்டிடமுடியும்" என்று கூறினர். இதனை விளக்குஞ் செய்யுள் இதுவே.

மன்னுசீர் நயினைப் பதியினம் பிகைதான்
வணங்குமெய் யன்பருக் கருளுந்
துன்னுமா கருணைத் திறந்தையங் கவடன்
றெல்விழ வினிற்பய னடைந்தோர்
சின்னமா வழங்கும் பொருள்களாற் சிறிது
தெரிந்திட லன்றிமற் றெருவர்
இன்னவா மென்றிங் குரைப்பரி தாட
லெண்ணில வாதலி னென்றும்

காட்சிய தளிக்குந் திருவுருக் குலமுங்
கலன்களு மூர்தியுஞ் சுடரு
மாட்சிகொ ணிறைந்த கவிகையுங் கொடியு
மணிகளு மிரதமற் றெவையுந்
தாட்சியி னடைந்தோ ரமலையா ரருளாற்
றத்தமக் குரியன பெற்றுச்
சாட்சிய தாக வழங்கிய வல்லாற்
றருகென வைத்தவை யின்றல்.

— நயினை மான்மியம்

கலியாணஞ் செய்தும் அநேக ஆண்டுகளாகப் பிள்ளைப்பேறில்லாத தம்பதிகள் நாகேஸ்வரி கோயிலுக்குத்தான் செல்ல வேண்டும். அம்பாள் அநுக்கிரகம் கிடைத்தாற் பிள்ளைப்பேறு உண்டாகின்றது. அன்றியும் பிள்ளை பிறந்ததும் முதன் முதலாக மயிர் களைவதற்கும் அன்னப் பிராசனம் செய்வதற்கும் அம்பிகையின் சந்நிதானத்துக்கே ஆவலுடன் செல்கின்றனர் பெற்றோர்.

சில வாரங்களுக்கு முன்னர் இப் புனித தலத்துக்கு யான் சென்றிருந்த பொழுது ஆலய பரிபாலன சபைச் செயலாளர் திரு. **கா. ஆறுமுகம்** அவர்களையும் அலுவலாளர் திரு. **அமிர்தலிங்கம்** அவர்களையுங் கண்டு கோயிலுக்குச் செலுத்தப்படும் காணிக்கைகளைப் பற்றி உசாவினேன். எடுத்துக்காட்டாக இரண்டொரு சம்பவங்களைக் குறிப்பிட முடியுமா?

என்று கேட்டேன். அவர்கள் கொண்டு வந்து காட்டிய பேரேட்டின் அநேக சான்றுகளைக் கண்டேன்.

எல்லாச் செல்வமிருந்தும் பிள்ளைச் செல்வம் இல்லாதிருப்பின் யாது பயன்?

மங்கல மென்ப மனைமாட்சி மற்றத
னன்கல நன்மக்கட் பேறு

என்பது தமிழ் மறை.

பல ஆண்டுகளாகப் பிள்ளைப் பேறின்றி யிருந்து, பின்னர் அம்பிகையை வழிபட்டு வந்தமையாற் பிள்ளைப்பாக்கியம் தங்களுக்கு உண்டாயிற்று என்றும், அந்தப் பிள்ளையைக்கொண்டே அள்ளு காசும் தென்னம்பிள்ளையும் காணிக்கையாகக் கொடுக்க வந்திருக்கிறோம் என்றும் கண்ணீர் மல்க எங்களுக்கு எடுத்துரைத்தார் வயது முதிர்ந்த ஆடவர் ஒருவர். இவருடைய மனைவியும் அவளுடைய பெற்றோரும் பக்கத்திலே நின்று கைகூப்பிய வண்ணம் மூலஸ்தானத்திலே யுள்ள அம்பிகையை அழுதழுது தொழுது நின்றார்கள். இத்தகைய நிகழ்ச்சிகள் பலவுள. அம்பிகையின் பாதங்களைத் தம் உள்ளத் தாமரையில் தாங்கிக்கொண்டு புறத்தே காட்டாது திரியுந் தொண்டர்தம் தொகையை அளவிடல் அரிதரிது.

★ ★ ★

# திருநயினைத் தேர்த் திருப்பணி வரலாறு

★ ★ ★

முன்னுரை

ஸ்ரீ நாகபூஷணியம்பிகையின் பூரண சேவையைக் கண்டின்புற விரும்புவோர், அங்கே ஆனி மாதத்தில் நடைபெறும் திருவிழாவின் இறுதிநாளன்று அம்பாள் தேரில் எழுந்தருளுங் காட்சியைப் பெற வேண்டும் என்பதைச் சைவநன்மக்கள் நன்கறிவார்கள். அம்பாளின் (உற்சவ மூர்த்தி) சாந்நித்தியத்துக்கேற்ற சிற்ப வேலைப்பாடமைந்த சித்திரத் தேர் இது வரை இல்லாதிருந்தமை ஒரு பெருங் குறை யென்றே சொல்லலாம். ஆனல் அம்பிகையின் திருவருளால் ஏவிளம்பி ஆண்டில் இந்தக் குறையும் நிறைவாகி விட்டது. திருவாரூர்த் தேரழகு என்ற முதுமொழி இதுவரை வழக்காற்றிலுண்டு. ஆனல் ஆனித்திங்கள் பௌர்ணிமைத் தினத்தன்று தொடக்கம் திருநயினைத் தேரழகு என்ற புதுமொழியே சைவ உலக மக்கள் எல்லாருடைய வாக்கிலும் நடமாடும்.

ஈடு இணையற்ற இந்தச் சித்திரத்தேர் உருவாகிய வரலாற்றினை முதற்கண் அவதானிப்போம்.

# நயினாதீவு ஸ்ரீநாகபூஷணி அம்பாள் தேர்த்திருப்பணிச்சபை
## வெளியிட்ட வேண்டுகோள்

அம்பிகை அடியார்காள்!

அம்பாளுக்கெனத் தற்சமயம் இருக்கும் தேர் பழுதடைந்து இனிவரும் உற்சவ காலங்களில் உபயோகிக்க முடியாத நிலையில் இருப்பதால், ஒரு புதிய திருத் தேரை அத்தியாவசியமாக அமைக்க வேண்டியிருக்கிறது.

ஸ்தலத்தின் தொன்மைக்கும், மகிமைக்கும் ஏற்ற சிறந்த ஒரு தேர், அம்பாளின் அமைப்புக்கேற்பக் கலை விதிப்படி அமைப்பதற்குத் தவப்பெருந் திரு. குன்றக்குடி அடிகளார் மூலம் இந்தியாவிற் பிரசித்திபெற்ற ஸ்தபதி ஒருவரையும், அவருக்கு உதவியாகத் தென் இந்தியாவிலே தெரிந்தெடுக்கப்பட்ட சிற்பத் தொழிலாளர்களையும் வரவழைத்திருக்கின்றோம். அடுத்த ஆண்டில் திருவிழா உற்சவத்தின்போது அம்பாள் புதிய திருத் தேரில் ஆரோகணித்துப் பவனிவர வேண்டும் என்ற நோக்கத்துடன் வேலைகள் யாவும் மிகத் துரிதமாக நடைபெற்று வருகின்றன. வேலைகள் தற்போது யாழ்ப்பாணம், நீராவியடிப் பிள்ளையார் கோவிலுக்கு முன்பதாகவுள்ள திரு. வே. சுந்தரம்பிள்ளை அவர்களின் வளவில் நடைபெற்று வருகின்றது. எந்த நேரமும் வேலைகளைப் பார்ப்பதற்கு அடியார்களுக்கு வசதிகள் செய்யப்பட்டுள்ளன.

**திருத்தேருக்கும் அதற்குரிய பாதுகாப்பு மண்டபத்துக்கும் ஒரு லட்சம் (1,00000) ரூபாய்வரையிற் செலவாகுமென மதிப்பிடப்பட்டிருக்கின்றது.**

அடியார்களின் பணவுதவியை அம்பாளின் பேரில் அன்புடன் வேண்டுகின்றோம்.

பணம் அனுப்பும் விலாசம்:

**திரு. செ. சிவஞானம்,**
தீவுப்பகுதிக் காரியாதிகாரி,
ஊர்காவற்றுறை.

இங்ஙனம்
ஷி கோவில்
தேர்த் திருப்பணிச் சபையார்

யாழ்ப்பாணம்
11-11-56

---

நின்று மிருந்துங் கிடந்தும் நடந்தும் நினைப்பதுன்னை
என்றும் வணங்குவ துன்மலர்த் தாளெழு தாமறையின்
ஒன்று மரும்பொரு ளேயரு ளேயுமை யேயிமயத்(து)
அன்றும் பிறந்தவ ளேயழி யாமுத்தி ஆனந்தமே.

— அபிராமியந்தாதி

# நயினாதீவு ஸ்ரீ நாகபூஷணி அம்பாள்

## தேர்த் திருப்பணிச் சபை வரலாறு

ஆட்டுவித்தா லாரோருவர் ஆடா தாரே
அடக்குவித்தா லாரோருவர் அடங்கா தாரே
ஒட்டுவித்தா லாரோருவர் ஒடா தாரே
உருகுவித்தா லாரோருவர் உருகா தாரே
பாட்டுவித்தா லாரோருவர் பாடா தாரே
பணிவித்தா லாரோருவர் பணியா தாரே
காட்டுவித்தா லாரோருவர் காணா தாரே
காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக்காலே.

—திருத்தாண்டகம் (அப்பர்)

பத்திநீ சிவனிடப் பாகிநீ
திரிலோக மும்படைத் தாளுவாள்நீ
சத்திநீ கரிமுகத் தெந்தையைத்
தந்தநீ சேந்தனைப் பெற்றவளுநீ
முத்திநீ முத்திக்கு வித்தான
மூர்த்திநீ முழுதுக்கும் முதல்விநீயே
அத்திசூழ் கின்றநயி னார்தீவி
லுறைகின்ற அரவபூ ஷணிஅம்மையே.

— திருவருட்பா

'பொங்குநன் னயினார் தீவினி லுறைந்தே
புவிதனில் உறைபவர்க் கருளுந்
துங்கநன் னாகம் பூண்டசுந் தரிதன்'

திருவிளையாடல்களைச் சிற்றறிவுஞ் சிறு தொழிலுமுடைய யாம் அளவிடமுடியுங் கொல்? திருவருள் கூட்டிவைக்க, அதன் வயப்பட்டு நின்று பணிசெய்து கிடப்பவர், 'நான் அதைத் தொடங்கினேன்', 'நான் இதைச் செய்து முடித்தேன்' என்று கொக்கரிக்கமாட்டார். எல்லாம் அந்த அம்பாளின் திருவருளேயன்றி, அடியேன் செய்து முடித்த தொன்றுமில்லையென்றுதான் தேர்த்திருப் பணித் தொண்டில் உண்மையில் ஈடுபட்ட சகலரும் விடையிறுப்பர். உற்றுநோக்கின் உண்மையுமதுவே. நாகேஸ்வரியின் தேர்த் திருப்பணியில் ஈடுபட்டுழைத்தவர் பலர். இரண்டாம்பேரும் அறியாமல் உதவி புரிந்தோர் பலர். தாமாகவே முன்வந்து உதவி புரிந்தோர் பலர். தங்கள் பெயரையே வெளியிடக்கூடாது என்ற வேண்டுகோளுடன் உதவி செய்தோர் பலர். இங்ஙனம் தோன்றாத் துணையாக நின்று பண உதவியும் பொருள் உதவியும் சரீர உதவியும் புரிந்து தேர்த்திருப்பணி முட்டின்றி நிறைவேற ஒத்துழைத்தோர் பலராவர். மேலும் ஆண்களைப் போலவே பெண்களும் இப்பணியில்முன்னின்று உழைத்துவந்தார்கள். சிலர் வீடுவாசல் மனைவி மக்கள் என்றின்னோரன்னவற்றையெல்லாம் மறந்து இந்தப் புனிதத் திருப்பணியில் இரவு பகலாக ஓயாது உழைத்துவந்தனர். இத்தகைய திவ்விய திருப்பணியில் ஈடுபட்டபின்னர் உலக மாதாவாகிய நாகேஸ்வரியின் திருவிளையாடல்களை உணர்ந்தோர் பலர். விண்டவர் கண்டிலர் கண்டவர் விண்டிலர் என்றாங்கு இவை யாவும் உணரத்தக்கனவன்றிச் சொல்லத்தக்கனவல்ல. எனினும் ஈடும் இணையும் அற்ற இவ் வழகிய சித்திரத்தேர் எவ்வாறு நிறைவேறிற்று எனக் குறிப்பிடுதல் நம் கடமையாகும். தேர்த் திருப்பணிக்காகச் சேர்க்கப்பட்ட பணம் எவ்வாறு செலவிடப்பட்டதென்பதைச் சைவ உலகிற்கு அறிவித்தல் நங் கடனாகும்.

வடமாகாண அதிபதியாகக் கடமையாற்றிவரும் திரு. ம. ஸ்ரீகாந்தா அவர்கள் யாழ்ப்பாணத்துக்கு மாறிச் சென்ற

பொழுது, முதன் முதலாக உத்தியோக பூர்வமாகப் பார்வையிட்ட இடம் நயினுதிவு. அதுவும் நயினுதீவுத் திருவிழாக் காலத்தில் அங்கே வந்து சேரும் பல்லாயிரக் கணக்கான யாத்திரிகருக்குத் தகுந்த வசதிகள் செய்யப்பட்டிருக்கின்றனவோ என்பதை மேற்பார்வை செய்வதற்காகவே சென்றிருந்தார்கள். திரு. ஸ்ரீகாந்தா அவர்கள் மாணவனுகப் பள்ளிக்கூடத்திற் படித்துவருங் காலத்திலேயே நாகேஸ்வரியின் தொண்டில் ஈடுபட்டிருந்தார்கள். கோயிலின் தெற்கு வீதியில் நடைபெற்றுவந்த தண்ணீர்ப் பந்தரில் நின்று தாக சாந்தியளிக்கும் திருப்பணியில் ஈடுபட்டு உழைத்துவந்தார்கள். இதற்காக வெகு தூரத்திலிருந்து தண்ணீர் வண்டியைத் தள்ளிக்கொண்டு நண்பகலில் நடந்துவர வேண்டியதாயிற்று. இவ்வாறு இளமைதொட்டே அம்பாள் வழிபாட்டில் ஈடுபட்டவர் திரு. ஸ்ரீகாந்தா. இவருக்கு வாய்த்த சக்தியும் பரம்பரையாகச் சக்தி வழிபாட்டில் ஈடுபட்ட குடும்பத்தைச் சேர்ந்தவர். பேர்பெற்ற வைத்தியரத்தினம் திரு. முத்துக்குமாரு அவர்களும், அவருடைய அருமைப் புதல்வரும் அடியேனது வாழ்விற் கரிசனை கொண்டிருந்தவரும் இளமைப் பருவத்தில் இவ்வுலகவாழ்வை நீத்தவருமாகிய டக்டர் கதிரவேலு அவர்களும் சுதுமலை அம்மன்கோயிலைப் பரிபாலித்து வந்தனர். எனவே முன்னவரின் மகளும் பின்னவரின் சகோதரியுமான ஒருவரைத் திரு. ஸ்ரீகாந்தா அவர்கள் தமது வாழ்க்கைத் துணையாகப் பெற்றிருப்பதால், இருவரும் அம்பாள் வழிபாட்டில் ஈடுபட்டிருப்பது வியப்புக்குரியதன்று.

திரு. ஸ்ரீகாந்தா அவர்கள், நாகேஸ்வரி அம்பாள் திருவிழா 1955ஆம் ஆண்டு நடைபெற்றபோது அங்கே சமுகமளித்திருந்தார்கள். தேர்த்திருவிழா நடைபெறும்பொழுது, தேரானது மிகவும் ஈடாடிப்போயிருப்பதைக் கண்டார்கள். தம் பக்கத்தில்நின்ற தீவுப்பகுதிக் காரியாதிகாரி திரு. செ. சிவஞானம் அவர்களிடம் விஷயத்தைச் சொன்னுர்கள். அம்பாளின் திருவருளால் உந்தப்பெற்ற இவ்விருவரும் அன்று சாயந்தரமே கோயில் வீதியில் அங்குள்ள பெரியார்களுடன் கலந்தாலோசிக்க ஒழுங்கு செய்தனர். முறைப்படி அறிவித்தல் கொடுத்துப் பகிரங்கக் கூட்டமொன்று கூட்டுதற்குத் தீர்மானிக்கப்பட்டது. தலத்தின் தொன்மைக்கும் புகழுக்கும் ஏற்ற சிறந்த தேரொன்று அம்பாளின் அமைப்புக் கேற்பக் கலை விதிப்படி அமைக்க உத்தேசிக்கப்பட்டது.

21-8-55ல் பிற்பகல் 4 மணியளவில் நாகேஸ்வரி யம்பாள் கோயிலின் மேற்கு வீதியில் திரு. ஸ்ரீகாந்தா அவர்கள் தலைமையிற் பொதுக்கூட்டம் தேவாரபாராயணத்துடன் ஆரம்பமாயிற்று. முதலாவதாகத் தலைவர் அவர்களாலும், நயினுதீவு கிராமச் சங்கத் தலைவர் அவர்களாலும், திரு. ச. நா. கந்தையா அவர்களாலும் குறிப்புரைகள் கூறப்பட்டன. இரண்டாவதாக, ஊர்காவற்றுறைக் காரியாதிகாரி திரு. செ. சிவஞானம் அவர்கள் நிர்வாகசபையினரை எவ்வாறு தெரிவுசெய்ய வேண்டும் என்பது பற்றிய சில குறிப்புகள் கூறினுர்கள். மூன்ருவதாக, இச்சபையின் பெயர் **நயினுதீவு ஸ்ரீ நாகபூஷணி அம்பாள் தேர்த் திருப்பணிச் சபை** என இருக்க வேண்டும் என்று திரு. நா. குமாரசுவாமி அவர்கள் முன்மொழிய, திரு. இ. பூபாலசிங்கம் வழிமொழிய, இத் தீர்மானம் ஒருமனதாக நிறைவேறியது. இதன் பின்னர் நிர்வாகசபை அமைக்கப்படலாயிற்று. நிர்வாசபை அங்கத்தவர்களின் விவரத்தைப் பிறிதோரிடத்திற் காண்க.

வடமாகாண அதிபர் தலைவராகவும், திரு. சி. எஸ். ஏ. நமசிவாயம் செட்டியார் உபதலைவராகவுந் தெரிவு செய்யப்பட்டனர். விவேகானந்த அச்சக அதிபர் திரு. வே. சுந்தரம்பிள்ளை அவர்களும் நாகபூஷணி தேவஸ்தான சபை உபகாரியதரிசி அவர்களும் இணைக் காரிய

தரிசிகளாகவும், ஊர்காவற்றுறை டி. ஆர். ஓ., திரு. செ. சிவஞானம் அவர்களும் முகாந்திரம் ஏ. எஸ். சங்கரப்பிள்ளை அவர்களும் இணைத் தனுதிகாரிகளாகவும், வேறு 24 பேர் நிர்வாகசபை அங்கத்தவர்களாகவும் தெரிந்தெடுக்கப் பட்டனர்.

தேர்த்திருப்பணி வேலை இந்த நிருவாக சபையினுல் ஆரம்பிக்கப் பெறுவதற்குச் சில ஆண்டுகளுக்கு முன்னர் யாழ்ப்பாணத்திலே கோயிற் திருப்பணியின் பொருட்டுப் பெரும்பொருள் கொடுத்து உதவிவந்த திரு. சி. எஸ். கந்தையா செட்டியார் அவர்கள் இக் கோயிலுக்குத் தம் செலவிலேயே அழகியதோர் தேர் செய்துகொடுக்கத் தீர்மானித்தார்கள். அதன் பொருட்டுத் தென்னிந்தியாவிலிருந்து திரு. சுப்பிரமணிய ஆசாரியாரவர்களை வரவழைத்து வேலையை ஆரம்பித்து வைத்தார்கள். எனினும் எதிர் பாராது நிகழ்ந்த பல ஏதுக்களால் இத் திருப்பணி அப்பொழுது நிறைவேறவில்லை.

1-10-55ல் தேர்த் திருப்பணி நிர்வாகசபைக் கூட்டம் மேற்கு வீதியிலுள்ள சோமபதி மடத்தில் பிற்பகல் 5-30 மணியளவில் நடைபெற்றபொழுது, திருப்பணி விரைவில் ஆரம்பிக்கப்படவேண்டுமெனத் தலைவர் அவர்கள் குறிப்பிட்டமையால் அதற்குத் தகுந்த ஓர் ஆசாரியை ஒழுங்கு செய்யவேண்டும் என்று தீர்மானிக்கப் பட்டது. முன்னர் செய்த திரு. சுப்பிரமணிய ஆசாரியின் விலாசங் கேட்டறிந்து எழுதவேண்டு மெனவும், அன்றேல் திருப்பெருந்திரு. குன்றக்குடி அடிகளார் மூலம் சிறந்த ஆசாரி யொருவரைத் தருவிக்க வேண்டுமெனவும் முடிவு செய்யப் பெற்றது.

அப்பொழுது, திரு. M. R. காராளசிங்கம் அவர்கள் ரூபா 25 கைவிசேஷமாகத் தேர்த் திருப்பணிச் சபையினர்க்குத் தாமே மனமுவந்து வழங்கினுர்கள். திரு. ப. கந்தசாமி அவர்கள் நயினுதீவு மக்கள் சார்பில் ரூபா 111 நன்கொடையாக உபகரித்தனர். தொடர்ந்து அங்கு சமுகமளித்த அன்பர் பலர் பணம் உபகரிக்க முன்வந்தனர். பின்னர் திரு. வே. சுந்தரம்பிள்ளை அவர்கள் யாத்திரையின் பொருட்டு இந்தியாவுக்குச் சென்றிருந்தபொழுது, குன்றக்குடி அடிகளார் சிபாரிசு செய்த திரு. எஸ். குமாரசாமி ஆசாரி அவர்களைக் கண்டு வேண்டிய ஒழுங்குகளைச் செய்யுமாறு திரு. செ. சிவஞானம் அவர்கள் தந்திகொடுத்திருந்தார்கள். வியாபாரத் துறையில் அனுபவம்மிக்க திரு. சுந்தரம்பிள்ளை அவர்கள் தேர்த்திருப்பணியை நிறைவேற்றக்கூடிய ஆற்றலும் பணிவும் இன்சொற் பேசும் இயல்பும் உள்ளவரும் இடாம்பீகமற்ற வாழ்க்கை நடாத்திவருபவருமாகிய திரு. எஸ். குமாரசுவாமி ஆசாரியரே எவ்வாற்றானும் தகுதி வாய்ந்தவரெனத் தீர்மானித்து அவரை இலங்கைக்கு வரவழைப்பதற் கேற்ற ஒழுங்குகளைச் செய்தார். 8-6-56இல் நடந்த கூட்டத்தில் சிற்பாசாரியார் திரு. குமாரசுவாமி அவர்களும் சமுகமாய் இருந்தார்கள். இதற்கென இந்தியாவிலிருந்து கீழ்க்காணப்படும் சிற்பத்தொழில் நிபுணர்கள் வரவழைக்கப் பட்டார்கள். திருவாளர்கள்: சென்னை, S. குமாரசுவாமிஸ்தபதியார்; மாயாவரம், S. தியாகராசா ஆச்சாரி; மாயாவரம், K. சிதம்பர ஆச்சாரி; சென்னை, P. முனுசாமி ஆச்சாரி; சென்னை, V. வேலாயுத ஆச்சாரி; சென்னை, S. V. சங்கராச்சாரி; சென்னை, M. தனகோடி ஆச்சாரி; கும்பகோணம், A. நரசிம்ம ஆச்சாரி; காரைக்குடி, S. ரத்தினம் ஆச்சாரி; சென்னை, D. தங்கவேலு ஆச்சாரி; மாயாவரம், S. ஏகாம்பர ஆச்சாரி.

துன்முகி ஆண்டு ஆவணி மாதம் 9ஆந் திகதி (24-8-56) வெள்ளிக்கிழமை மாலை 6மணிக்கு வடமாகாண அரசாங்க அதிபர் திரு. ஸ்ரீகாந்தா அவர்களினுல் 24, நீராவியடியில் இருக்கும் திரு. வே. சுந்தரம்பிள்ளை அவர்

களின் வளவில் தேர் வேலைகள் ஆரம்பிக்கப்பட்டன. திருப்பெருந்திரு குன்றக்குடி அடிகளார் 17-3-57ல் தேர்வேலைகள் நடைபெறுவதை நேரிற் சென்று பார்வையிட்டார்கள்.

**திரு. செ. சிவஞானம் அவர்களின் அருந்தொண்டு.**

தேரின் மதிப்பு முடிவு 54000 ரூபாய் ஆகும் என உத்தேசிக்கப்பட்டது. ஆனால் பணத்துக்கு எங்கே போவது? இந்தப் பிரச்சினையைப் பற்றி இரவு பகலாகச் சிந்தித்து அதில் ஊறிக் கிடந்தவர்தான் தனாதிகாரி சிவஞானம் அவர்கள். இவர்கள் இருபத்துநான்கு மணித்தியாலமும் டி. ஆர். ஓ. வேலை பார்த்துவந்தார் என்று அங்குள்ள பொதுமக்கள் கூறிவந்ததை யாரு மறிவர். ஆமை அசையாமல் ஆயிரம் முட்டையிடும் என்பார்கள். அதுபோலவே திரு. சிவஞானம் அவர்கள் ஆயிரக் கணக்கிற் பணஞ் சேகரிக்கத் தொடங்கினர். இதற்காக லிவு எடுத்து, கொழும்பு முதலிய இடங்களுக்கெல்லாம் சுற்றுப் பிரயாணஞ் செய்து பொருள் சேகரித்து வந்தார். தேர்த் திருப்பணிச் சபைக்குப் பணத்தைப் பற்றிய கவலையை நீக்கி அதைத் தமது தலையில் வைத்துக்கொண்டார். கருமமே கண்ணாயினர், மெய்வருத்தம் பாரார், கண் துஞ்சார் என்ற முதுமொழிக்கிணங்கத் திரு. சிவஞானம் தொண்டாற்றினர் என்று கூறலாம்.

இவ்வாறு தொண்டாற்றிவந்த திரு. சிவஞானம் அவர்களை அரசாங்கம் வவுனியாவுக்கு மாற்றியது. நெய் திரண்டுவரும் வேளையில் தாழி உடைவதுபோல் அல்லவா இருக்கிறது இந்த மாற்றம் என்று பலரும் பேசிக்கொண்டனர். இவருக்கு நடைபெற்ற பிரியாவிடைக் கூட்டங்களிலெல்லாந் தேர்த் திருப்பணி பற்றிய பேச்சும் எழுந்தது. இந்தத் தேர் ஓடும் வரையாவது திரு. சிவஞானம் அவர்களை ஊர்காவற்றுறையில் வைத்திருக்கக்கூடாதா என்றுகூடச் சிலர் கேட்டனர். இவருக்குப் பின் இந்த இடத்துக்கு வருபவர் இவரைப் போலவே கரிசனை கொள்வாரோ என்ற சந்தேகங்கூட எழுந்தது. நாகபூஷணி அம்பாளின் திருவிளையாடலை யார் அறிவார்.

**திரு. அ. கந்தையா அவர்களின் அரும்பணி.**

திரு. அ. கந்தையா அவர்கள் புதிய காரியாதிகாரியாக 2-1.57ல் வந்து சேர்ந்தார்கள். ஏற்கெனவே திருக்கேதீச்சரத் திருப்பணியில் ஈடுபட்டுத் தேறிய திரு. கந்தையா அவர்கள் இணைத் தனாதிகாரியாக நியமிக்கப்பட்டார்கள். திரு. சிவஞானம் செய்துவந்த அருந்தொண்டினைத் திரு. கந்தையா அவர்கள் தொடர்ந்து செய்துவந்தார்கள். உத்தியோக நேரம் போக எஞ்சிய நேரமெல்லாந் தேர்த் திருப்பணியைப் பற்றியே சிந்திக்கத் தொடங்கினர். எந்த எந்த முறையிலே பணம் சேகரிக்கலாம், யார் யாரிடம் தேரின் உறுப்புக்கள் செய்யும் பணத்தை வசூல் பண்ணலாம் என்று திட்டம் வகுத்து வேலைசெய்து வந்தார். அன்றியும் திரு. சிவஞானம் ஆரம்பித்து வைத்த திட்டங்களையெல்லாம் நிறைவேற்றுவதிற் கண்ணுங் கருத்துமாக உழைத்து வந்தார். கடந்த வைகாசி மாதம் நாங்கள் நயினாதிவுக்குப் போய்வர வடமாகாண அதிபர் பிரத்தியேகமாக மோட்டார் லாஞ்சி ஒன்று ஒழுங்கு செய்திருந்தார். அதில் திரு. கந்தையா அவர்களும் பிரயாணஞ் செய்யப் போவதாகச் சொன்னார்கள். குறித்த நேரமும் வந்தது. ஆனால் லாஞ்சி புறப்படவில்லை. கொஞ்சம் பொறுத்துக்கொள்ளுங்கள். தேர்த் திருப்பணிக்குரிய சாமான்கள் மோட்டார்வானில் வருகின்றன. அவற்றையும் இந்த லாஞ்சியிலேயே கொண்டு போய்விட்டால் வேலை விரைவில் முடிந்துவிடும் என்றார். நயினாதிவுக்கு எங்களுடன் வந்த காரியாதிகாரி திரு. கந்தையா அன்று

பின்னேரம் புங்குடுதீவில் நடைபெற்ற விதானையார் நியமன நேர்முகப் பேட்டியில் பங்குபற்றிவிட்டு நாங்கள் திரும்பி வருவதற்கிடையில் ஊர்காவற்றுறைக்குத் திரும்பி வந்து எங்கள் இராச்சாப்பாட்டுக்கு வேண்டிய ஒழுங்குகளையுஞ் செய்து எங்கள் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். இவ்வாறு திருப்பணிசெய்து வருங்கால் அம்பாள் செய்யும் திருவிளையாடல்களையும் நன்கு உணரப்பெற்றார் என்பது அவருடன் சிறிது நேரம் கலந்துரையாடினாற் புலனாகிவிடும். திருத்தேர்த் திருப்பணியில் திரு. கந்தையா அவர்கள் மட்டும் ஈடுபடவில்லை. யாழ்ப்பாணத்துக் காரியாதிகாரி திரு. ஆ. பெருமையினார் தமது ஓய்வு நேரத்தைப் பணஞ் சேகரிக்கும் நற்றொண்டிற் பயன்படுத்தினார்கள். இவர்கள் இருவரும் யாழ்ப்பாணத்திலே போய்த் திரியாத தெருவே கிடையாது எனலாம். அமைதியாகத் திட்டமிட்டு இவ்விருவரும் அருந்தொண்டாற்றி வந்தனர்.

இவர்களைத் தவிர, திரு. ரி. முருகேசபிள்ளை, திரு. மா. நடராசா, D. R. O., திரு. க. குணரத்தினம். D. R. O., திரு. ச. சிறிநிவாசன், D. R. O., திரு. ப. கதிரவேலு, S. D. W. பிரபல வர்த்தகர்களான திரு. இ. செல்லையா, திரு. V. K. T. தம்பிமுத்து முதலியோர் பணஞ் சேகரிப்பதில் உதவிபுரிந்தனர். திரு. அல்பிரட் தம்பிஐயா அவர்கள் முதன்முதலில் பணஞ் சேர்க்கக் கொழும்பு மாநகரில் திரு. S. சிவஞானம் அவர்களுடன் சென்று ஆற்றிய உதவி அளவிடமுடியாதது. தற்போதைய தீவுப்பகுதிப் பாராளுமன்றப் பிரதிநிதி திரு. V. A. கந்தையா அவர்களும் பணஞ் சேர்ப்பதில் பெரிதும் உதவியுள்ளனர். யாழ்ப்பாணம் உதவி எஞ்சினியர் திரு. இ. வைத்தியலிங்கம் அவர்கள் நயினாதீவிற்கு வந்து தமது அனுபவத்தையும் பூரண ஒத்துழைப்பையும் இத் திருப்பணிக்கு நல்கியுள்ளார்கள்.

யாழ்ப்பாணத்தில் நடைபெற்ற திருப்பணி வேலைகளை நயினாதீவிற்குக்கொண்டு சென்றபின் அங்கு பொறுப்பேற்று ஒழுங்காக வேலைகளைச் செய்விக்க உதவியாக இருந்தவர்கள், நயினாதீவு கிராமச்சங்கத் தலைவர் திரு. V. கந்தையா அவர்களும் நயினாதீவு அம்பாள் கோவில் தர்மகர்த்தர் சபைத் தனாதிகாரி திரு. K. சோமசுந்தரம், காரியதரிசி திரு. K. ஆறுமுகம் ஆகியோருமாவர். தேர் வேலைகளுக்கான மரங்களை மன்னம்பிட்டியாவிலிருந்து எடுக்க மன்னம்பிட்டிக் கிராமச்சங்கத் தலைவர் திரு. S. கதிர்காமத்தம்பி அவர்களும் பேருதவி புரிந்துள்ளார்கள். இன்னும் பலர் தோன்றாத் துணையாக நின்று உதவி செய்துள்ளனர். தேர்த்திருப்பணிச் சீட்டுக்களை விற்பதில் அநேகம்பேர் உதவிசெய்தனர்.

தேர்த்திருப்பணி நிறைவேறினாலும் அந்த அழகிய சித்திரத்தேர் பாதுகாப்பான இடத்திலே வைக்கப்படுதல் வேண்டுமன்றோ? எனவே தேர்ப்பாதுகாப்பு மண்டபம் ஒன்றைக் கட்டுவிக்க நாகபூஷணி அம்பாள் கோயில் தர்மகர்த்தர் சபை முன்வந்தது. ஆனால் அதனை மேற்பார்வை செய்து நடத்தக்கூடிய அநுபவம் வாய்ந்த ஒருவரையும் அம்பாள் கண்டுபிடிக்காமல் விடவில்லை. தமது சொந்த வேலைபோல அன்புத் திருப்பணியாக நிறைவேற்ற முன்வந்தார் **முதலியார் வை. மகேசன்** அவர்கள். இத் திருப்பணி முட்டின்றி நிறைவேற வேண்டுமென்ற ஆவலுடன் 100 பாக்கற் சிமெந்தும் 5000 ரூபாய் முற்பணமுங் கொடுத்து உதவினார்கள் பேர்பெற்ற கொந்தராத்துக்காரரும் அம்பாளில் அளவிறந்த பக்தியுடைவருமான திரு. க. சபாபதிப்பிள்ளை அவர்கள் (தம்பிஐயா.).

இவ்வாறு உதவிபுரிந்து தேர்த் திருப்பணி வேலை நடைபெற்றுக்கொண்டிருக்குஞ் சமயத்தில் யாவரும் எதிர்பாராத வகையில் ஒரு பெரிய கலக்கம் ஏற்பட்டது.

தேருக்கு முடியும் மணிகளும் வாங்கச் சென்னைக்குப் பறந்துசென்ற திருப்பணிச் சபைக் காரியதரிசி திரு. **வே. சுந்தரம்பிள்ளை** அவர்கள் இயற்கை எய்தினார்கள் என்ற செய்தி பெரிய கவலையை உண்டாக்கியது. எல்லாம் அம்பாளின் திருவிளையாடல். திரு. **சுந்தரம்பிள்ளை** அவர்களுடைய இடத்துக்கு அவருடையசகோதரர் திரு. வே. செல்வநாயகம் அவர்கள் நியமிக்கப்பட்டார்கள். அமைதியும் அடக்கமும் வாய்ந்த இவருக்குப் பக்கபலமாக திரு. வே. கந்தசாமி அவர்களும், திரு. வே. கிருஷ்ணபிள்ளை அவர்களும் இத் திருப்பணியில் ஈடுபட்டு உழைத்துவருகின்றனர். எனவே ஒருவருக்குப் பதிலாக இப்பொழுது திரு. சுந்தரத்தின் குடும்பத்தினரும் அவரது சகோதரர் யாவரும் உழைத்து வருகின்றனர். திரு. வே. சுந்தரம்பிள்ளை அவர்கள் தேர் வேலை தொடங்கிய நாளிலிருந்து அல்லும் பகலும் அதே சிந்தனையிலாழ்ந்து உழைத்து ஈற்றில் மணி, முடி முதலியவற்றிற்கு 'ஆடர்' கொடுக்க இந்தியா சென்று அவ்வேலையை முடித்து அங்கேயே அகால மரணமடைந்தகாலை இவ்விடம் மக்களிற் பலர் "திருப்பணி வேலை செய்தால் இவ்விதம் நடக்குந் தானே" என்று கூறவும் அதைப் பொருட்படுத்தாமல் திருமதி சுந்தரம்பிள்ளை அவர்கள் தேர் வேலை நடந்த இடத்திலேயே நடைபெறட்டும் என மனமுவந்து பின்னும் ஆகவேண்டிய சௌகரியங்களைச் செய்து அம்பாளின் திருப்பணிக்குதவியமைக்காகச் சைவ மக்கள் என்றும் அந்த அம்மையாருக்கு நன்றி செலுத்தக் கடமைப்பாடுடையர்.

சித்திரத் தேர்த் திருப்பணியில் ஈடுபட்டு உழைத்த சகலருக்குந் தேர்த் திருப்பணிச் சபை தனது மனமார்ந்த நன்றியைச் செலுத்துவதுடன் அவர்கள் யாவருக்கும் அம்பாளின் பூரண அனுக்கிரகம் கிடைக்கவேண்டுமெனப் பிரார்த்தனை செய்கின்றது.

---

பாகமோ பெறவுனைப் பாடவறி யேன்மல பரிபாகம் வரவுமனதில்
பண்புமோ சற்றுமிலை நியமமோ செய்திடப் பாவியேன் பாபரூப
தேகமோ திடமில்லை ஞானமோ கனவிலுஞ் சிந்தியேன் பேரின்பமோ
சேரவென் முற்கள்ள மனதுமோ மெத்தவுஞ் சிந்திக்கு தென்செய்குவேன்
மோகமோ மதமோ குரோதமோ லோபமோ முற்றுமாற் சரியமோதான்
முறியிட் டெனைக்கொள்ளும் நிதியமோ தேடவெனின் மூசுவரி வண்டுபோல
மாகமோ டவும்வல்லன் எனையாள வல்லையோ வளமருவு தேவையரசே
வரைராச னுக்கிருகண் மணியாய் உதித்தமலை வளர்காத லிப்பெணுமையே.

*—தாயுமானசுவாமிகள்*

# திரு. வே. சுந்தரம்பிள்ளை அவர்கள்

நயினாதீவு ஸ்ரீ நாகபூஷணி அம்மன் தேர்த்திருப்பணிச் சபைக்குப் பொறுப்பு வாய்ந்த காரியதரிசிப் பதவியை ஏற்று அதனைத் திறம்பெறச் செய்துமுடிக்கக் கூடிய சைவப் பெரியார் ஒருவர் எவரென ஆராய்ந்தபொழுது அதற்குத் தகுதியும் சைவப்பற்றும் தியாக சிந்தையும், பொறுப்பும் வாய்ந்த ஒருவர் கொழும்பு, யாழ்ப்பாணம் விவேகானந்தா அச்சகங்களின் அதிபர் திரு. வே. சுந்தரம்பிள்ளை அவர்களே என்று சபை ஏகமனதாகத் தீர்மானித்தது. அவ்வாறே அவர் இச் சபையின் காரியதரிசியாக நியமிக்கப்பெற்றார். அவரும் மனமுவந்து அப் பதவியை ஏற்றுக் கொண்டார்.

எமக்குப் பக்கபலமாக இருந்து "நடப்பதெல்லாம் அம்பாளின் திருவருளால் நடப்பவை, ஒன்றிற்கும் யோசிக்க வேண்டியதில்லை" என்று உறுதிமொழி கூறி எம்மை ஊக்குவித்தார். அந்தப் பண்பாளர். எதைக் கஷ்டம் என்று எண்ணுகிறோமோ அதைச் சுலபமாகச் செய்து முடிக்குந் தன்மை வேறு எவரிடத்திலும் காணமுடியாது. அன்பினாற் பிறரைக் கவருந் தன்மையும், விருந்தினரை உபசரிக்கும் பண்பும் வாய்ந்தவர் அவர். இத்தகைய சிறந்த நற்குண — நற்செய்கையுடைய தோர் சீலர். அம்பாளின் தேர்த்திருப்பணிக்காக அல்லும் பகலும் உழைத்த தியாகி — கடவுள் வழிபாட்டிற் சிறந்த பக்தர். அம்பாளின் திருத்தேருக்கான முக்கிய வேலைகளை முடித்து மணியும்— முடியும் தேடிவர இந்தியா சென்றார். சென்றவர் அங்கேயே இறைவனடி சேர்ந்துவிட்டார்.

சபையின் காரியதரிசியாகத் தெரிவு செய்யப்பெற்ற நாட் தொடக்கம் அம்பாளின் திருத்தேர் பற்றியே அவரின் எண்ணங்கள் சிந்தனைகள் யாவும் இருந்தன. தனது கொழும்பு - யாழ்ப்பாணம் தொழில்களைத் தன் சகோதரர்களிடம் ஒப்படைத்துவிட்டுத் தனது முழுநேரத்தையும் அம்பாளின் தேர்த்திருப்பணிக்கே செலவிடலானார்.

வட இந்தியா தென் இந்தியா ஆகிய இடங்களுக்குச் சென்று, பல கோயில்களிலுமுள்ள தேர்களைப் பார்வையிட்டுச் சிற்ப சாஸ்திர வல்லுனர்களைத் தேடிப் பின் திருப்பெருந்திரு குன்றக்குடி அடிகளாரின் உதவியுடன் திரு. எஸ். குமாரசுவாமி ஸ்தபதியாரவர்களைக் கண்டு ஒழுங்கு செய்துவந்தார்,

யாழ்ப்பாணத்திலே வேலைகள் நடைபெறவேண்டியிருந்ததால் அதற்கான வசதிகளை அவரது சொந்த வளவிலேயே செய்துதவினர். அவருக்குச் சொந்தமான நீராவியடி 24ஆம் இலக்க வளவில் தான் புதிதாக அமைத்த 'இராச பவனம்' என்னும் வீட்டில் ஸ்தபதியாரும், மற்றும் ஆசாரிமாரும் இருக்க முழு வசதியும் செய்துகொடுத்தார். இவற்றிற்காகத் தேர்த் திருப்பணிச் சபையாரிடமிருந்து அவர் எதுவித பணமும் பெற்றுக்கொள்ளாதது அவர் அம்பாளின் தேர்த் திருப்பணிக்காக ஆற்றிய தொண்டுகளில் ஒன்றாகும். தனது வளவில் நடந்துகொண்டிருந்த திருத்தேர் வேலைகளுக்குத் தானே பொறுப்பாக இருந்து வேலைகளை மேற்பார்வை செய்துவந்தார். வியாபாரத் துறையில் அவருக்கிருந்தஅனுபவம் மிகவும்



**உயர்திரு வே. சுந்தரம்பிள்ளை அவர்கள்**

காரியதரிசி

நயினாதீவு ஸ்ரீ நாகபூஷணி அம்மன்

தேர்த் திருப்பணிச் சபை

*காலம் :*

**1 - 10 - 55 — 26 - 3 - 57**

கூடுதலானது. நிர்வாகத் திறமையும் துரிதமாக வேலைகளைச் செய்யும் ஆற்றலும் மிக்கவர். பண நெருக்கடி ஏற்படினும் அதைப் பொருட்படுத்தாது விஷயங்களைச் சமாளிக்கும் சக்திவாய்ந்தவர். இந்த வல்லமை முழுவதையும் அவர் தேர்த் திருப்பணிச் சபைக் காரியதரிசியாகத் தெரிவுசெய்யப்பட்டபின் தேர் வேலைகளுக்காகச் செலவு செய்தார். இதனாலேயே தேர் வேலைகள் இவ்வளவு சீக்கிரத்திற் பூர்த்தியடைந்தன என்பதிற் சிறிதும் ஐயமில்லை. ஸ்தபதியாரவர்களின் உதவியுடன் நேரசூசிகை தயாரித்து வேலைகளைக் கிரமமாகக் கொடுத்துத் துரிதமாகச் செய்வித்தார். பல இடங்களிலுமிருந்து வரும் கடிதங்களுக்கும் அன்றன்றுடு பதில்போட்டுத் தனித்தனி 'பைல்' களிற் கடிதமும் அதற்குத் தான் எழுதிய பதிலுக்கான நகலும் குறிப்புக்களும் எழுதி மிகவும் ஒழுங்கான முறையில் வைத்திருப்பது அவரது மறைவிற்குப் பின்பும் எவரும் சிரமமின்றி யாவையுங் கொண்டு செலுத்தக்கூடியதாக உள்ளது. கணக்குப் பதிதல் செய்யும் முறையும் அப்படியே.

இவர் தனது காரியதரிசி வேலையுடன் நின்றுவிடவில்லை. சபையிற் பணநிலை குறைவாக இருந்து வேலைகள் தடைப்பட்டு விடுமோ என்று நாங்கள் எண்ணிய சமயங்களிலெல்லாம் தனது சுகவீனத்தையும் பொருட்படுத்தாது வெளியூர்களுக்கும் சென்று பணம் வசூலிப்பதற்கும் அரும்பாடு பட்டார். சுகவீனத்தாற் பலமுறை பாதிக்கப்பட்டும் அவர் ஏற்ற தொண்டை எள்ளளவும் குறைய விடவில்லை. கடைசித்தடவையாக அவர் மணியும் முடியும் வாங்குவதற்காக இந்தியா செல்ல இருந்த முதல் நாளிரவு அவர் சிறிது சுகவீனத்தால் பீடிக்கப்பட்டிருந்தார். நான் அவ்வேளை அவரிடம் "சுகவீனமாக இருக்கின்றதே, எப்படிப் பிரயாணப்படப் போகின்றீர்?" என்றேன். "அம்பாள் என்னைச் சோதிக்கிறாள். எனது சொந்த வேலையென்றால் யான் இப்பொழுது புறப்படவும் மாட்டேன். ஆனால் இது அம்பாளின் திருப்பணி. ஆதலால் எப்படியும் போய் மணியும் முடியும் கொண்டுவந்தே தீருவேன்" என்று அவர் தனது வழமையான இனிய தமிழிற் கூறினார். இது ஒன்றே அவர் அம்பாள் மேற் கொண்டிருந்த பக்தியைப் புலப்படுத்தப் போதுமானது. அவர் அம்பாளின் திருப்பணியைச் சந்தோஷமாகச் செய்துவந்தார்.

திரு சுந்தரம்பிள்ளை அவர்கள் அம்பாளின் திருப்பணியில் மட்டும் ஈடுபட்டிருந்ததோடு தனது தொண்டை நிறுத்திவிடவில்லை. நயினாதிவு ஸ்ரீ நாகபூஷணி அம்மன்கோவில் தர்ம கர்த்தாக்களுள் ஒருவராக இருந்த அவர் அக் கோவிலுக்குத் திருவிழாக் காலந் தவிர்ந்த ஏனைய காலங்களிலும் மின்சார வெளிச்ச வசதி அவசியம் என்பதை உணர்ந்து தனது சொந்தச் செலவில் மின்சார விளக்குகளை இணைப்பித்தார். நயினாதிவு ஸ்ரீ வீரகத்தி விநாயக ராலயத்திற்கு எழுந்தருளி விக்கிரகம் ஒன்றைச் செய்வித்தார். நயினாதிவு முத்துக்குமார சுவாமி தொண்டர் சபை, நயினாதிவு அருள்ஒளி மன்றம், வண்ணார் பண்ணைப் பன்றிக்கோட்டுப் பிள்ளையார் கோவில் தர்மகர்த்தா சபை முதலியவற்றின் தனாதிகாரியாக இருந்ததோடு, பன்றிக்கோட்டுப் பிள்ளையார் கோவிலின் மாதாந்த மின்சாரச் செலவுகளைத் தன் சொந்தப் பணத்திலேயே செலுத்திவந்தார்.

இவருக்கு இந்தியாவிலும் இலங்கையிலும் பல பெரியார்களின் நேரடித் தொடர்பும் பழக்கமும் உண்டு. அருள் நெறி பரப்பும் சஞ்சிகைகளைப் படிப்பதில் அவருக்கு இருந்த ஆர்வமோ அதிகம்.

திரு. சுந்தரம்பிள்ளை அவர்கள் அம்பாளின் திருத்தொண்டைச் சிரமேற் கொண்டு தனது உடல், பொருள், ஆவி மூன்றையும் அதற்காகவே அர்ப்பணித்தார். அவரின் தொண்டு மேலானது. அது என்றும் நிலைத்துநிற்கும். அவரது பூத உடம்பு நம்மை விட்டகன்றதுவே யன்றிப் புகழுடம்பு அழியவில்லை. அவர் ஆற்றிய தொண்டும் அன்பும் பணியும் அவரை நல்ல நிலைக்குக் கொண்டு சேர்த்திருக்குமென்பதில் ஐயமில்லை. அவரின் ஆத்மா சாந்தியடையப் பிரார்த்திப்போமாக.

ம. ஸ்ரீகாந்தா.
தலைவர், நயினாதீவு ஸ்ரீ நாகபூஷணி
அம்மன் தேர்த் திருப்பணிச் சபை.

# சைவப்பணியும், சமூகத் தொண்டும் ஆற்றிய அன்பர்

சில மாசங்களுக்கு முன்னர் யாழ்ப்பாணத்தரசர்களின் புராதன இராசதானியாகிய நல்லூரைப்பற்றிய சில குறிப்புக்களைத் தேடும் நோக்கமாக, நான் யாழ்ப்பாணத்துக் காரியாதிகாரி திரு. ஆ. பெருமையினார் அவர்களைச் சந்தித்து அவர்களிடமிருந்த பழைய தேசப்படமொன்றையும் பெற்றுக்கொண்டு புறப்படுஞ் சமயத்தில், "நாகபூஷணியம்மாளின் தேர்த்திருப்பணி நடைபெறுகின்றது. அதையும் நீங்கள் பார்க்கத்தான் வேண்டும். விரும்பினால் யானே கூட்டிச் செல்கின்றேன்" என்று கூறினார்கள். "சரி! வசதி போலச் செய்வோம்" என்று சொல்லிவிட்டுக் கிளம்பினேன். அடுத்தநாள் சைவப்பிரகாச அச்சியந்திரசாலைக்குப் போகும் வழியில் யாரோ கைதட்டிய சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தேன். "என்ன இடம் தெரியாமல் போகின்றீரோ?" என்று கேட்டார் நண்பர் பெருமையினார். வெட்கித் தலை குனிந்தேன். அவரோ என்னை விட்டபாடில்லை. "வாருங்கள், இதுதான் திரு. சுந்தரம் பிள்ளை அவர்களின் இல்லம்; இன்னும் ஐந்து நிமிஷத்தில் கலாசாரப்பகுதி அதிபர் திரு. என். கியூ. டயஸ். டக்டர் டபிள்யூ. பாலேந்திரா, வடமாகாண அதிபர் முதலியோர் இங்கே வந்துவிடுவார்கள். நீங்களும் நில்லுங்கள்" என்று சொன்னார்கள். அவர்களும் வந்தார்கள்; நாடியிலே கை வைத்து நின்று பார்த்தார்கள்; பாராட்டிச் சென்றார்கள். திரு. வே. சுந்தரம்பிள்ளை அவர்களை அன்றுதான் கண்டேன். ஆனால் ஆறுதலாகப் பேசிக்கொள்ளும் சந்தர்ப்பங் கிட்டவில்லை. பின்னர் ஒருநாள் வீரகேசரி ஆசிரியர் திரு. கே. பி. ஹரன் யாழ்ப்பாணம் வந்திருந்தபோது நயினாதீவு நாகபூஷணி யம்பாளைத் தரிசிக்க வேண்டுமென்று புறப்பட்டார். அப்பொழுது வேறு அலுவலாக நான் யாழ்ப்பாணத்தில் நின்றேன். "கோயில்களை உங்களுடன் சென்று தரிசித்தால் நான் விஷயங்களை அறிந்து கொள்ள முடியும். கட்டாயம் வாருங்கள். நாளைக் காலை கலைப்புலவர் க. நவரத்தினம் அவர்கள்வீட்டிலிருந்துபுறப்படலாம். அங்கே எட்டு மணிக்கு வந்துவிடுங்கள்" என்றார். அவ்வாறே சென்றபோது திரு. சுந்தரம் பிள்ளை அவர்கள் தனது மோட்டார்வண்டியுடன் குறிப்பிட்ட சரியான நேரத்துக்கு வந்து சேர்ந்தார்கள். திருமதி மகேஸ்வரி நவரத்தினம் அவர்கள் அளித்த காலைப் போசனத்தையும் முடித்துக்கொண்டு கிளம்பினோம். ஊர்காவற்றுறைக்குப் போகும் வழியில் திரு. சுந்தரம்பிள்ளை அவர்கள் என்னைப் பார்த்து, "நீங்கள் நாகபூஷணி அம்பாளின் வரலாற்றை எழுதித் தந்தால் நல்லது. நாங்கள் அச்சிடத் தயாராயிருக்கிறோம்" என்றார்கள். "ஆமாம், அவரைத்தான் பிடியுங்கள்" என்றார் வீரகேசரி ஆசிரியர். "வசதி போலப் பார்ப்போம். நல்லூர்க் கந்தனை வந்தனைசெய்யத் தோத்திரத்திரட்டு ஒன்று தயாரிக்கும்பணியில் ஈடுபட்டுள்ளேன். நேரம் வாய்க்குமானால் பார்ப்போம்" என்று கூறினேன். இதற்கிடையில் ஊர்காவற்றுறை போய்ச்சேர்ந்தோம். நயினாதிவு லாஞ்சியில் போய் ஏறிக்கொண்டோம். "எல்லா ஒழுங்குகளும் செய்திருக்கிறோம்; பகற் சாப்பாட்டுக்கும் நயினா

தீவிற்ருன் ஒழுங்குசெய்திருக்கிறேம்'' என்ருர் திரு. சுந்தரம்பிள்ளை அவர்கள். எனக்கு ஒன்றும் புரியவில்லை; '' ஏன் நீங்களும் வருகிறீர்கள்தானே'' என்று கேட்டேன்; '' இன்றைக்கு மரம் வாங்க வேண்டும்; அங்கே வந்தால் வேலை தாமதமாகிவிடும்'' என்ருர். எனக்குத் தூக்கிவாரிப்போட்டது; ' அப்பாடா, இந்த மனுஷன் இவ்வளவு தூரம் எங்களுடன் அலைய வேண்டுமா. யாழ்ப்பாணத்திலேயே எங்களிடம் சொல்லிவிட்டு நின்றிருக்கக் கூடாதா? அல்லது ஒரு துண்டையும் தனது காரையும் அனுப்பிவிட்டுத் தாராளமாகப் படுத்துத் தூங்கியிருக்கலாமே' என்று யான் யோசித்தேன். அந்தப் பழக்கந்தான் அவரிடமில்லை. அன்பர்களை வரவேற்று உபசரிப்பதில் அவர் ஒரு தனி இன்பங் கண்டவர். அதற்கேற்ற மனைவியும் வாய்த்தது அவருடைய பாக்கியந்தான். ஒரேயொரு ஆண் குழந்தை அவருக்குண்டு.

1918ஆம் ஆண்டு நயினையம்பதியிற் பிறந்து தமது சொந்த முயற்சியால் முன்னுக்கு வந்தவர் திரு. சுந்தரம்பிள்ளை. சகோதரர்களின் உதவியுடன் 1941ல் விவேகானந்த அச்சகத்தை ஆரம்பித்து நடாத்தி அதனையே விஸ்தரித்துப் பெரிய ஸ்தாபனமாக்கினர். 1946ல் விவாகஞ் செய்து அடுத்த ஆண்டிலேயே இராசகுலேந்திரன் எனும் புத்திரனைப் பெற்ருர். பின்னர் திரு. சுந்தரம்பிள்ளை அவர்கள் வட இந்தியா தென் இந்தியாவிலுள்ள தலங்களுக்கு யாத்திரை செய்வதில் ஈடுபட்டார். நயினாதிவு நாகபூஷணி அம்பாள் ஆலயத் திருப்பணிச் சபை ஆரம்பிக்கப் பெற்றபோது அதன் கௌரவ காரியதரிசியாக இவர் நியமிக்கப்பட்டார். திருப்பெருந் திரு குன்றக்குடி அடிகளாரின் கருத்துப்படி இந்தியாவிலிருந்து கைதேர்ந்த சிற்பிகளை நேரிற் கண்டு ஒழுங்கு செய்து இங்கே வரவழைத்துத் தேர் வேலைகளைத் தமது சொந்த வளவிலேயே நடாத்திவந்தார்.

யான் பிறிதொருமுறை யாழ்ப்பாணஞ் சென்றபொழுது தேர்த் திருப்பணி வேலையைப் பார்க்கச் சென்றிருந்தேன். அத் தருணம் திருப்பெருந்திரு குன்றக்குடி அடிகளும் வடமாகாண அதிபரும் அங்கே வந்திருந்தார்கள். டி. ஆர். ஓ. திரு. பெருமையினுரும் அங்கே சமுகமளித்திருந்தார். சிறிதுநேரம் ஆறுதலாகக் கலந்து உரையாடியபின் விடைபெற்றுச் சென்றேம். அன்றுதான் அவரைக் கடைசியாகக் காண்கிறேன் என்றதை யான் கனவிலும் நினைத்திருக்கவில்லை.

1957ஆம் ஆண்டு விழாவின்போது நாகபூஷணி அம்பாள் சித்திரத்தேரில் ஆரோகணித்து வீதிவலம் வருவதைக் கண்டு மகிழவேண்டுமென்று அல்லும் பகலும் ஓயாது உழைத்துத் தேருக்குத் தேவையான மணி, முடி முதலியவற்றைச் செய்வித்துக்கொண்டு வரும் நோக்கமாகச் சென்னைக்குப் பறந்துசென்ற திரு. சுந்தரம்பிள்ளை அவர்கள், திருப்பணி சம்பந்தமான ஏற்பாடுகளைச் செய்தபின் சென்னைப் பட்டினத்திலேயே இறைவன் திருவடிநிழலையெய்தினர் என்ற செய்தி இங்குள்ள சைவ மக்களைத் துக்கசாகரத்தில் ஆழ்த்தியதெனின், அவருடைய அருமை மனைவி, மகன், சகோதரர், உற்ருர், உறவினரின் நிலையைப்பற்றிக் கூறவும் வேண்டுமோ? திரு சுந்தரம்பிள்ளை அவர்கள் ஆற்றிய சைவப் பணிகளோ பல. சமூகத் தொண்டிலும் ஈடுபட்டுழைத்து வந்தார்கள். அவர்கள் பிரிவாற்ருமைக்கு வருத்தந் தெரிவித்துத் தந்திகளும் கடிதங்களும் வந்து குவிந்தன. அவற்றுள் இரண்டொன்றைமட்டும் ஈண்டுக் குறிப்பிட விரும்புகின்றேன். பிள்ளையவர்களின் அரும் பணிகளையும் அன்பர்களின் பாராட்டுகளையும் விளக்கும் '**சுந்தர மலர்**' ஒன்று சுந்தரமாகப் பூத்து நறுமணம் வீசுகின்றது. இது விவேகானந்த அச்சகம் என்னும் பூங்காவில் இருந்து தோன்றியதாகும்.

## அன்பர்களின் குறிப்புரைகள்

(முகாம்) 43/2,
நசமாவத்த ரோட்,
இரத்துமலானை.

திரு. சுந்தரம்பிள்ளை அவர்கள் சிவ பதம் அடைந்த செய்தி அதிர்ச்சியைத் தருகிறது. நல்ல ஒருவர் நம்மை விட்டுப் பிரிந்திருக்கிறார். இதுவே உலக நியதி. அன்னாருடைய ஆத்துமாவுக்குச் சாந்தியை அருளும் வண்ணம் எல்லாம் வல்ல சிவபெருமானைப் பிரார்த்திப்போமாக!

—தவப்பெருந்திரு குன்றக்குடி அடிகளார்

✦ ✦ ✦

72, நம்பப்பன்னவீதி,
இரத்தினபுரி.

திரு. சுந்தரம்பிள்ளை அவர்களின் மரணத்தால் நீங்கள் பிரிய பத்தாவையும், குழந்தை அரிய தந்தையையும், சகோதரர்கள் இணையற்ற தமையனாரையும் இழந்ததோடு, நமது சமுதாயமே ஓர் பக்தனையும் பரோபகாரியையும் இழந்துவிட்டது. உங்கள் எல்லோருக்கும் அம்பாளின் அருள்தான் சாந்தி அளிக்கவேண்டும்.

—க. இராமச்சந்திரன்,
'ஆத்மஜோதி' ஆசிரியர்.

✦ ✦ ✦

ஆத்மிக சேவைக்காகத் தமது உடல், பொருள், ஆவி மூன்றையும் அர்ப்பணித்த தியாகி. கடவுள் பக்தியிற் சிறந்தவர். முருக வழிபாட்டில் தனி நம்பிக்கை கொண்டவர். இவரது பூதவுடல் எம்மிடையே நீங்கிய பொழுதிலும் புகழுடல் என்றும் நிலைநிற்கும். இவரது ஆத்மா சாந்தியடைவதாகுக.

—ம. ஸ்ரீகாந்தா,
வடமாகாண அரசாங்க அதிபர்.

ஊர்காவற்றுறை

எனது அன்பிற்குப் பாத்திரமான நண்பர் திரு. சுந்தரம்பிள்ளை அவர்களுடன் எனக்குப் பலநாட் பழக்கங் கிடையாது. ஆயினும், யான் பழகிய சில நாட்களுக்குள்ளும் அவரிடத்திற் கண்ட பண்பாடும் குணாதிசயங்களும் என்னைக் கவர்ந்தன. இன்னும் சிலகாலம் பழகமுடியவில்லையே என்பதுதான் கவலை. அவரது ஆத்மா சாந்தியடையப் பிரார்த்திப்போமாக.

—ஆ. கந்தையா,
ஊர்காவற்றுறைக் காரியாதிகாரி.

✦ ✦ ✦

## கலைத் திருப்பணி செய்த இளம் பெரியார்

**பிள்ளையவர்களின் பிரிவைக் குறித்து வீரகேசரி ஆசிரியர் கே. பி. ஹரன் அவர்கள் எழுதியது:**

சில மாதங்களுக்கு முன் யாழ்ப்பாணஞ் சென்றிருந்தபொழுது, அரசாங்க அதிபர் ஸ்ரீ ஸ்ரீகாந்தா அவசியம் ஒரு தமிழ்க்கலைச் செல்வத்தை நான் பார்க்க வேண்டுமென்று கூறினார்கள். நயினாதிவு நாகபூஷணி அம்பாளுக்குப் புதிய சித்திரத் தேர் ஒன்று கட்டப்படுவதாயும், அந்தத் திருப்பணிச் சபைக் காரியதரிசியான சுந்தரம்பிள்ளை அவர்களின் வளவிலேயே அச் செல்வம் உருப்பெற்று வருவதாகவும் அறிந்து அங்குசென்று பார்த்தேன். அந்த வளவெல்லாம், ஒரே கலைச்செல்வமாகக் காட்சி அளித்தது. மிக ஆர்வத்துடனும் அன்புடனும் வரவேற்று அந்தக் கலைச் செல்வம் யாவற்றையும் பெருமையுடன் காட்டினார் அந்தப் பண்பாளர். இத்துடன் நில்லாமல், நாகபூஷணி அம்பாளையும் தரிசிக்க வேண்டுமென்று என்னைத் தூண்டி, அதற்கு வேண்டியதையும் செய்தார்கள். அவர் செய்த நன்றியை நான் எந்நாளும் மறக்க முடியாது. பின்னர் மீண்டும்

சந்தித்தபோதும் இத் தேர்த் திருப்பணிக்காக அசாதாரண ஊக்கத்துடன் காரியம் செய்பவரையும் கண்டு அவர்மீது பெரு மதிப்புக்கொண்டேன்.

ஆனால் நாற்பது வயதுகூட ஆகாத அந்த இளம் பெரியார் சென்னைக்கு இதே திருப்பணி வேலையாகச் சென்றிருக்கையில் திடீரெனக் காலமானதைக் கேட்டுத் திகைத்துவிட்டேன். நம்ப முடியவில்லை. 'எல்லாம் அம்மையின் செயல்' என்று அவர் அடிக்கடி சொல்லுவாராம்! அவ்வளவு அன்புடன் பணிசெய்தவரை இவ்வளவு சீக்கிரத்தில் அம்மை அழைத்துக் கொண்ட காரணந்தான் என்ன? அந்தப் பக்தரின் குடும்பத்தாரை ஏன் இப்படித் தவிக்க விடவேண்டும்? இந்தக் கேள்விகள் என் உள்ளத்தில் எழுந்தன. சரியான பதில் கிடைக்கவில்லை என்றாலும் எல்லாம் அறிந்த கருணைக் கடலான அம்மையின் கருத்தை அறிய அற்பராகிய நாம் யார்? ஆனால் ஒன்று. காந்தியடிகள் திடீரென மறைந்தபின், அவர் உலகெங்கும் கோடிக்கணக்கான உள்ளங்களில் நிறைந்துவிட்டார். அவரது அன்புப் பணியை மற்றும் பலர் மேற்கொண்டு செய்கின்றனர். அதுபோலச் சுந்தரத்தார் மறைந்ததும் அவர் பல அன்பர்களின் உள்ளத்திற் புகுந்து அத் திருப்பணியை மட்டுமன்றி, அதுபோன்று ஈழத்திற் செய்ய வேண்டிய பல மேலான திருப்பணிகளையும் நிறைவேற்ற உறுதியாக நிற்பதுடன், மலர்மிசை ஏகினானின் மாணடி சேர்ந்த அப் பெரியாரின் புகழ் நிலமிசை நீடு வாழுமென்பது எனது உளமார்ந்த நம்பிக்கை.

---

கரும்புமுரல் கடிமலர்ப்பூங் குழல்போற்றி
உத்தரியத் தொடித்தோள் போற்றி
கரும்புருவச் சிலைபோற்றி கவுணியர்க்குப்
பால்சுரந்த கலசம் போற்றி
இரும்புமனங் குழைத்(து)என்னை எடுத்தாண்ட
அங்கயற்கண் எம்பி ராட்டி
அரும்பும்இள நகைபோற்றி ஆரணநூ
புரஞ்சிலம்பும் அடிகள் போற்றி.

— பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணம் — கடவுள் வாழ்த்து

# ஸ்ரீ. எஸ். குமாரசுவாமி ஆசாரியார்

நயினாதீவுத் தேரைப்பற்றி நீங்கள் அறிந்துகொள்வதற்கு முன்னர் அதனை உருவாக்க அல்லும் பகலும் இடையிடின்றி உழைத்துவந்த ஸ்தபதியார் அவர்களைப் பற்றி ஒரு வார்த்தை கூற விரும்புகிறேன். சில கோயில்களிலே திருப்பணி ஆரம்பமாகிவிட்டால் அது நிறைவேற ஆண்டு பல செல்லும். அப்படி முற்றுக நிறைவேருது அரைகுறையாக நின்றுவிடுவதுமுண்டு. பாலஸ்தாபனம் செய்து ஆரம்பிக்கப்பெற்ற கோயிற்றிருப்பணி வேலை நிறைவேறிக் கும்பாபிஷேகம் நடைபெருதிருக்கும் கோயில்களையும் நாம் காண்கின்ருேமல்லவா? ஆகவே கோயிற்றிருப்பணி முட்டின்றி நிறைவேறுதற்குத் திருவருள் கூட்டி வைக்க வேண்டும் என்பதுண்மையே. எனினும் அத்திருவருள் வயப்பட்டு நின்று இயங்கக் கூடிய ஸ்தபதியார் ஒருவர் கிடைத்தது தேர்த் திருப்பணிச் சபையாரின் அதிர்ஷ்டம் என்றுதான் சொல்லவேண்டும். திருப்பணிச்சபையினர் தங்கட்கு ஒரு நல்ல ஸ்தபதியை ஒழுங்கு செய்யுமாறு **திருப்பெருந்திரு குன்றக்குடி அடிகளாரை** வேண்டிக்கொண்டனர்; இதற்கிடையில் திருப்பணிச்சபைக் காரியதரிசி திரு. **வே. சுந்தரம்பிள்ளை** அவர்கள் யாத்திரைக்குச் சென்ற பொழுது தகுந்த ஒரு ஸ்தபதியைத் தேடித்திரிந்தார்கள். கடைசியாக திருப்பெருந்திரு **குன்றக்குடி அடிகளாருடைய** சிபார்சின்பேரில் திரு. **எஸ். குமாரசுவாமி** ஆசாரியார் அவர்களையே திருப்பணிச் சபையினர் தெரிந்தெடுத்து இத் திருப்பணியை நிறைவேற்றுமாறு கேட்டுக்கொண்டனர். அவ்வாறு நீராவியடியில் திரு. **சுந்தரம்பிள்ளை** அவர்கள் வளவிலிருந்து இத் திருப்பணி வேலையைத் தென்னிந்தியாவிலிருந்து வரவழைத்த நுண்டொழில் நிபுணர்களின் உதவியுடன் ஆரம்பித்தார்கள். கலாச்சாரப் பகுதி அதிபரும், டக்டர் டபிள்யூ. பாலேந்திரா அவர்களும் இத் திருப்பணி வேலையைப் பார்வையிட்ட தினத்தன்று யானும் தற்செயலாகப் பார்வையிட நேர்ந்தது. அந்தச் சமயத்தில் திரு. **வே. சுந்தரம்பிள்ளை** அவர்கள் திரு. **குமாரசுவாமி** ஆசாரியார் அவர்களை அறிமுகப்படுத்தி வைத்தார்கள். அன்று அவர்களிடம் பல கேள்விகளைக் கேட்டேன். அவர் ஆற அமரப் பதில் அளித்தார்கள். கோயில் சம்பந்தமாக அநேக விஷயங்களை அறிந்துகொள்ளக் கூடிய அறிஞர் ஒருவரைச் சந்தித்துவிட்டேன்; அடிக்கடி இவருடன் கலந்துரையாட வேண்டும் என்று தீர்மானித்தேன். ஆனல் வாழ்க்கைப் போராட்டத்தில் ஈடுபட்டலைந்து திரியும் எம்போலியர் செய்யும் தீர்மானங்களை நிறைவேற்றுதல் இயலக்கூடிய தொன்றுமோ? கொழும்புக்குத் திரும்பி வந்துவிட்டால் இங்குள்ள தொழிலில் நேரத்தைப் போக்கவேண்டியதுதான். இது நிற்க, திரு. **குமாரசுவாமி** அவர்களை முதன்முதற் கண்டபொழுது இவர் இந்தக் காலத்துக்கேற்றவரல்ல என்றுதான் கருதினேன். இந்தக் காலம் விளம்பரக் காலம்; போலித்தலைவர்கள் தோன்றுங் காலம். எனவே கலியுகத்திலே பணிவும் அடக்கமும் உள்ள ஒருவர் வாழ்வு நடாத்துவது மிகமிகக் கஷ்டம். ஆனல் உண்மையான உழைப்பு ஈற்றிலே வெற்றியைத் தராமற் போகாது. போலிக் கொக்கரிப்பினுல் முன்னுக்கு வருவோர் இருந்த இடமுந் தெரியாமல் மறைந்துவிடுவர்.



ஸ்தபதியார் திரு. எல். குமாரசுவாமி ஆசாரி அவர்கள்

திரு. **குமாரசுவாமி** அவர்களை நான் முதல்முதலாகக் கண்டபொழுது அவருடைய ஆற்றலையும் அநுபவத்தையும் ஒழுக்கத்தையும் அறிந்திருக்கவில்லை. சாதாரண ஸ்தபதிகளில் ஒருவராகவே கருதினேன். நாட்கள் செல்லச் செல்ல அவருடைய பணிவும் இன்சொல்லும் ஒழுக்கமும் என் உள்ளத்தைக் கவர்ந்தன. சிற்பக்கலைக் கல்வியும் கல்விக்கேற்ற ஒழுக்கமும் நல்ல அநுபவமும் வாய்ந்த இந்த ஸ்தபதியார் தம்மைப்பற்றி ஒரு வார்த்தையாவது கூறுவதே கிடையாது. ஒரு சிறு வேலையை நிறைவேற்றி அதனைப் பத்திரிகைகளிற் பெரிதாக விளம்பரஞ் செய்து திரிகின்ற போலி ஆசாமிகள் நடமாடும் இக்காலத்தில் இத்தகைய பெரிய திருப்பணியை நிறைவேற்றிய பின்னரும் தாம் மறைந்துநிற்கவே விரும்புகின்றார். யாழ்ப்பாணத்திற் சில மாதங்கள் வாழ்ந்ததால் நாகபூஷணி அம்பாளின் அருள்பாலிக்கப் பெற்றுவிட்டார்கள் என்றுதான் சொல்லவேண்டும்.

நீராவியடியிலே தேர்த் திருப்பணியைப் பார்க்கச் செல்பவரையெல்லாம் ஆறுதலாகக் கூட்டிச் சென்று திருப்பணிகளை விளக்கிக் கூறிவந்தார்கள். ஒருமுறை நண்பகல் 12 மணியளவில் நீராவியடிக்குச் சென்றேன். அங்கே திரு. **வே. செல்வநாயகம்** அவர்களும் டி. ஆர். ஓ. திரு. **ஆ. கந்தையா** அவர்களும் புதிதாக வந்த சிலருக்கு மரச் சித்திர வேலைகளைக் காண்பித்துக்கொண்டு நின்றார்கள். 'ஸ்தபதியார் எங்கே'? என்று கேட்டேன். 'இப்பொழுதுதான் வீட்டுக்குப்போய் இருக்கிறார்' என்று விடைகூறினார் தொழிலாளிகளிலொருவர். கொழும்பிலிருந்து வந்து அவருடன் கலந்து உரையாடாமற் செல்லக்கூடாதெனக் கருதி அவருடைய வீட்டுக்குச் சென்றேன். அப்பொழுதுதான் வெயர்வையைத் துடைத்துக்கொண்டிருந்தார். என்னைக் கண்டதும் மறுபடியும் புறப்பட்டுவந்து திருப்பணியைப் பற்றிய விவரங்களைக் கூறினார். பின்னர், கடந்த வைகாசிமாதம் தேரைப்பற்றிய சில குறிப்புக்களை எடுத்துவர வடமாகாண அதிபரின் விருப்பத்தின்படி நயினாதீவுக்கு யான் சென்றிருந்தபொழுது, இரவில் பத்துப் பதினொரு மணிவரை என்னுடன் இருந்து தேவையான குறிப்புக்களைத் தந்துதவியதுமன்றி, அடுத்தநாட்காலை நாலரை மணிக்கே விழித்தெழுந்து தேரடிக்கு வந்துவிட்டார்கள். நயினாதீவிலிருந்து காலையிற் புறப்படும் லாஞ்சியிற் பிரயாணமாவதற்கு முன்னர் நான் குறிப்புக்களை எழுதக்கொள்ள வசதிசெய்து தந்தார்கள். திரு. **குமாரசுவாமி ஆசாரியார்** அவர்கள் இந்தத் தேர் செய்யும் வேலையை ஒரு கொந்தராத்து வேலையாகக் கருதாது அம்பாளின் திருப்பணியாகக் கருதி உழைத்துவந்தார்கள். இதன்பயனாக இம்முறை நாகபூஷணி அம்பாள் சித்திரத் தேரிற் பவனிவருகின்றாள். திரு. **குமாரசுவாமி ஆசாரியார்** தம்முடன் கூட்டிவந்த தொழிலாளரும் இதனை ஒரு திருப்பணியாக நினைத்தே செய்துவந்தார்கள். இரவில் ஒன்பது பத்து மணிவரை வேலைசெய்து வந்தார்கள். இவ்வருட மகோற்சவத்தின்போது புத்தம் புதிய சித்திரத் தேரிலே ஸ்ரீ நாகபூஷணி அம்பாளை உலாவச் செய்ய வேண்டுமென்பதில் எல்லோரும் ஒத்துழைத்தார்கள். உள்ளூர் சிற்பாசாரியர்களும் இவர்களுடன் ஒத்துழைத்துத் தேர்த் திருப்பணியை நிறைவேற்ற முன்வந்தமை ஒரு நற் சகுனமென்றே கூறலாம்.

எத்தனையோ இடங்களிலே திருப்பணி வேலை செய்த திரு. **குமாரசுவாமி ஆசாரியார்** தமது கலைப்பணியின் சிகரமாக இந்தத் தேரைச் செய்து நிறைவேற்றியிருக்கிறார் என்றுதான் சொல்லவேண்டும். இதனால் அம்பாள் அருள்பாலிப்பதற்கும் தம்மை அருகராக்கிக்கொண்டார். இவருடைய சஷ்டியாப்த பூர்த்தி விழா வடமாகாண அதிபர் தலைமையில் விசேஷ பூசை, அன்னதானம் முதலிய

அம்சங்களுடன் அம்பாள் சந்நிதியிற் சிறப்பாகவே நிறைவேறியதை நோக்குமிடத்து அதுவும் அம்பாளின் திருவிளையாடல் என்றுதான் சொல்ல வேண்டும். இந்தத் தேரின் சிறப்பைப்பற்றி இலங்கை மக்கள் மட்டுமன்றி அந்நியர்களும் வாயாரப் புகழ்ந்திருக்கின்றார்கள். அவற்றைப் பிறிதோரிடத்திற் காண்க.

### சிறிய சரித்திரச் சுருக்கம்

திரு. குமாரசுவாமி அவர்கள் 1897ஆம் ஆண்டு ஜூன் மாதம் நாகர்கோவிலைச் சேர்ந்த தாழக்குடியிற் பிறந்தார்கள். சிறுவயது தொடக்கமே சித்திரம் வரைவதில் ஆர்வங் கொண்டிருந்தார். பிறந்தவூரிற் கல்விபயின்று பின்னர் திருவனந்தபுரஞ் சென்று 1917ல் வரைதற் சித்திரத்திலும் இதன்பாற்பட்ட வர்ணந் தீட்டல், கோட்டுப்படம் வரைதல் முதலிய பாடங்களிலும் பரீட்சை யெடுத்துப் பத்திரங்கள் பெற்றார். தமது 18ஆவது வயதில் திருவாங்கூர் அரசாங்கப் பள்ளியில் ஆசிரியராக அமர்ந்து தொண்டாற்றினார். அப்பொழுது அங்கே நடந்த பொருட்காட்சியில் தாம் வரைந்த படமொன்றை அனுப்பி நிர்வாகஸ்தரின் நன்மதிப்பைப் பெற்றார். அக்காலந் தொடக்கம் தன் தாயார் பரம்பரையிலுள்ள சிற்பவேலை மரவேலைகளும் இடையிடையே செய்து வந்தார். இத்துறையில் நாட்டஞ் செலுத்திய திரு. குமாரசுவாமி அதனை நன்கு கற்ற அனுபவம் வாய்ந்த ஸ்தபதியார் ஒருவரிடம் சீடனாகச் சேர்ந்து கற்றுவந்தார். நாகர்கோவிலில் உள்ள ஒரு நற்குண மங்கையை மணந்துகொண்டார்.

1924ஆம் ஆண்டிலே முதன் முதலில் இவர் தேர்செய்தது சென்னை சிந்தாதிரிப்பேட்டை திரௌபதை யம்மன் கோயிலுக்காகும். பின்னர் தென்னிந்தியாவில் அநேக இடங்களில் ஆலயத்திற்கு வேண்டிய வாகனாதிகளும் இரதம் முதலியவைகளும் செய்து இளம் பிராயத்திலே புகழ் பெற்று விளங்கினார். ஸ்ரீரங்கம், திருப்பதி, காஞ்சிபுரம், சென்னை முதலிய இடங்களிலுள்ள கோயில்களுக்கு வாகனாதிகளும் தேர்களும் செய்தமையால் இவருடைய கீர்த்தி தமிழுலகிற் பரவத் தொடங்கியது. ஆந்திராவில் உள்ள கோயில்களுக்கும் தேர்செய்துள்ளார். வட இந்தியாவிலும் பூனா, கல்கத்தா, ரிஷிகேசம், ஹரித்துவாரம் முதலிய இடங்களிலும் திருப்பணி செய்து, அங்குள்ளவர்களின் நன்மதிப்பைப் பெற்றுள்ளார். கற்சிற்பம், லோகசிற்பம், மரச்சிற்பம், சுதைச்சிற்பம் முதலிய தொழில்களில் ஈடுபட்டவர்களை ஒருங்கு சேர்த்து, **'சிற்ப எம்போரியம்'** என்ற பெயருடன் சிற்பத் தொழிலாளர் சமாசமொன்றை ஏற்படுத்தி நடாத்திவந்தார். இது அபிவிருத்தியடையாமையால் திருப்பதிக்குச் சென்று சில வருடம் அங்கே தங்கினார். திருப்பதி ஆலயத்துக்கு வேண்டிய சில திருப்பணிகளையுஞ் செய்து முடித்தார். சிற்பக்கலை வளர்ச்சிக்குச் சிற்பக்கலை வல்லுநர் ஒன்று சேர்ந்து ஒத்துழைக்க வேண்டுமென்று கருதி, தமிழ்நாட்டுச் சிற்ப கலா சங்கத்தை நிறுவி அதன் உப தலைவராகவும் தொண்டாற்றி வருகின்றார். முன்னர்க் குறிப்பிட்டவாறு திருப்பெருந்திரு குன்றக்குடி அடிகளாரின் சிபார்சின் பேரில் யாழ்ப்பாணம் வந்து இந்தத் தேர்வேலையை ஏற்றுக் கொண்டார். அம்பாள் அருளால் இவருடைய முயற்சி நிறைவேறி ஆனிமாதப் பௌர்ணமையன்று சித்திரத் தேர் ஓட ஆயத்தமாக விருக்கின்றது. வெள்ளோட்டம் ஜூன் மாதம் 8ஆம் திகதி நடைபெறும்.

ஈழநாட்டிற்கு அழியாப் புகழை ஈட்டித் தருவதற்கேற்ற சித்திரத் தேரினையமைத்துத் தந்த திரு. குமாரசுவாமி ஆசாரியார் தம் குடும்பத்துடன் பல்லாண்டு வாழத் தேவி திருஅருள் பாலிக்குமாறு திரிகரணசுத்தியுடன் வேண்டிக் கொள்ளுகின்றோம்.

# தேரின் தத்துவம்

**தேவாலயம்**

'தேவாலயமாவது எங்கும் வியாபகராய் மறைந்திருக்குங் கடவுள் தம்மை ஆன்மாக்கள் வழிபட்டு உய்யும் பொருட்டுச் சாந்நித்தியராய் எழுந்தருளியிருக்கும் இடமாம்' என்று ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் அவர்கள் நான்காம் பாலபாடத்தில் விளக்கியுள்ளார்கள். கடவுளது திருவடியில் ஆன்மா லயிப்பதற்கு உரிய இடம் அல்லது ஆணவமலம் அடங்குவதற்குரிய இடம் என்று பொருள் கோடலு மொன்று. ஆலயங்கள் நித்தியம், நித்தியாங்கம், நைமித்திகம், நைமித்தியாங்கம், காமிகம், காமிகாங்கம் என்னும் 'ஆறு உறுப்புக்களானும்' நடத்தப்படும். நைமிகத்துள் ஒன்று தான் மகோற்சவம்[1]

**உற்சவம்**

"உற்சவம் என்னும் சொல்லுக்குப் பல கருத்துக்கள் உண்டு. (உத்—மேலான, சவம்—ஐந்தொழில்; உத்—ஞானம், சவம்—போக மோட்சம்) மேலான ஞானத்தையும் போக மோட்சத்தையுங் கொடுப்பதென்பது ஒரு கருத்து. சிவபெருமான் ஐந்தொழில்களையுஞ் செய்து உயிர்களைக் காக்கும் முறையைத் திருவிழாக்கள் வெளியிடுகின்றன. இவற்றுட் கொடியேற்றம் வரையுள்ள கிரியைகள் படைத்தலையும், வாகனத் திருவிழாக்கள் காத்தலையும், **தேர்த்திருவிழா அழித்தலையும்**, மௌனோற்சவம் மறைத்தலையும், தீர்த்தம் அருளலையுங் குறிக்கும்.

எவ்வாறெனில், முதல்நாள் சரீரத்தை உண்டாக்குதலையும், இரண்டாநாள் நல்வினை தீவினையைப் பயன்படுத்துதலையும், மூன்றாநாள் முக்குணங்களை எழுப்புதலையும், நாலாநாள் உட்கருவிகளை முயற்பித்தலையும், ஐந்தாநாள் ஞானேந்திரியங்களை வசப்படுத்துதலையும், ஆறாநாள் ஆசை முதலியவைகளைக் கெடுத்தலையும், ஏழாநாள் எழுவகை மந்திரங்களைப் பதித்தலையும், எட்டாநாள் பாசஞானம் நீங்குதலையும், ஒன்பதாநாள் மும்மலங்களையுங் கெடுத்தலையும், பத்தாநாள் சிவானந்தத்தைக் கொடுத்தலையுங் குறிக்குமென்பர். பத்து நாட்களுக்கு மேற்பட்ட திருவிழாக் காலத்தையும் அதிற் குறைந்த காலத்தையும், இத் தொழில்கள் அமையத் தக்கதாக வகுத்துக்கொள்ளலாம்."[2]

இனி, உற்சவங்களின் உட்கருத்தை நாவலர் ஐயா அவர்கள் பின்வருமாறு விளக்கியுள்ளார்கள் :

"மகோற்சவ நாள் பத்தினுள், முதனாள் விழாத் தூலநீக்குதற் பொருட்டும், இரண்டா நாள் விழாத் தூல

1. மகோற்சவ சந்திரிகை—பிரமஸ்ரீ ச. குமாரசுவாமிக் குருக்கள்—பக். 9–10

2. சைவக் கிரியை விளக்கம்—சு. சிவபாதசுந்தரம்—பக். 50–51

சூக்கும நீக்குதற்பொருட்டும், மூன்ரு நாள் விழா மூவினையும், முப்புத்தியும், முக் குணமும், மும்மனமும், முக் குற்றமும், முப்பிறப்பும், முப்பற்றும் நீக்குதற்பொருட்டும், நாலாநாள் விழா நாற்கரணமும், நால்வகைத் தோற்றமும் நீக்குதற் பொருட்டும்,, ஐந்தாநாள் விழா ஐம்பொறியும், ஐந் தவத்தையும், ஐந்து மலமும், நீக்குதற் பொருட்டும், ஆரு நாள் விழாக் காமாதி யாறும், கலையாதியாறும், வினைக்குண மாறும், பதமுத்தியாறும் நீக்குதற் பொருட்டும், ஏழா நாள் விழா எழு வகைப் பிறப்பும், கலாதிக ளேழும், மாயாமல குண மேழும், நீக்குதற் பொருட்டும், எட்டா நாள் விழா எண் குணமும் விளக்குதற் பொருட்டும், ஒன் பதா நாள் விழா மூன்ருருவும், முத் தொழிலும் மூன்றிடத் துரைத்தலும், இலயெனற் பொருட்டும், பத்தா நாள் விழாப் பரானந்தமாக் ·கடலில் அழுத் துதற் பொருட்டுஞ் செயற்படுதலால், சிவோற்சவ காலத்துப் படிக்கலாகா தென்ருர். இவையெல்லாம் விம்ப தந்திரத்திற் சிவோற்சவ படலத்திற் காண்க.''[1]

### இரதோற்சவம்

தேவாலயங்களில் நடைபெறும் இரதோற்சவத்தில் உபயோகிக்கப் படும் தேரின் தத்துவங்கள் யாவை என்பதைச் சதாவதானம் நா. கதிரை வேற்பிள்ளையவர்கள் அழகாக விளக்கி யுள்ளார்கள்.

## ஏழாநாள் விழா

### இரதாரூட திருக்காட்சி

''ஏழாநாளிலே இரதாரோகண திருக்காட்சி யுண்டாம். இது சில ஆலயங்களிலே ஒன்பதாநாளினுஞ் செய்யப் படும்.

இதனுண்மையை விவரணம் பண் ணுங்கால், ஆதிகாலத்திலே, தடங்கரு ணைப் பெருங்கட லெந்தையாகிய சிவ பெருமான், மந்தர கேசரி மலைகள் அச் சாகவும், சூரிய சந்திரர்கள் சக்கரமாக வும், ஆறிருதுக்கள் சந்தியாகவும், பதி ஞன்குலோகமும் பதிஞன்கு தட்டுகளாக வும், ஆகாயம் ஆசனமாகவும், உதயாத்த மலைகள் கூவிரமாகவும், நதிகளும் நதங்களும் கொடிகளாகவும், நக்ஷத்திரங் கள் விதானமாகவும், மோக்ஷலோகம் மேல்விரிவாகவும், யாகங்கள் சட்டங்க ளாகவும், நாள் முதலியன இடுக்கு மர மாகவும், அட்டமலைகள் தூண்களாக வும், அட்டயானைகள் தாங்குவனவாக வும், சத்தசமுத்திரங்கள் திரைச்சீலைக ளாகவும், கன்ம ஞானேந்திரியங்கள் கலன்களாகவும், கலைகள் முளைகளாக வும், வேதாங்க உபாங்க மநுசாஸ்திரங் கள் மணிகளாகவும், வாயுக்கள் படிக ளாகவும், நான்கு வேதங்கள் பூட்டப்ப டுங் குதிரைகளாகவும், அமைக்கப்பட்ட இரதத்திலே யெழுந்தருளி, கங்கை முத லிய தேவமாதர்கள் சாமரமிரட்டவும், ஊர்வசி முதலிய கணிகை மகளிர் நட னஞ் செய்யவும், மகாமேரு மலையை வில்லாகவும், சரசுவதியை வில்லிற் கட் டிய மணியாகவும், வாசுகியை நாணுக வும், விஷ்ணுவைப் பாணமாகவும், அக் கினி தேவனை அவ்வம்பின் கூர்வாயாக வும், வாயுதேவனை அம்பிறகாகவுங் கொண்டருளி, பிரமனுகிய சாரதி பிர ணவமாகிய தூண்டுகோல் கொண்டு செலுத்த, திரிபுர அவுணர்களைத், தந் திருப் புன்னகையக்கினியால் நீருக்கி யரு ளினர், என்னும் வரலாற்றுண்மையைக் காட்டுவதே இவ்விரதசேவைக் காட்சி என அநுமிக்கப்பட்டு விஸ்வரூபியாயும், விஸ்வகாரணராயும், விஸ்வசேவியரா யும், விஸ்வாந்தரியாமியாயும், இருப்ப வர் சிவபெருமானே யென்பதும், முப்புர

1. சைவசமயநெறியுரை—ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் புத்துரை—பக். 221.

மென்பது, ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலகாரியங்கள் எனவும், அத்திரிபுரங்களையும் நீறுக்கி, தாரகாக்ஷன் கமலாக்ஷன் வித்துன்மாலி என்னு மூவர்களையுந் தேவர்களையும் அடிமையாகக் கொண்டு அவர்கட்குத் தம்பத மருளி இன்பங் கொடுத்தமை, மும்மலங் காரியங்களையுங் கெடுத்து விஞ்ஞானுகலர் பிரளயாகலர் சகலர் என்னு மூவகை யான்மாக்களையும் அடிமையாக் கொண்டு திருவடிமுத்தி கொடுக்கும் உண்மை எனவும், அறிய நின்றதனுல் எல்லாமாய், அவைகட்குக் காரணமுமாய் நிற்கும் பரமபதியாகிய சிவபெருமானே ஆன்மாக்கட்கு மும்மலபந்த வாதனைகளைக் கெடுத்து, திருவடிப் பேருகிய பேரானந்தப் பெருவாழ்வளிப்பர் என்பதும் உணரப்படும்.

திருமந்திரம்

அப்பணி செஞ்சடை யாதி புராதனன்
முப்புரஞ் செற்றன னென்பர்கண் மூடர்கண்
முப்புர மாவது மும்மல காரிய
மப்புர மெய்தமை யாரறி வாரே.

இங்ஙனமின்றி, தேரிலே விளங்கும் ஏக உச்சிக்குடை பிரமரந்திரமாகவும், கலசம் சோடசாந்தத் தானமாகவும், மேலுள்ள முதலாம் அடுக்கு துலாதசாந்தத் தானமாகவும், இரண்டாம் அடுக்கு மஸ்தக ஆதித்தனமாகவும், மூன்ரும் அடுக்கு மத்தியத் தானமாகவும், நாலாம் அடுக்கு மஸ்தகாந்தத் தானமாகவும், ஐந்தாம் அடுக்கு லலாட மத்தியமாகவும், ஆரும் அடுக்கு புருவ மத்தியமாகவும், நடுவுள்ள ஏழாம் அடுக்கான முப்பத்திரண்டு குத்துக்கால்கள் முப்பத்திரண்டு தத்துவங்களாகவும், முற்றுறைகளே கண்களாகவும், பிற்றுறைகள் சிகைகளாகவும், பக்கத்துறைகளே இரு செவிகளாகவும், பீட முதற்பகுதி வாயாகவும், இடப்பக்கத்துள்ள இரு குதிரை வடிவங்கள் இடப்பாக சூரியசந்திர கலாவாசிகளாகவும், வலப்பக்கத்துள்ள இரு குதிரை வடிவங்கள் வலப்பாக சூரியசந்திர கலாவாசிகளாகவும், சாரதி வடிவம் மும்மலரூபம், நாசி என்பவாகவும், எட்டாம் அடுக்கிடப்பகுதி அந்தக்கரண சொரூபம் கண்டத்தானம் என்பனவாகவும், அதின் கிழிடப்பகுதி ஐந்தவத்தை, ஐங்கோசம், இராகாதி பதின்முக்குணம் என்பவற்றின் ரூபமாகவும், இருதயத் தானமாகவும், அதின் கீழ்ப்பகுதி தசேந்திரியம், நாபித்தானம் ஆகவும், அதின் கீழுள்ள அச்சு பஞ்சபூதம், குண்டலி சத்தித்தானம் ஆகவும், சக்கரங்கள் தசவாயுக்களாகவும், இருகால்களாகவுங் கொண்டு, சரீர சொரூபத்தை விளக்கி, பின்னர் சக்கரங்களான தசவாயுக்களையும் நிறுத்த, அசைதன் முதலிய வினைகள் ஒழியுமெனவும், அவ்வாறுள்ள சீவன் தன் மனதத்துவத்தை, முறையே மேலாக விளங்கும் உந்திக்குண்டலியிலிருந்து நாபிக்கும், அங்கிருந்து முறையே இருதய கண்டத் தானங்களுக்கும் ஏற்றி லயப்படுத்தி, அங்கிருந்து மேலாக விளங்கும் வாய் நாசி என்பவைகளுக்கும் ஏற்றி லயப்படுத்தி. அங்கிருந்து இரு கண்கள் வழியாகவும் மேனேக்கி, ஆரும் அடுக்காகிய புருவ மத்தியத்துக்கும், அங்கிருந்து ஐந்தாம் அடுக்காகிய லலாட மத்தியத்துக்கும், அங்கிருந்து மற்றையடுக்குகளாகிய மஸ்தக அந்தத்தானம், மத்தியத்தானம், ஆதித்தானம், துவாத சாந்தத்தானம், என்பவைகளுக்கும், அங்கிருந்து மேல் உச்சிக்குடையாகிய பிரமரந்திற்கும் ஏற்றி லயப்படுத்தி, அங்ஙனம் சும்மா இருந்தபடி யிருக்கும் நித்திய நிரசதியானந்த ரூபியாயிருக்க வேண்டும் என்பவும் உணரப்படும்.

இன்னும் தேர்வடிவம் சரீரமாகவும், அதிற் காணப்படும் நான்கு சிங்கவடிவங்கள், ஆன்மாவின் சர்வவித சிவகாருணியமில்லா லோபகுரூரம், சர்வவித ஆசைப் பெருக்க சங்கற்ப விருத்தி. சர்வவித அபிமான கோலாகல விபரீதம், சர்வவித அகங்கார கோபதாப விகாரம் என்னும் இந் நான்குவித கர்ம விருத்திகளாகவும், எட்டு யாளி உருவங்கள், ஆன்மாவினது அஞ்ஞானம், அபி

மானம், ராகாதிருணம், துக்கம், விடய வாசனை, நானவித கன்மம், உபாதி, அவஸ்தைஎன்னும் எட்டுவித அநுபவங்களாகவும், கொடிகளெல்லாம் தத்துவ கூட்டங்களாகவும், மணிகளெல்லாம் பீசமந்திர பிரணவாதி சத்தங்களாகவும், குஞ்சங்கள் எல்லாஞ் சீவர்கள் மனேசலனத்தால் எண்பத்து நான்கு லக்கயோனி பேதங்களாக மாறிமாறித் தோன்றியடையும் மரணவத்தையாகவுங் கொண்டு, சீவர்கள் சிங்கங்களையொத்த கர்ம விருத்திகளையும், யாளிகளைப் போன்ற அநுபவங்களையும், கொடிகளைப் போன்ற தத்துவக் குழாங்களையும், மணிகளைப்போன்ற வாக்கொலிகளையும், குஞ்சங்களைப் போன்ற மனசலன தோற்றங்களையும், இல்லையென்னும்படி செய்து, சித்திரதீபம் போல நின்று மோன சாட்சாத்கார கோல நிலையில் நிற்கவேண்டும் என்பதும், இந்த லயக்கிரம திதிக்கோலத்தால் அறிவார் நுண்ணுணர்வோர்.''[1]

**பல்வகைத் தேர்:**

தேர்கள் பலவகைப்பட்டனவாயினும் அவற்றின் உருவ அமைப்பில் அதிக உருவ வேற்றுமை காணப்படவில்லை.

"தேர்கள்: மரத்தேர், வெள்ளித்தேர், தங்கத்தேர் முதலியவை உண்டு. தேர்களில் மிகச் சிறந்த சிற்பவேலை செய்து பதிக்கப்பெறும். உருளை நான்கு முதல் பத்து உருளைவரை இருப்பது உண்டு. திருவாரூர்த் தேர் மிகப் புகழ்பெற்றது. ஸ்ரீ வில்லிபுத்தூர்த் தேர் மிகப் பெரியதென்பர். தேர் ஓட்டுதல் ஒரு சிறந்த கலை. எல்லாராலும் முடியாது. புறப்பட்டபிறகு நிலைக்குச் சேர்ப்பித்தல் மிகக் கடினம். ஆயிரக் கணக்கான மக்கள் அதனை இழுக்கவேண்டும். தெப்பத்தேர், நீர்மேல் மிதக்குந் தேர். இது இக் காலத்தில் மின்சார விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டு வெகு சிறப்பாகச் செய்யப்படுகிறது. வெள்ளித் தேர்கள் திருவண்ணமலை, பழனி முதலிய இடங்களில் உண்டு. வாகனம், தேர் இவைகளைச் செய்யுந் தொழிலும் ஒரு சிறந்த தொழிலாகும்" என்று கூறுகிறார்கள் இராவ்பகதூர் சி. எம். இராமச்சந்திரச் செட்டியார் அவர்கள்.[2]

தேர்களைப் பெரும்பாலும் தாமரை மொட்டுவடிவிலேயே அமைத்தனர் என ஊகிக்க இடமுண்டு. மேலும் **கொடுஞ்சி** என்ற ஓர் உறுப்பும் தேர்களிலே அமைக்கப் பெற்றிருந்தமை நோக்கற்பாலது.

**கொடுஞ்சி**

"கொடுஞ்சி யென்பது தாமரைப் பூவாகப் பண்ணித் தேர்த்தட்டின் முன்னே நடுவது என நச்சினார்க்கினியர் மதுரைக் காஞ்சி யுரையிற் குறிப்பிட்டிருக்கின்றார். இதனல் தமிழர்கள் தாமரைப்பூ வடிவமாகப் பொன்னாற் செய்ததுமன்றி, இப்பூ வடிவினதாக யானை மருப்பானும் மரத்தானும் பண்ணி, தேர் ஊர்பவர்கள் கையாற் பற்றிக் கோடற் பொருட்டு, இக் கொடுஞ்சியினைப் பயன்படுத்தி வந்தார்கள் என்பது தேற்றம்.

**நெடுந்தேர்க் கொடுஞ்சி, பற்றி நின்றோன்** (அகம்—110)

**மணித்தேர்க் கொடுஞ்சி கையாற் பற்றி** (மணிமேகலை 4—48)

எனும் அடிகள் இதனை வலியுறுத்தும். இன்னுங் கொடுஞ்சி யென்பது தாமரைப் பூவடிவாக மட்டுமன்றி **முகைவடிவாகவுஞ் செய்யப்பட்டதென்பது**

**கோட்டிற் செய்த கொடுஞ்சி நெடுந்தேர்**

எனும் **பொருநராற்றுப்படை** யடிக்குப் பொருள் கூறுமிடத்து "யானைக்கொம்பாற் செய்த தாமரை முகையினையுடைய நெடிய தேரிலே" என உச்சிமேற் புலவர் கொள் நச்சினார்க்கினியர் குறிப்பிட்டிருத்தலால் அறியக்கிடக்கின்றது. இதனல் தாமரைப்பூ வடிவாகவும் முகை வடிவாகவும் செய்தல் பண்டைத் தமிழர் கொண்ட வழக்கென்பதறிக. பூ வடிவினதாயின் இக் காலத் தாமியங்கி வண்டியினை மோட்டார் வண்டியை விரும்பிய பக்கத்துக்குத் திருப்புதற்காகச் செலுத்துபவன் கையாளற் பொருட்டு நடுவண் அமைந்திருக்கும் சிறு சில்லினை ஒக்கும்போலும். இது ஆராயற்

1. வேதேத்திராலய மகோற்சவ உண்மை விளக்கம் — சதாவதானம் கா. கதிரைவேற்பிள்ளை—பக்கம் 88–92
2. செபற்கைகலம்—இராவ்பகதூர் சி. எம். இராமச்சந்திரச் செட்டியாரவர்கள் பக். 86 - 87.

பாலது. இன்னும் இக்காலத் தேரை உற்று நோக்கின் தாமரைமுகை வடிவினை யொப்பக் கிழிற் சரிவாயும் நடுவிற் பருத்தும் பின்னர் மேற்சென்று குவிந்தும் இருப்பதைக் காணலாம். இதுவும் மிகப் பொருத்தமாகவே தெரிகின்றது. தாமரைப் பொகுட்டில் தெய்வம் வீற்றிருத்தல் போல, நடுவண் பருத்திருக்குமிடத்திலுள்ள தட்டில் தெய்வங்களை அலங்கரித்து வைத்தல் மிக நயமுடைத்து. எங்கு நுழைந்து பார்ப்பினும் தமிழர்களுடைய அறிவுடைமையே சிறந்து விளங்குகின்றது. இன்னும் பூ வடிவாகவே செய்த தேர்களும் உண்டென்பர் சிலர். இக்காலத்திற்ருன் இல்லை யெனினும் அக்காலத்திருந்தமை, "தாமரைப்பூ வடிவாகச் செய்த வண்டில் அல்லது தேர் அக்காலத்தில் இருந்ததாகத் தெரிகிறது" என தமிழ்த் தாத்தா **டாக்டர் உ. வே. சாமிநாதையர்** அவர்கள் பெருங்கதைப் பதிப்பிற் குறிப்பிட்டிருத்தலாற் பெறப்படுதல் காண்க.

தாமரைப் பூ வடிவினதாகிய எப்பொருளை நோக்கினு மப்பொருள் சிறந்தே விளங்கலைக் காணுந்தொறும் காணுந்தொறும் இம்மலரின் பெருமையை எம்மால் அளப்பரிது என்பது நன்கு புலப்படுகின்றது." [1]

இனி இத் தேரின் உறுப்புக்கள் யாவை என்பதைப் பொதுப்பட அறிந்திருத்தல் நன்ருதலின் அவற்றையும் ஈண்டெடுத்துக் காட்டுவாம்.

**[2] தேரின் உறுப்புக்கள்:**

1. பூதப்பார்: அச்சின் மேலுள்ள பாகத்தைப் பூதங்கள் தாங்குவது போன்ற அமைப்பு.
2. கன்னிலப்பார்: முதல் வரிசை விக்கிரகங்களின் அமைப்புக்கு ஆதாரமாயமைந்திருப்பது.
3. கபோதப்பார்: விக்கிரகங்களின் மேல் அமைப்பாக விருப்பது. கன்னிலப் பாருக்கும் கபோதப் பாருக்கும் இடையில் முதல்வரிசை விக்கிரகங்கள் உண்டு.

   ஆனைத்தொட்டிப்பார்: விக்கிரக வரிசையிற் சில விக்கிரகங்கள் வெளியே நன்கு புலப்படக்கூடியனவாக வைக்கப்பட்டும், சில சிறிதுஉள்ளே தள்ளி வைக்கப்பட்டுமிருப்பதைக் காணலாம். இவ்வாறு விக்கிரகங்கள் அமைப்பதற்கு ஆதாரமாயிருப்பது ஆனைத்தொட்டிப்பார்.

4. அச்சப்பார்: இரதத்தின் பட்டங்களை அமைப்பதற்காக விருப்பது.
5. அச்சப்பூத்தலைப்பார்: பட்டங்களை அமைப்பதற்கு மேலாக ஆதாரமாயுள்ள பார்.
6. பூத்தலைப்பார்: மகரக் காய்கள் பூட்டிய பூத்தலைகளை உடையது.
7. இரண்டாவதுநிலம்: முதலாவது வரிசை விக்கிரகங்களுக்குப் பின் இரண்டாவது வரிசை விக்கிரகங்கள் இதில் உண்டு. உட்பக்கம் ஆனைத்தொட்டிப்பார் சேர்த்து விக்கிரகங்கள் உள்ளும் புறமுமிருந்து புலப்படக் கூடியனவாய் அமைந்துள்ளன. இதற்கு அசுவதைப்பார் என்றும் பெயர்.
8. சிம்மப்பூத்தலைப்பார்: சிம்மத்தின் உருவத்தையும் பூத் தலையையுங் கொண்டு இணைத்த அமைப்பு.
9. மூன்ருவது நிலம்: உட்பக்கக் கோணங்களையுடைய ஆனைத்தொட்டிப்பார் இணைத்து வெளித் தோற்றத்தில் விக்கிரகங்கள் அமைத்துச் செய்யப்பட்டது.
10. நாகத்தலைப்பார்; இது நாகபந்தம் மாதிரி உள்ள தலைப்புடன் கூடியது.
11. விஸ்தாரப்பார்: இரதத்தின் விஸ்தீரணத்தைக் குறிக்கின்றது. இந்தப் பாகத்துக்கு மானவாசனம் என்றும் பெயர்.
12. தேவாசனம்: தேவர்கள் அம்பாளை நின்று தரிசிக்கும் இடம் என்ற முறையில் அமைக்கப்பட்டது.

---

1. தாமரைப்பூ—வெள்ளவத்தை குல சபாநாதன்—ஈழகேசரி 20-10-35.
2. திரு. எஸ். குமாரசுவாமி ஆசாரியார் அவர்களிடம் பெற்ற குறிப்புக்களை ஆதாரமாகக்கொண்டு எழுதப்பட்டது.

13. சிம்மாசனம்: தேவி வீற்றிருக்கும் ஆசனம்.
14. கம்பங்கள்: சித்திர வேலைப்பாடமைந்த குத்துக்கால்கள்.
15. பண்டிகை: முதற் பண்டிகை இரண்டாம்பண்டிகை மூன்றும் பண்டிகை.
16 கர்ணக் கூடம்.
17. மணிமுடி.

மரத்திலே சித்திர வேலை செய்வதில் தமிழர் சிறந்து விளங்கினர் என்பதை ஸ்ரீமதி ஆர். எஸ். ருக்மணி மிக அழகாக எடுத்துக் காட்டியுள்ளார். அது பின்வருமாறு:

"பல நூற்றாண்டுகட்கு முன் நமது நாட்டினர் மனைகளையும் மாடமாளிகைகளையும் அரண்மனைகளையும் சுட்ட மண்ணாலும் மரத்தாலும் கட்டினர். அந்நாட்களில் தமிழகத்தின் பெரும்பாகமும் காடுகளாகவே இருந்தன. அக் காடுகளில் கருங்காலி ஆச்சா தேக்கு முதலிய மரங்கள் செழித்தன. அம் மரங்கள் செதுக்கு வேலைக்குப் பொருத்தமானவை. வைரம் பாய்ந்தவை; உரமானவை. கட்டடங்களின் சுவர்களிற் காரையாற் சித்திரவேலைகளை வெகு அழகாகச் செய்தார்கள். அக் காலத்தில் வழக்கில் இருந்த கிளிஞ்சிற் சுண்ணாம்பு சித்திரப்பூ வேலைகளுக்கும் பலவகை உருவங்கள் சமைப்பதற்கும் வெகுவாகப் பொருந்தியது. அக்காலத்து மரத்தச்சர் பதுமைகளையும் மலர்களையும் சித்திரங்களையும் மரத்தில் செதுக்குவதிலே தேர்ந்திருந்தனர். உத்தரங்களிற் சிறந்த பூக்கோலங்கள் செதுக்குவதில் அவர் பெரிதும் திறமை வாய்ந்தவர். அத் தச்சர்கள் தூண்களிலும், சுவர்களிலும், வாயிற்கதவுகளிலும், கதவுநிலைகளிலும், விமானங்களிலும் உத்தரங்களிலும், தூண்களின் போதிகளிலும் குறுக்கு விட்டங்களிலும் தம் சிற்பத் திறங்களைக் காட்டினர். அக்காலத்துக் கோயில்களுக்குச் சொந்தமாகப் பெரிதும் சிறிதுமான தேர்களும், யாளி, பரிமா, அன்னம், கரிமா, மயில், முதலிய ஊர்திகளும் இருக்கும். கோயிலுக்குரிய இத் தேர்களிலும் ஊர்திகளிலும் சிற்பிகள் தமது ஆற்றலும் வேலைப்பாடும் விளங்க எழிலொழுகும் எண்ணற்ற சிற்பங்களைப் படைத்துப் புகழ்பெற்றனர்.

மரத்தச்சர் காட்டிய சிற்பத் திறமைகளை எல்லாம் மகேந்திரவர்மனது கால முதற் கற்றச்சரும் கல்லிலே காட்டத் தொடங்கிவிட்டனர். மூலத்தானத்திற்கு மேல் அமையும் விமானமும் கூரியதாய் எழுகின்ற கோபுரமும் அமைப்பது மிகப் பழைய மரபு. இம் மரபின்படியே பல்லவரது காலத்திலும் தமிழகச் சிற்பிகள் ஒரே கல்லைச் செதுக்கிக் குடைந்து கோயில்களை அமைத்தனர். இவை மரத் தச்சர்கள் செய்த இரதங்களின் வடிவிலே இருந்தன."[1]

## ஈழநாட்டில்

"நம்முடைய ஈழநாட்டிலும் பழைய தேர்கள் காணப்படுகின்றன. யாழ்ப்பாணத்தில் இற்றைக்கு நூறு வருடங்களுக்கு முன் செய்யப்பட்ட சித்திரங்கள் நிறைந்த மரத் தேர்கள் பல காணப்படுகின்றன. மாவிட்டபுரம், பருளாய், சுதுமலை முதலிய இடங்களிலுள்ள தேர்களின் சித்திரங்கள் ஒத்த அழகும் அமைப்பும் பொருந்தியனவாய் விளங்குகின்றன."[2] மாதகல் நுணசை முருகமூர்த்தி கோயிலில் உள்ள தேரும், பருளாயிலுள்ள தேரும் ஒரே காலத்தன என்றும் அவை சண்முக சேகர முதலியார் என்ற பிரதானி ஒருவராற் செய்யப்பட்டனவென்றும் என் நண்பர் ஒருவர் குறிப்பிட்டார். நல்லூர்க் கந்தசுவாமிகோயில், மருதடி விநாயகர்கோயில் முதலிய ஆலயங்களிலுஞ் சித்திர வேலைப்பாடமைந்த தேர்கள் உண்டு.

இத்தகைய கீர்த்திவாய்ந்த தேர் வரிசையில் நயினாதிவு நாகபூஷணி அம்மன் கோயில் தேர் முக்கிய இடம் வகிக்கும் என்பதற் கையமில்லை. இந்த அழகிய தேரைப் பார்க்கவே பலர் நயினாதிவுக்கு யாத்திரை செய்வர் என்று அவுஸ்திரேலிய மரவேலை நிபுணர் திரு. ஹிவற் குறிப்பிட்டுள்ளார். இந்தத் தேர்வேலை நடைபெற்றிருக்கும்பொழுது கண்டு மகிழ்ந்த இவ் வறிஞர் இத் தொழிலாளரை மனமாரப் புகழ்ந்துள்ளார். அவர் அளித்த நற்சாட்சிப் பத்திரம் இது:

1. இந்தியச் சிற்பங்கள் — ஆர். எஸ். ருக்மிணி—பக் 49—50.
2. இலங்கையிற் கலைவளர்ச்சி—க. நவரத்தினம்—பக். 60.

Room 109,
Galle Face Hotel

O. D. Heaft,
(Colombo Plan Expert)
Dept. of Rural Development
and Cottage Industries,
COLOMBO—7.



Having visited this Chariot construction workshop, I was amazed at the skill of these craftsmen, and with what ease and confident manner that they produced the parts, so intricate and so neat. It is an education in itself and I would appreciate the pleasure of being able to see this Chariot when completed.

I can further add that I have travelled several countries but I have never witnessed any similar type of craftsmanship to equal this work. I sincerely suggest that the Tourist Bureau should give this work plenty of publicity to encourage visitors to view for themselves the fine intricate workmanship and skill that has been put into this Chariot.

**O. D. HEAFT**
Australian Expert,
R. D. & C. I.
6-3-57.

## தமிழாக்கம்

109ஆம் நம்பர் அறை,
கோல்பேஸ் ஹோட்டல்.

ஓ. டி. ஹேப்ட்
(கொழும்புத் திட்ட நிபுணர்)
கிராமாபிவிருத்தி, குடிசைக்
கைத்தொழிற் பகுதி
கொழும்பு - 7

நயினாதீவு நாகபூஷணி அம்பாள் தேர் நிர்மாண வேலைத் தலத்திற்கு விஜயஞ் செய்த போது, அங்கு வேலை செய்யும் கலைஞர்களின் திறமையையும், மிக நுட்பமான பாகங்களை எல்லாம் மிகவும் இலகுவில் அவர்கள் தயாரிக்கும் விதத்தையுங் கண்டு மிகவும் வியந்தேன். அவர்களின் வேலையைப் பார்த்துக்கொண்டிருப்பதே ஒரு படிப்பாகும். பூர்த்தியான தேரைப் பார்க்க முடியுமானால் நான் மிகவும் ஆனந்தமடைவேன்.

நான் பல தேசங்களைச் சுற்றி வந்திருக்கிறேன். ஆனால் இதுபோன்ற கலையில், நான் இங்கு கண்டதுடன் ஒப்பிடத்தக்க பெருந்திறனை வேறெங்குங் கண்டதில்லை. யாத்திரிக வசதி நிலையம் இவ் வேலைக்கு மிகவும் அதிக விளம்பரத்தை நல்க வேண்டும் என்றும் அதன்மூலம் வெளிநாட்டிலிருந்து வருவோர்கள் நுட்ப மிகுந்த இத் தேர் வேலையைப் பார்க்கச் சந்தர்ப்பம் அளிக்க வேண்டுமென்றும் ஆலோசனை கூற விரும்புகின்றேன்.

ஓ. டி. ஹேப்ட்,
ஆஸ்திரேலிய நிபுணர்,
(கிராமாபிவிருத்தியும், குடிசைக் கைத்தொழிலும்)

திருநெல்வேலி சைவாசிரிய கலாசாலை முன்னாள் அதிபர்

**திரு. சி. சுவாமிநாதன் அவர்களும்**

கோப்பாய் அரசினர் ஆசிரிய கலாசாலை ஆசிரியர்

**பண்டிதர் சு. இராசையா அவர்களும்**

ஒருங்குசேர்ந்தளித்த

# பாராட்டுரை

ஸ்ரீ நாகபூஷணியம்மன் திருத்தேரினை நோக்கும் அரிய சந்தர்ப்பம் இன்று கிடைக்கப்பெற்றோம். பிரம்மஸ்ரீ குமாரசுவாமி ஸ்தபதி அவர்கள் இத் தேர்த் திருப்பணித் தொண்டை யாவரும் வியக்கும் வகையில் நிறைவேற்றிக் கொண்டிருக்கின்றார்கள். இத் திருத்தேரில் அமைக்கப்பட்டுவரும் பலவகையான சித்திர வேலைப்பாடுகளைச் சிற்பக்கலையின் சிகரமாகவும், மிக நுணுக்கமாகவும் ஏற்ற ஆதாரங்களுடனும் விளக்கிக் காட்டினார்கள். தாய்நாடாகிய இந்தியாவையும் சேய்நாடாகிய இந்நாட்டினையும் பண்டுதொட்டுத் தொடர்புபடுத்தும் வகையிற் சரித்திர சம்பந்தமான பல சித்திரங்கள் நவீன முறையில் அமைக்கப்பட்டிருந்ததைக் கண்டு பிரமித்துவிட்டோம்.

இத் திருப்பணியை முதன்மைதாங்கி நடாத்திக்கொண்டிருக்கும் ஸ்தபதி அவர்களின் கைங்கரியம் மிகமிகப் பாராட்டற்குரியது. அன்னார், தேவியின் திருவருளால் இத்தகைய திருப்பணிகளை ஆற்றிச் சிற்பக்கலையினுக்கு உத்தம ஸ்தானமளித்து நீடுவாழ இறைவனைப் பிரார்த்திக்கின்றோம்.

நயினைத் திருத்தேர்க்கு நல்லுருவஞ் செய்தே
உயிர்கொடுக்கும் உத்தமனே ! ஓங்கு

தமிழ்நாட் டெல்லையாகத் தொல்காப்பியர் காட்டிய குமரியிற் பிறந்து, குடகடற் பயின்று, குணகடற் பாங்கர் கல்லைப விருத்திசெய்து, வேங்கடத்திற் பணியாற்றி, ஈழத்தில் (நயினை) தமது சிற்பக்கலையின் சிகரமாகிய கொடியினைத் தமிழ்வேந்தர் இமயவரையில் தம் கொடிகளைப் பொறித்தாங்கு இன்று ஸ்ரீ நாகபூஷணி யம்மன் திருத்தேரிற் பொறித்திருக்கிறார்.

பண்டிதர் சு. இராசையா,
அரசினர் ஆசிரிய கலாசாலை,
கோப்பாய்,
9–6–57

சி. சுவாமிநாதன்,
இளைப்பாறிய அதிபர்,
சைவாசிரிய கலாசாலை,
யாழ்ப்பாணம்.

**சக்திக்குரிய தேர்**

அல்லியரசாணி ஆட்சிசெய்தபொழுது அவளுக்கு மந்திரி, பிரதானி, பணியாளர் எல்லாரும் பெண்களாகவே இருந்தார்களாம். ஆண்கள் அந்தப் பக்கம் எட்டிப் பார்க்கவும் முடியாதாம். அதுபோலவே உலகமாதாவாகிய நாகேஸ்வரி எழுந்தருளி வீதிவலம் வருதற்குரிய சித்திரத் தேரிலும் சக்திகளுக்கே முக்கிய இடம் அளிக்கப்பட்டுள்ளது. எனவே சுவாமி எழுந்தருளும் தேருக்கும் தேவி எழுந்தருளும் தேருக்குமுள்ள பிரதான வேற்றுமை இதுவேயாகும் என்பதை மனத்திற் பதித்துக்கொள்ளல் வேண்டும்.

இந்தத் தேரில் நான்கு அழகிய குதிரைகள் இருக்கின்றன அல்லவா? அவற்றின் உட்கருத்தை முன்னரே நீங்கள் அறிந்திருக்கிறீர்கள். நான்கு வேதங்களாகிய குதிரைகளை ஓட்டுபவள் பிரமாணி (பிரமாவின் மனைவி) எனும் சக்தியாவள். இந்தக் குதிரைகள் இருக்கிற பக்கம் கிழக்குமுகமாக அல்லது தேரின் கிழக்குப் பக்கமாகக் கருதப்படும். எனவே குதிரைகள் உள்ள பக்கத்தைக் கிழக்குப் பக்கமாகக் கருதினல், முதலில் அந்தப் பக்கத்தைத்தானே பார்க்கவேண்டும். நீங்கள் தேரிலுள்ள சித்திரங்களையெல்லாம் விக்கினமின்றிப் பார்த்து முடிக்க விநாயகர் துணையை நாடத்தானே வேண்டும். எனவே ஆகக் கீழேயுள்ள வரிசையில் கிழக்குப் பக்கத்தில் மூஷிகவாகன விக்கினேஸ்வரர் எங்கேயிருக்கின்ருர் என்று தேடிக் கண்டுபிடியுங்கள். அவருக்கு முன்ருற் கும்பிட்டுக்கொண்டு அலங்காரச் சித்திரங்களைப் பார்க்கத் தொடங்குங்கள்.

**முதலாவது அடித்தள வரிசை**

கிழக்கு:

(1) மூஷிகவாகன விக்கினேஸ்வரர்
(2) கம்பாநதி
(3) பாலசுப்பிரமணியர்
(4) நாகபூஷணி அம்மன் நாககன்னிகை இருவருடன்
(5) துவாரசக்தி
(6) கனிஷ்டா
(7) வல்லிசுந்தரி

இவைதவிர விக்கினேஸ்வரருக்கு முன்

(அ) வேறு ஆயுதந் தாங்கிய நாகபூஷணி அம்மன்
(ஆ) துவாரசக்தி
(இ) இராஜராஜேஸ்வரி
(ஈ) வல்லி சுந்தரி ஆகிய இவர்களின் சித்திர வடிவங்களுமுண்டு.

தெற்கு:

(8) தக்ஷிணுமூர்த்தி
(9) சரஸ்வதி
(10) சிவதுர்க்கை
(11) சங்கு பூதம்
(12) தாரைஊதும் பூதம்
(13) சங்கு பூதம்
(14) பஸ்மாசுர மோகினி
(15) பூத சம்மாரம்
(16) கோபிகா கிருஷ்ண லீலை

மேற்கு:

(17) வல்லி சுந்தரி
(18) சுப்பிரமணியர் (வள்ளி தெய்வானை சகிதம்)
(19) துவாரசக்தி
(20) காளி
(21) பிராம்மிணி
(22) புவனேஸ்வரி
(23) மஹேஸ்வரி
(24) சேஷாசனி
(25) துவாரசக்தி
(26) நர்த்தன விநாயகர்
(27) வல்லி சுந்தரி

வடக்கு:

(28) துவாரசக்தி
(29) மோஹினி
(30) சாமுண்டி
(31) கத்தி கேடயம் உடைய பூதம்
(32) இரட்டைத்தாரை ஊதும் பூதம்
(33) கத்தி கேடயம் உடைய பூதம்

(34) மனோன்மணி
(35) சரஸ்வதி
(36) துவாரசக்தி

இவைதவிர ஒவ்வொரு மூலைக்கும் 5 உருவங்கள் சேர்ந்த குதிரை நான்கும் இடையிடையே சிம்மக் கட்டைகளும் அமைந்திருக்கின்றன.

**இரண்டாவது வரிசை**

கிழக்கு:

(1) தேவி திருஞான சம்பந்தருக்குப் பால் ஊட்டுதல்
(2) கஜகௌரி
(3) கைலாச வாகினி
(4) சிவபாதகிருதயர், சம்பந்தரைப் பார்த்து, 'உனக்குப் பால் கொடுத்தது யார்?' என்று கேட்கும் காட்சி
(5) இலக்குமி அனுக்கிரகம்

தென்கிழக்கு:

(6) சோணங்கி முனிவர்
(7) அன்னபூரணி
(8) கோணங்கி முனிவர்

தெற்கு

(9) வீராசாமி செட்டியாருக்கு அம்பாள் ஐந்தலை நாகமாகக் காட்சியளித்தல்
(10) புளியந்தீவில் நாகம் பூக்கொய்தல்
(11) நாகம் வாயில் பூ எடுத்துக்கொண்டு கடல் கடத்தல்
(12) கடலில் கருடன் பாம்பைக் கொத்த எத்தனித்தல்
(13) வணிகன் கருடனை வேண்டிக் கொள்ளல்

இந்தக் கதையின் எஞ்சிய பகுதியை மிகுதியாக உள்ள சித்திரங்கள் மூலம் பார்க்கலாம்.

தென்மேற்கு

(14) தும்புரு
(15) நயினைப்பட்டர் மறைந்து நின்று நாகம் செய்வதைப் பார்க்கின்றார்
(16) நாரதர்

மேற்கு

(17) தேவிஅநுமனுக்குஅனுக்கிரகித்தல்
(18) குண்டோதரன் அன்னம் விழுங்குங் காட்சி
(19) மீனாட்சி திருமணம்
(20) மது, கைடப சம்மார அனுக்கிரகம்
(21) சரவணப் பொய்கையில் தேவி ஆறு குழந்தைகளையும் ஒன்றாக அணைக்கும் காட்சி

வடமேற்கு

(22) அகஸ்தியர்
(23) அம்பாளை ஆலமரப் பொந்தில் ஒளித்து வைத்தல்
(24) வசிட்டர்

வடக்கு

(25) திரவியத்தை ஆலயத்திற் சேர்க்குமாறு கருடன் வணிகனுக்குக் கட்டளையிடுதல் (தெற்கு வரிசையிலுள்ள கதையின் தொடர்ச்சி)
(26) வணிகன் திரவியத்தை ஆலயத்திற்குச் செலுத்தல்
(27) போர்த்துக்கிசர் பவளத்தேரைக் கண்ணுறல்
(28) போர்த்துக்கிசர் ஆலயத்தைத் தாக்குதல்
(29) செப்புத்தேர், பவளத்தேர்களைக் கடலிலே தள்ளுதல்

வடகிழக்கு

(30) விரமுஷ்டி
(31) அம்பாள் முருகனுக்குச் சக்திவேல் அளித்தல்
(32) கௌதமர்

இவற்றைத்தவிர எட்டுமூலைகளிலும் எட்டு யாளிகள் அமைக்கப் பெற்றுள்ளன

**மூன்றாவது வரிசை**

கிழக்கு

(1) விஸ்வேஸ்வரர்
(2) இந்திராணி
(3) அட்டலக்குமியில் விரலக்குமி
(4) அட்டமங்கலத்தில் தர்ப்பணம்—கண்ணாடி
(5) பதஞ்சலி முனிவர் வழிபடும் காட்சி
(6) அட்டமங்கலத்தில் பூரணகும்பம்—நிறைகுடம்
(7) அட்டலக்குமியில் தனலக்குமி

(8) அக்கினி தேவி
(9) நவசத்தி உற்பவம்

தென்கிழக்கு
(10) நாகம், கன்னிகை (அலங்காரச் சித்திரம்)
(11) ஆபுத்திரன் பசுவினிடத்துக் கருணை கொள்ளுதல்—இந்தக் கதை மணிமேகலையில் உள்ளது
(12) ஆபுத்திரன் தவஞ் செய்தல்
(13) ஆபுத்திரன் அட்சயபாத்திரத்துடன் நாகதிபத்துக்கு வருதல்
(14) ஆபுத்திரன் அட்சய பாத்திரத்தைக் கோமுகிப் பொய்கையில் இடுதல்
(15) அட்டநாகபந்தம்
(16) நாகம், கன்னிகை (அலங்காரச் சித்திரம்)

தெற்கு
(17) நவநாரி குஞ்சரம்: ஒன்பது பெண்கள் ஒன்றுசேர்ந்து நிற்குமிடத்து அவர்கள் எல்லாருடைய நிலையையும் ஒருங்கிணைத்துப் பார்த்தால், ஒரு யானை தெரிகிறதல்லவா ?
(18) யமதேவி
(19) தனலக்குமி
(20) அட்டமங்கலத்தில் ரிஷபம்-எருது
(21) அனுமனுக்கு மைநாகமலை உதவி புரிதல்
(22) அட்டமங்கலத்தில் யுக்மசாமரம்-இணைக்கவரி
(23) அட்டலக்குமியில் தானியலக்குமி
(24) நைருதிதேவி
(25) அருச்சுனன் நாககன்னிகையைத் திருமணம் புரிதல்

தென்மேற்கு:
(26) அலங்காரச் சித்திரம்
(27) அட்டநாகபந்தம்
(28) காளி தாண்டவத்தில் மகாவிஷ்ணு புல்லாங்குழல் வாசித்தல்
(29) காளிதாண்டவம்
(30) பிரமன் தாளம்போடுதல்
(31) நந்தி மிருதங்கம் வாசித்தல்
(32) அலங்காரச் சித்திரம்

மேற்கு
(33) திருவானைக்காவில் யானையும் சிலந்தியும் அருள்பெற்ற வரலாற்றுச் சித்திரம்
(34) வருணதேவி
(35) அட்டலக்குமிகளில்ஐசுவரியலக்குமி
(36) அட்டமங்கலத்தில் ஸ்வஸ்திகம்
(37) ஐந்தலைநாகம் நாகரத்தின மளித்தல்
(38) அட்ட மங்கலத்தில் ஸ்திரீவற்சம்
(39) அட்டலக்குமிகளில் ஆதிலக்குமி
(40) வாயுதேவி
(41) நயினைப்பட்டர் அம்பாளைப் பூசித்தல்

வடமேற்கு
(42) அலங்காரச் சித்திரம்
(43) சோழ மன்னன் பீலிவளையைக் காந்தருவ விவாகஞ் செய்தல்
(44) பீலிவளை தன்மகன் ஆதொண்டனைச் சோழதேசம் அனுப்புதல்
(45) புயலில் அகப்பட்டுக் கப்பல் கவிழ்தல்
(46) ஆதொண்டனைச் சோழ மன்னனிடம் ஒப்படைத்தல்
(47) ஆதொண்டனுக்கு மணிமுடி சூட்டுதல்
(48) அலங்காரச் சித்திரம் — (நாகமும், கன்னிகையும்)

வடக்கு
(49) ஹம்சநாரி
(50) குபேரதேவி
(51) அட்டலக்குமிகளில் கஜலக்குமி
(52) அட்டமங்கலத்தில் தீபம்
(53) மீகாமன் நவரத்தினம் பெறுதல்
(54) அட்டமங்கலத்தில் சங்கம்
(55) அட்டலக்குமியில் சந்தானலக்குமி
(56) ஈசான்ய தேவி
(57) மகிஷாசுரமர்த்தநி

வடகிழக்கு
(58) அலங்காரச் சித்திரம் — நாகமும் கன்னிகையும்
(59) மீகாமனும் வெடியரசனும் சண்டையிடுதல்
(60) மீகாமன் அம்பாளைப் பூசித்தல்
(61) அப்பர் சுவாமிகள்
(62) சுந்தரமூர்த்தி சுவாமிகள்
(63) மாணிக்கவாசக சுவாமிகள்
(64) அலங்காரச்சித்திரம்

இந்தச் சித்திரக் கட்டைகளுக்கு மேலே தளம் உண்டு. தளத்தில் இடப்பட்ட ஆசனத்திற்றான் அம்பாள் வீற்றிருந்து பக்தகோடிகளுக்குக் காட்சிகொடுத்துத் திருவருள் பாலிப்பாள்.

# கோயிலும் கலைகளும்

தென்னாட்டுக் கோயில்களிலுள்ள கல்வெட்டுக்களை அராய்ந்து பார்த்தால், கோயில்கள் பண்டை நாட்களிற் சமயத் தொண்டும் சமூகத் தொண்டும் ஆற்றி வந்ததுடன் கல்விக் களஞ்சியங்களாகவும் கலைவளர்ப்பு நிலையங்களாகவும் விளங்கின என்பது புலப்படும்.

'கோயில்' எனுஞ் சொல் பண்டைத் தமிழ் இலக்கியங்களிற் பெரும்பாலும் அரண்மனை என்ற பொருளிலேயே ஆளப்பட்டுள்ளதென அறியக்கிடக்கின்றது. அரசனுங் குடியும் அரசர்கட் கரசனாகிய இறைவனுடைய ஆட்சியின் கீழிருக்கும் உண்மையறிவு மக்கள் ஆராய்ச்சியுள்ளத்தில் முகிழ்க்கவே கோயில் எனும் பதத்தை இறைவனை வழிபடும் இடத்தின்மேலேற்றி வழங்கினர். இக்கொள்கை சிறந்ததொரு தத்துவார்த்தக் கருத்தை யுள்ளடக்கி நிற்கின்றது. திருவனந்தபுரத்தில் இன்றும் இக்கொள்கைக் கியையவே அரசாட்சி நடைபெற்றுவருகின்றது. ஸ்ரீபத்மநாப சுவாமிகளின் பிரதிநிதியாக மகாராஜா ஆண்டுவருகின்றார். இறைவன் ஆலயங்கள் யாவும் அரசாங்கத்தால் நடாத்தப்படுகின்றன, சிலப்பதிகாரத்தில், 'பிறவா யாக்கைப் பெரியோன் கோயில்' என்புழி, இச்சொல் ஆலயம் என்னும் பொருளில் ஆளப்பட்டிருத்தல் காண்க. தேவாரங்களில் கோயில் எனுஞ் சொல் சிதம்பரத்தை உணர்த்தி நிற்கின்றது. கோயிற்புராணம் எனும் நூலிலும் இப்பொருள் கொள்ளப்பட்டது. திவ்யப் பிரபந்தங்களில் கோயில் என்ற சொல் ஸ்ரீரங்கம் என்ற பொருளில் ஆளப்பட்டுளது. மேலும் சிலப்பதிகாரம் ஊர்காண் காதையில்,

'நுதல்விழி நாட்டத் திறையோன் கோயிலும்
உவணச் சேவ லுயர்த்தோ னியமமும்
மேழிவல னுயர்த்த வெள்ளை நகரமும்
கோழிச் சேவற் கொடியோன் கோட்டமும்'

என வருதலால் கோயில், நியமம், நகரம், கோட்டம் என்பன ஒரு பொருட் பன்மொழி யென்றுணர்க.

இனி, இக்கோயிலுக்கும் கல்விக்கும் சம்பந்தம் யாண்டுளதெனின், 'கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவன் நற்றாடொழாஅ ரெனின்' என்ற வாக்கினால் உண்மையினைக் கடைப்பிடிக்க, கல்வி முதிர்ச்சியின் பயனாகக் கோவில் அமைக்கப் பெற்றது. பிற்றை ஞான்று இக்கோயிலே கல்வி வளர்ச்சியுறுவதற்கு நிலைக்களனாயிற்று. எனவே, ஒரு நாட்டின் சிறப்பினை அறிவான் வேண்டின் ஆண்டுள்ள திருக்கோயில்களால் உணர்தல் கூடும்.

தமிழர் தம் பனுவல்களிற் கண்டவாறு, பழந்தமிழ்ச் சங்கம் இருந்த இடமே கோயில். திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளையே தலைமைப் புலவராக வீற்றிருக்கச் செய்து நந் தமிழர்கள் கல்வியைப் பெருக்கியிருக்கின்றார்கள். சிறப்புடைய நூல்களைத் திருக்கோயிலில் அரங்கேற்றும் வழக்கம் தமிழர்கட்கிடையிற் பரவியிருந்தமையும் ஈண்டுன்னற்பாற்று. 'எடுக்குமாக்கதை' எனப் போற்றப்படுவதும் 'உலகெலாம்' என இறைவனே அடியெடுத்துக் கொடுத்த பெருமை வாய்ந்ததுமான பெரியபுராணம் கோயிலெனப்படும். சிதம்பரத்தில் கூத்தப்பெருமான் முன்னிலையில் சேக்கிழார் சுவாமிகளால் அரங்கேற்றப்பெற்

றது. அரங்கேறிய வரலாற்றினையும் சிறப்பினையும் ஈண்டு விரிப்பிற் பெருகுமென்றஞ்சி விடுத்தாம். சிறந்த காவியமெனப் புகழப்படும் கம்பராமாயணமும் கோயிலெனப்படும் ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீரங்கப் பெருமான் முன்னிலையில் அரங்கேறிய வரலாறும் சிறப்புடைய தொன்ரும். 'திகடசக்கரச் செம்முக மைந்துளான்' என அடியெடுத்துக் கொடுக்கப் பெற்ற பெருமை வாய்ந்த கந்தபுராணம் கச்சியப்ப சுவாமிகளாற் காஞ்சிபுரத்தில் அரங்கேற்றப்பட்டது. எனவே கோயில்கள் யாவும் கல்விபயிலுங் கோட்டங்களாகவும் அரங்கேற்று மிடங்களாகவுங் கருதி ஒழுகி வந்திருக்கின்றனர் நந்தமிழர். ஆண்டு வீற்றிருக்கின்ற இறைவனையே பள்ளிக்கூடத் தலைவரும் அவைத் தலைவருமாகக் கருதி வந்துள்ளனர்.

இங்ஙனமன்றியுங் கடவுளே கலை வடிவமென்பதுதான் தமிழர்களாகிய சைவர்களது கொள்கை. மணிமேகலையிற் சமயக் கணக்கர் தந்திறங்கேட்ட காதையில், சைவசமயக் கொள்கைப்படி இறைவனது இலக்கணத்தை எடுத்தியம்புமிடத்து

''இருசுட ரோடிய மானனைம் பூதமென்
றெட்டு வகையு முயிரும்யாக் கையுமாய்க்
கட்டிநிற் போனும் கலையுருவி னோனும்
படைத்து விளையாடும் பண்பி னோனுந்
துடைத்துத் துயர்தீர் தோற்றத் தோனுந்
தன்னில வேறு தானொன் றிலோனு
மன்னே யிறைவ னாகுமென் றுரைத்தனன்''

எனக் கூறியிருத்தல் காண்க.

இதனாலே பல்வேறு கிளைப்பட்ட சங்கீதம், நர்த்தனம் முதலிய கலைகளை வளர்த்தற்கும் கோயில் நிலைக்களனாயிற்று. இறைவனே கலையுருவினனாதலின் எல்லாக் கலைகளும் அவன்பாலுள; அரன் தொண்டில் அவற்றை உய்த்தல் சீரிதென்பதும் கூறாதேயமையும். இக் கலைகளைத் திருக்கோயில்களில் வளர்த்து வருவோர் முட்டின்றி இவையிற்றை நிறைவேற்றுமாறு பண்டைத் தமிழரசர்களும் கொடை வள்ளல்களும் இறையிலி நிலங்களைச் சாசன வாயிலாகத் திருக்கோயில்கட் களித்திருக்கின்றார்கள்.

இனி, கோயிலின் கட்டிட அமைப்பினையும், சிற்ப வேலைகளையுந் திருவுருவ அமைப்பினையும் நோக்குங்கால், அவையும் எங்கட்குக் கல்வி கற்பித்தற் பொருட்டே அதததற் கேற்ற முறையிற் கையாளப்பட்டிருக்கின்றன. கோயிலென யாம் முன்னர்க் கூறிய கூத்தப்பெருமான் ஆனந்த நடனஞ் செய்யும் சிதம்பரத்திலுள்ள திருக்கோயிலை உற்று நோக்கின், நாட்டியக் கலையை யுணர்த்தும் உருவங்கள் அமைக்கப்பட்டிருத்தலைக் காணலாம். இவற்றை அடியார்க்கு நல்லார் வரைந்த இலக்கணத்தோ டொப்பிட்டாராய்ந்து மகிழ்க.

கோயிலிலுள்ள மண்டபங்கள், வீதிகள், நந்தி, லிங்கம், பலிபீடம், கொடிமரம், கொடிச்சீலை, கொடியேற்றுங் கயிறு முதலியன யாவும் தத்துவார்த்தப் பொருள் விளங்கவே அமைக்கப்பட்டன. ஆயின் அவற்றின் உண்மைப் பொருளை விளக்கிக் கல்வியின் பயனையடையாமல், வெறுங் கிரியைகளாகவே நோக்கி நற்றாள் தொழுதிருத்தலினும் குறைந்த பயனையடைதல் முறையன்று. இவற்றை நன்கெடுத்து விளக்கும் நூல்கள் வெளிவரல் வேண்டும். நாட்டியக் கலையெனின் அந் நாட்டியக் கலையில் ஈடுபட்டு மாண்டுபோகாது அக் கலையிலும் இறைவனைக் காண்பவனே நாட்டிக் கலையைக் கற்றதனாலாய உண்மைப் பயனை அனுபவிப்பவனாகின்றான். அன்றேல் அக்கல்வியாற் பெற்ற பயன் என்கொல்?

''உள்ளம் பெருங்கோயி லூனுடம் பாலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசற்
றெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே''

— திருமந்திரம்

''காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி யிலிங்கமாக
நேயமே நெய்யும்பாலா நிறையநீ ரமைய ஆட்டிப்
பூசனை யீசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே''

— அப்பர்

எனும் திருவாக்குக்களால் உண்மைப் பொருளை யுணர்ந்து கடைத்தேறல் வேண்டும்.

இனி, திருவுருவங்களை நோக்கின் அவையுஞ் சிறந்த ஞானக் கருத்துக்களைப் போதிக்கும் முறையிலேயே அமைந்திருக்கின்றன; கூத்தப்பெருமான் திருவடிவத்தில் திருப்பாதத்தில் நாடகக் கலையும், திருக்கைகளில் ஞானக்கலையும், திருக்காதுகளிற் சங்கீதக் கலையும், உருவாயமைந்துள்ளன. 'தோற்றந்துடியதனில்' என்ற தொடக்கத்துத் திருப்பாடலில் இப் பெம்மானது பஞ்சகிருத்திய நிலை சிறப்பாக வர்ணிக்கப்பட்டுள்ளது. முருகப் பெருமானின் ஆறு திருமுகமும் பன்னிரு தோளும் விளக்கும் உண்மைப் பொருள்,

''மாயிருண் ஞாலம் மறுவின்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன் றொருமுக...''

என்ற தொடக்கத்துத் திருமுருகாற்றுப் படையடிகளான் நன்கு விளக்கப்பட்டிருத்தல் காண்க. பஞ்சார நைந்து நின்றோது மன்பர் பங்காகி நின்ற குமரேசன் ஏறும் மயில் யாதென்பதை,

'ஆனதனி மந்த்ர ரூபநிலை கொண்டதாடுமயி லென்ப தறியேனே'' எனும் அருணகிரிநாதர் திருவாக்கானுணர்க.

''சமய வாழ்க்கையோடு கலைகளையும் இணைத்திருந்தனர் நமது பெரியோர். இக்காலத்தில் இசையரங்கங்கள் வேருகவும், நாடக மேடைகள் வேருகவும், பொருட்காட்சிச் சாலைகள் வேருகவும், ஓவியக்கலைக் கூடங்கள் வேருகவும் இருப்பது போல கலைச்சாலைகள், வெவ்வேருக அக்காலத்தில் அமைக்கப்படவில்லை. கோயில்களே கலைக்கூடங்களாகவும், ஓவியக்காட்சிச் சாலைகளாகவும், இசையரங்கங்களாகவும், நாடக மேடைகளாகவும் விளங்கின, அதனுல்தான் சிற்பங்களும் ஓவியப்படங்களும் நமது கோயில்களில் இடம்பெற்றன''[1]

''தென்னுட்டுக் கோயில்களில் உள்ள சிற்பச் செல்வம் வேறெங்கும் இல்லை என்றே சொல்லலாம். 'கல்லும் கவி சொல்லும்' என்று இந்த ஆலயங்களைத்தான் கூறவேண்டும். 'கல்லும் சொல்லாதோ கவி' என்று புலவன் கூறினுல் இந்தச் செல்வத்தை நன்கு அறிந்தே சொன்னுன் எனக. மாமல்லை, காஞ்சி, மதுரை, வேலூர், பேரூர், கிருட்டிணுபுரம் முதலிய கோயில்களைப் பார்த்தவன் வேறு எதனைப் பார்க்க வேண்டும். தென்னுட்டுக் கோயில்களில் பண்டாரங்களில் உள்ள இன்னிசைகளைக் கண்டவன் காட்சிச்சாலைகளுக்குப் போகவேண்டுமா? திருத்தேர்களிற் காணும் மரத்திருவுருவங்களைக் கண்டவன் தச்சரின் உயர்ந்த மூளையைச் சோதிக்கச் செல்ல வேண்டுமா?''[2]

''இந்தியச் சிற்பி கூலிக்கு வேலை செய்யும் தொழிலாளி போல இயங்கவில்லை. கலைப்பணியாகவும் ஆண்டவனுக்குத் தான்செய்யக்கூடிய தலை சிறந்த தொண்டாகவுங் கருதியே இந்தியச்சிற்பி பணியாற்றினுன். சிற்பி தன் சிற்பக் கலையைப் பய பக்தியுடன் சிந்தனை செய்து தொண்டாற்றினுன். இறை பணியாகக் கருதியே ஓவியங்களை வரைந்தான். கட்டடங்களையும் அவ்வாறு கருதியே அமைத்தான். இப்பொழுது இந்தியா வெங்கணும் காணப்படும் பெருங் கோயில்கள் சமயத்துறையில் இக்கலைஞர்கள் ஆற்றிய அளப்பருந் தொண்டின் ஞாபகசின்னமாக விளங்குகின்றன. இத்தகைய பண்பு இந்தியச் சிற்பியிடங் காணப்படுவது போல உலகத்திலே வேறெந்த நாட்டுச் சிற்பியிடமுங் காண்பதரிது.''[3]

---

1. தமிழர் வளர்த்த அழகுக் கலைகள் — மயிலை, சீனி வேங்கடசாமி—பக் 175-176
2. ஆலய அமைப்பு — திரு. சி. எம். இராமச்சந்திரச் செட்டியார் மதுரைத் தமிழ்ச் சங்கப் பொன் விழா மலர் — பக் 79-80
3. *Art in India C. Sivaramamurti Bhavani Journal June 2, 1957*

## கலை வளர்ப்புப் பண்ணைகள்

''கோயில் என்பது கடவுள் வழிபாட்டுக்கு மாத்திரம் உரிய இடமாகத் தமிழர் கருதவில்லை. கலைகள் வளர்தற்கு நிலைக்களன் கோயில்கள் எனக் கருதினர். கடல் நீரை மேகங்கள் உண்டு திரும்பி மழை பெய்து கடலையே நிரப்புவதுபோல் அரசர்களும் குடிகளிடம் பெற்ற திறைப் பொருள்களைத் தான தர்மங்கள் மூலமாய்க் குடிமக்களுக்கே திருப்பி வழங்கினர். இதனுல் மக்கள் வாழ்க்கை நலம் பெற்றிருந்தது. அநேக குடிமக்களைப் பணியில் அமர்த்தி ஆளுவதிலும் கல்வி கலைகளைப் போற்றுவதிலும், நாடகசாலை, ஆதுலசாலை, உண்ணச்சாலை இவைகளை ஆதரிப்பதிலும் தானதர்மங்களைப் பரிபாலிப்பதிலும் நெருக்கடி காலங்களிற் பொன் ஆபரணம் முதலிய பொருளை ஜனங்களுக்கு உதவுதலிலும், ஒவ்வொரு கோயிலும் ஜனங்களுடைய பொது நன்மையையே கருதி அவர்களுடைய வாழ்க்கையைச் செம்மைப்படுத்தியது. பரலோகத்துக்கு வேண்டிய ஆத்ம திருப்தியைச் செய்வதுமல்லாமல், தற்காலத்திற் கண்காட்சிச் சாலைகளும், நாடகசாலைகளும், சங்கீதசபைகளும், கல்விச்சாலைகளும், அன்னதான சமாசங்களும் தர்ம முறையில் நடத்தும் கூட்டுறவுச் சங்கங்கள் இவை போன்ற பொதுசன அநுகூல பதவி ஸ்தாபனங்கள் செய்யும் நன்மைகளைப் பண்டைக் காலத்திற் கோயில்களே புரிந்து வந்தன. இகபரம் இரண்டிற்கும் நன்மை பயத்தலால் மக்களுக்குக் கோயில்களில் அன்பும் ஆர்வமும் ஏற்பட்டன.''[1]

இவற்றையெல்லாம் நோக்குமிடத்து நம் முடியுடை மூவேந்தருங் கொடை வள்ளல்களும் கலைகளை வளர்ப்பதற்கு எத்தனையோ வகையான முறைகளைக் கையாண்டார்கள் என்பது நன்கு புலனுகும். சிலசமயங்களிற் கோயில்களில் திருப்பணிவேலைகளைக்கலைஞர்கட்காகவே ஆரம்பித்தனர். அவர்களுக்கு ஊக்கங்கொடாதிருப்பின் அக்கலையே அழிந்துவிடுமல்லவா? பெருஞ் செலவு செய்து இத்தகைய தேர்த்திருப்பணிகளைச் செய்வதன் நோக்கமென்ன? அவை மக்களிடையே பயபக்தியை யுண்டுபண்ணுகின்றன. தேரிலுள்ள சித்திரங்களைப் பார்க்கும் பொழுது, அம்பாளுடைய சந்நிதிக்கு யாத்திரை செய்யும் தொண்டர்கள் நடந்து கொள்வதைப் பார்க்கும் பொழுது, சந்நிதியின் முன் நின்று தொண்டர்கள் உருகி உருகி ஓலமிட்டழைப்பதைப் பார்க்கும் பொழுது எங்களை யறியாமலே எங்கள் உள்ளத்திலும் அம்பிகையைப் பற்றிய உணர்ச்சி எழுகின்றது. அதுவே எங்களை நல்வழிப்படுத்த வல்லது. யாத்திரைகளினுலும் கோயில்களில் நடைபெறும் விழாக்களினுலும் அங்குள்ள தேர், மஞ்சம் முதலியவற்றினுலும், கோபுரம் விமானம் முதலியவற்றினுலும் மக்களின் மனமானது பக்திவயப்பட்டு ஆண்டவனின் அளப்பருங்கருணையை நினைந்து நினைந்து வியப்புற்றுப் பற்றற்றவன் திருவடிகளைப் பற்ற முயலுகின்றது.

---

1. பூர்விக சமுதாயத்தில் கோயிலின் ஸ்தானம் – ஸ்ரீ எஸ். ஆர். பாலசுப்பிரமணிய ஐயர் — தினமணி வருஷ மலர் 1938.

# விளம்பரம்

# நயினாதீவு ஸ்ரீ நாகபூஷணாம்பிகை தேவஸ்தானம்

I. நித்திய பூஜை :-

| | | | | ம. | நி. |
|---|---|---|---|---|---|
| 1. | உஷத்காலம் | ஆரம்பம் | மு. ப. | 4 | 30 |
| 2. | காலை சந்தி | ,, | ,, | 7 | 00 |
| 3. | உச்சிக் காலம் | ,, | ,, | 12 | 00 |
| 4. | சாயரட்சை | ,, | பி. ப. | 6 | 00 |
| 5. | அர்த்த சாமம் | ,, | ,, | 8 | 00 |

II. விசேஷ பூஜைகள் :-

சிவன், அம்பாள், விநாயகர், சுப்பிரமணியர், விஷ்ணு முதலிய ஐவரின் பூஜைத் தினங்கள் ஒவ்வொரு மாதத்திலும் நடைபெறும். சமயகுரவர், சந்தான குரவர்களின் பூஜைகள் முறையே சித்திரை, வைகாசி, ஆனி, ஆடி மாதங்களிலும்; ஆவணி, புரட்டாதி, ஐப்பசி மாதங்களிலும் பஞ்சாங்கத்திலுள்ளபடி நடைபெறும்.

III. திருவிழாக்கள் :-

| | | | ரூ. | ச. |
|---|---|---|---|---|
| 1. | மஹோற்சவம் ஆனி உபயம் திருநாள் ஒன்றுக்கு | | | |
| 2. | மஹா நவராத்திரி புரட்டாதி | ,, | 100 – | 00 |
| 3. | கந்தசஷ்டி ஐப்பசி | ,, | | |
| 4. | திருவெம்பாவை மார்கழி | ,, | | |

IV. அபிஷேகம் :-

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | மஹா சங்காபிஷேகம் (1008சங்கு) | ஒன்றுக்கு | 500 | 00 |
| 2. | சங்காபிஷேகம் (108 சங்கு) | ,, | 100 | 00 |
| 3. | ஸ்நபனாபிஷேகம் | ,, | 40 | 00 |
| 4. | உருத்திராபிஷேகம் | ,, | 25 | 00 |
| 5. | அன்னாபிஷேகம் | ,, | 15 | 00 |
| 6. | சந்தனாபிஷேகம் | ,, | 10 | 00 |

V. அர்ச்சனை :-

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | இலட்சார்ச்சனை | ,, | 400 | 00 |
| 2. | சகஸ்திர நாமார்ச்சனை | ,, | 1 | 50 |
| 3. | அஷ்டோத்ர நாமார்ச்சனை | ,, | | 25 |
| 4. | சோடச நாமார்ச்சனை | ,, | | 10 |

VI. நேர்த்திக்கடன் :-

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | நாகப் பிரதிஷ்டை | ,, | 50 | 00 |
| 2. | முடியிறக்கல் சௌளம் | ,, | 1 | 00 |
| 3. | அன்னப் பிராசனம் | ,, | 1 | 00 |
| 4. | அடிமைச் சாதனம் | ,, | 1 | 00 |
| 5. | அட்சராப்பியாசம் | ,, | 1 | 00 |
| 6. | காது குத்துதல் கர்ணவேதனம் | ,, | 1 | 00 |
| 7. | காணிக்கைப் பொருள் சாத்துதல் | ,, | 1 | 00 |
| 8. | அர்ச்சனைக் கட்டளை மாசம் | ,, | 1 | 00 |
| 9. | மூர்த்திகளுக்குத் தண்ணீர்வார்க்க குடம் | ,, | | 05 |

குறிப்பு :- ஏனையவற்றை ஷெ காரியாலயத்திற் கேட்டுத் தெரிந்துகொள்க.

நயினாதீவு,
14–9–49

இங்ஙனம்
ஷெ தர்மபரிபாலன சபையார்.

# திருத்தேரின் குறிப்பிட்ட பகுதிகளுக்காக
## நன்கொடை அளித்தவர்களின் அட்டவணை

| பெயர் | விலாசம் | தேரின் பகுதி | தொகை ரூ. | ச. |
|---|---|---|---|---|
| சின்னத்தம்பி இளையதம்பி அவர்களின் பிள்ளைகள் | சுருவில், ஊர்காவற்றுறை | பூதப்பர் | 5200 | 00 |
| மஸ்கன்ஸ் லிமிற்றெட் | கொழும்பு | எல்லா அச்சுகளும் இவர்களாற் செய்து தரப்பட்டன. | | |
| K. குணரத்தினம் (சினமாஸ் லிமிற்றெட்) | 117, நியூ செட்டி ஸ்றீற், கொழும்பு | வர்ணவேலை | 3000 | 00 |
| M. K. கதிரவேலு | மலாயன் கபே யாழ்ப்பாணம் | முதல் நிலம் விக்கிரகம் உருப்படி 48. | 2875 | 00 |
| நயினாதீவு உப சபை | நயினாதீவு | பெரிய சக்கரம் 4 சில்லு (பகுதிப்பணம்) | 1650 | 00 |
| T. நீதிராசா | 89, நியூ செட்டி ஸ்றீற், கொழும்பு | மேற் பண்டிகை கர்ணக் குடம். | 1500 | 00 |
| S. கனகசபை (சிருப்பர்) | வண்ணார்பண்ணை | தேவாசனம் | 1450 | 00 |
| C. S. A. நமசிவாயம் செட்டியார் | யாழ்ப்பாணம் | மூன்றாவது பண்டிகை. | 1400 | 00 |
| M. முத்தையாபிள்ளை | 5ஆம் குறுக்குத்தெரு, கொழும்பு | யானைத் தொட்டிப்பார் | 1250 | 00 |
| R. செல்லையா | 4ஆம் குறுக்குத் தெரு, கொழும்பு | தேவாசன விக்கிரகம் 40 உருப்படி. | 1201 | 00 |
| S. V. பொன்னம்பலம் | ஆலடி, தங்கோடை, காரைநகர் | கபோதகப் பார். | 1200 | 00 |
| R. கந்தையா | கற்பகவில்லா கோப்பாய் | ஆர்ச்சுகள் | 1100 | 00 |
| S. கோபாலபிள்ளையும் பிள்ளைகளும் | 43, கண்டி றோட் சுண்டிக்குழி | மணி 200 | 1000 | 00 |
| V. K. முருகேசுவும் சுற்றத்தவர்களும் | கிளிநொச்சி | சாலைக்குறடு (பகுதி) | 1000 | 00 |
| K. S. இரத்தினசாமி | மொடேர்ன் தியேட்டர் வதுளை | நட்டுக்கள் | 900 | 00 |
| Dr. K. C. துரைராசா முதலியார் | D. M O. ஊர்காவற்றுறை | அச்சுக் கட்டை | 800 | 00 |
| S. கார்த்திகேசு | வல்லுவெட்டித்துறை | பெரிய குதிரை 1. | 800 | 00 |
| S. இரத்தினசபாபதியும் உறவினரும் | சிவலிங்கப்புளியடி, ஒட்டுமடம் றோட் யாழ். | சிறிய சக்கரம் 2 சில்லு (பகுதிப் பணம்) | 875 | 00 |
| M. கனகரத்தினம் | 5ஆம் குறுக்குத் தெரு, கொழும்பு | நவருப் பலகை | 651 | 00 |
| V. சுந்தரம்பிள்ளை | விவேகானந்தா அச்சகம், யாழ்ப்பாணம் | கலசம் முலாம் உள்பட | 625 | 00 |
| முத்துக்குமாரு வைத்தியர் குடும்பம் | கஸ்தூரியார் வளவு வண்ணார்பண்ணை | சிம்மாசனம் | 600 | 00 |
| V. S. அரியரத்திளம் | ஒறியன் மேக்கன்ரயில் ஏஜன்ஸி, 346, ஓல்ட் மூவர் ஸ்றீற், கொழும்பு | கம்பம் 5. | 600 | 00 |
| K. ஸ்ரீபத்மஜோதி | 813, அளுத்மாவத்தை றோட், முகத்துவாரம் | பெரிய யாளி 8. | 600 | 00 |
| N. கந்தஞானி | நாரந்தனை, ஊர்காவற்றுறை | மூலை யாளி 8. | 550 | 00 |
| M. வேலுப்பிள்ளை | 117, 5ஆம் குறுக்குத் தெரு, கொழும்பு | அத்தியாளி 8. | 550 | 00 |

| பெயர் | விலாசம் | தேரின் பகுதி | தொகை ரூ. | ச. |
|---|---|---|---|---|
| S. அருணாசலம் | ஊவாடிக்கிருவ எஸ்ரேற், பண்டாரவளை | அசுவபந்தம் குதிரை 8. | 530 | 00 |
| M. கணபதிப்பிள்ளை | பழக்கடை, பெரியகடை, யாழ்ப்பாணம் | மூன்ருவது நிலம் விக்கிரகம் 8. | 500 | 00 |
| N. K. நாகலிங்கம் | 210, உவாட்பிளேஸ், பொறளை, கொழும்பு | மூன்ருவது நிலம் விக்கிரகம் 8. | 500 | 00 |
| முகாந்திரம் A. S. சங்கரப்பிள்ளை | ஆஸ்பத்திரி ரோட், யாழ்ப்பாணம் | மூன்ருவது நிலம் விக்கிரகம் 8. | 500 | 00 |
| S. கனகரத்தினம் | வழக்கறிஞர், நல்லூர் யாழ்ப்பாணம் | மணி 100. | 500 | 00 |
| முதலியார் V. மகேசன் | நவாலி, மானிப்பாய் | மணி 100. | 500 | 00 |
| K. சபாபதிப்பிள்ளை | அரசாங்க கொந்திருத்துக்காரர், கரம்பன் கிழக்கு, ஊர்காற்றுறை | மணி 100. | 500 | 00 |
| S. M. சங்கரன் செட்டியார் | 50 கே. கே. எஸ். ரோட், யாழ்ப்பாணம் | பெரிய யாளி 2. | 475 | 00 |
| P. R. P. சிங்கம் | சாவளை, வேலணை | பெரிய யாளி 2. | 475 | 00 |
| R. சிவசுப்பிரமணியம் | 108, பிறின்ஸ் ஸ்றீற், கொழும்பு 11 | பெரிய யாளி 2. | 475 | 90 |
| G. சுப்பிரமணியம் | நடுத்தெரு, காரைநகர் | பெரிய யாளி 2. | 475 | 00 |
| K. S. கந்தையா பத்தர் | உரும்பிராய் தெற்கு, உரும்பிராய் | பெரிய யாளி 2. | 475 | 00 |
| V. K. T. தம்பிமுத்து | 277, மலி பான் ஸ்றீற், கொழும்பு | சிம்மாசன விக்கிரகம் 16 .உருப்படி | 425 | 00 |
| V. P. நல்லதம்பி | 51, 5ஆம் குறுக்குத் தெரு, கொழும்பு | சிம்மாசன விக்கிரகம் உருப்படி | 425 | 00 |
| T. சண்முகலிங்கம் | சுருவில் ஊர்காவற்றுறை | சாரதி 1. | 375 | 00 |
| K. செல்லத்துரை | C/o M. முத்தையாபிள்ளை 5ஆம் குறுக்குத்தெரு, கொழும்பு | தேவாசன கம்பம். | 375 | 00 |
| ஸ்ரீமதி N. நடராசா | காரைநகர் கிழக்கு காரைநகர் | மூன்ருவது நிலம் விக்கிரகம் 6. | 360 | 00 |
| R. நாகரத்தினம் | நாயன்மார்கட்டு, யாழ்ப்பாணம் | மூன்ருவது நிலம் விக்கிரகம் 6. | 360 | 00 |
| S. T. சின்னத்துரை | லீலா ஸ்ரோர்ஸ், நொறிஸ் ரோட், கொழும்பு | பவளக்கால். | 350 | 00 |
| V. கணபதிப்பிள்ளை | G. P. O. கோலாலம்பூர் மலாயா | கெந்தர்வர் 4. | 333 | 00 |
| S. தில்லையம்பலம் | வலந்தலை, காரைநகர் | அஸ்வபந்தம் குதிரை 5. | 330 | 00 |
| S. பரராசசிங்கம் | தனலட்சுமி ஸ்ரோஸ் கலேவல | ,, ,, 5. | 330 | 00 |
| V. இராமசாமிப்பிள்ளை | வல்வெட்டித்துறை | ,, ,, 5. | 330 | 00 |
| K. A. நாகலிங்கம் | P. W. D. கலேவல | ,, ,, 5. | 330 | 00 |
| S. செல்லத்தம்பி | பள்ளப்பொல | ,, ,, 5. | 330 | 00 |
| T. கந்தையா | ஓவசியர் தட்டா தெரு, யாழ்ப்பாணம் | ,, ,, 5. | 330 | 00 |
| செல்வி P. கந்தையா | சிவியாதெரு, யாழ்ப்பாணம் | மூன்ருவது நிலம் விக்கிரகம் 5. | 300 | 00 |
| K. K. சுப்பிரமணியமும் C. நடராசாவும் | கொட்டடி, யாழ்ப்பாணம் | கெந்தர்வர் 4, | 300 | 00 |
| S. உலகநாதபிள்ளை | சிதா சோடா கொம்பனி, யாழ்ப்பாணம் | ,, 4. | 300 | 00 |

| பெயர் | லிலாசம் | தேரின் பகுதி | தொகை ரூ. ச. |
|---|---|---|---|
| R. வைத்திலிங்கம் லிமிற்றெட் | பதுளை | மூன்ருவது நிலங் விக்கிரகம் 5. | 300 00 |
| M. T. சுப்பிரமணியம் | 208, கொழும்பு வீதி, கண்டி | கெந்தர்வர் 4. | 300 00 |
| அசோசியேற்றட் ருக்ரேஸ் | றூம் நம். 2 இன்சுயறன்ஸ் பில்டிங் உவாட் ஸ்றீற், கண்டி | .. 4. | 300 00 |
| A. S. நடராசா | கரம்பன் கிழக்கு, ஊர்காவற்றுறை | ,, 4: | 300 00 |
| K. S. துரை | நம். 1 நீராவியடி லேன், யாழ்ப்பாணம் | மூன்ருவது நிலம் விக்கிரகம் 5. | 300 00 |
| T. தம்பித்துரை | நியூஸ் ஏஜன்ற், ஆஸ்பத்திரி ரோட், யாழ்ப்பாணம் | மூன்ருவது நிலம் விக்கிரகம் 5. | 300 00 |
| K. K. மாணிக்கம் அன் பிறதர் | 325, நாகலகம் ஸ்றீற், கிருன்பாஸ் கொழும்பு | 2ஆவது தோணிக்கட்டை | 300 00 |
| ஸ்ரீ ருஜதுரை ஸ்ரோர்ஸ் | 80, மெயின் ஸ்றீற், பலாங்கொடை | அஸ்வபந்தம் குதிரை 4. | 264 00 |
| முருகேசு மாணிக்கவாசகர் | வேலணை மேற்கு, வேலணை | முதல் தோணிக் கட்டை | 250 00 |
| துரைராசா | கடைவீதி, கோண்டாவில் | 3ஆவது நில விக்கிரகம் 4 | 240 00 |
| K. வேலுப்பிள்ளை அன் கோ | பண்டாரவளை | சிம்மாசனக் கம்பம் | 200 00 |
| K. இராமனுதன் | P.W.D. ஓவர்சியர், பசறை | பெரிய குதிரை 1. (பகுதிப் பணம்) | 200 00 |
| S. இரத்தினம் | P. W. D. ஓவசியர், கொத்மல ரோட், நாவலப்பிட்டி | அஸ்வபந்தம் குதிரை 3. | 198 00 |
| P. பாலசுப்பிரமணியம் | காரைநகர் | 3ஆவது நில விக்கிரகம் 3· | 190 00 |
| K. A. நாகலிங்கம் | P. W. D. ஓவசியர், கலவெல | ,, ,, 5. | 165 00 |
| S. பரராசசிங்கம் | தனலட்சுமி ஸ்ரோர்ஸ், கலவெல | | |
| S. சிங்காரவடிவேலு | அல்துமுல்லை | ,, ,, 2. | 132 00 |
| P. வேலுப்பிள்ளை | கிளிநொச்சி | 3ஆவது நில விக்கிரகம் 2. | 120 00 |
| பரமு கந்தையா | காரைநகர் | ,, ,, 2. | 120 00 |
| V. T. கந்தையா | தாவடி | ,, ,, 2. | 120 00 |
| A. நடராசா | நல்லூர் | ,, ,, 2. | 120 00 |
| V. கந்தையா | மணிக்கூட்டு வீதி, யாழ்ப்பாணம் | ,, ,, 2. | 120 00 |
| K. முத்துக்குமாரு | களபூமி, காரைநகர் | ,, ,, 2. | 120 00 |
| கேற்முதலியார் N. கனகநாயகம் | கண்டி | 3ஆவது நில விக்கிரகம் (பகுதிப்பணம்) | 100 00 |
| K. ஆறுமுகம் | 177, 5ஆம் குறுக்குத் தெரு, கொழும்பு | அஸ்வபந்தம் குதிரை 1. | 66 00 |
| M. K. மயில்வாகனம் அன் பிறதர்ஸ் | 40, கொத்மல ரோட், நாவலப்பிட்டி | ,, ,, 1. | 66 00 |
| N. K. இராசசிங்கம் | 38, கம்பளை ரோட், நாவலப்பிட்டி | ,, ,, 1. | 66 00 |
| N. நடராசா | 153, செட்டித் தெரு, கொழும்பு | ,, ,, 1. | 66 00 |
| M. பொன்னம்பலம் | பாக்கிய லட்சுமி ஸ்ரோர்ஸ், குமாரவிதி மாத்தளை | ,, ,, 1. | 66 00 |

| பெயர் | விலாசம் | தேரின் பகுதி | | தொகை ரூ: | ச. |
| --- | --- | --- | --- | --- | --- |
| V. K. பொன்னுத்துரை | ஸ்ரீ முருகன் ஸ்ரோர்ஸ் | | | | |
| | குமார வீதி மாத்தளை | அஸ்வபந்தம் குதிரை | 1. | 66 | 00 |
| முருகேசு | ஸ்ரேசன் வீதி, கம்பளை | ,, ,, | 1. | 66 | 00 |
| K. நடராசா | 22, நுவரெலியா ரோட், | | | | |
| | கம்பளை | ,, ,, | 1. | 66 | 00 |
| கேற்முதலியார் C. தியாக | | | | | |
| ராசா | மானிப்பாய் | ,, ,, | 1. | 66 | 00 |
| முதலியார் S. கனகரத் | | | | | |
| தினம் | ,, | ,, ,, | 1. | 66 | 00 |
| V. S. கணதிப்பிள்ளை | ,, | ,, ,, | 1. | 66 | 00 |
| T. சிவரத்தினம் | ,, | ,, ,, | 1. | 66 | 00 |
| R. N. சின்னையா | ஆனைக்கோட்டை | ,, ,, | 1. | 66 | 00 |
| N. தம்பிஐயா | மானிப்பாய் | ,, ,, | 1. | 66 | 00 |
| S. யோகேஸ்வரி | யோகம் அரிசிகுத்தும் | ,, ,, | | | |
| | ஆலை, நெல்லியடி | ,, ,, | 1. | 66 | 00 |
| S. கந்தசாமி | கரவெட்டி | ,, ,, | 1. | 66 | 00 |
| A. கந்தையா | காரைநகர் | ,, ,, | 1. | 66 | 00 |
| V. பரமநாதன் | ஆனைக்கோட்டை | ,, ,, | 1. | 66 | 00 |
| K. செல்வநாயகம் | பட்டினசபை | | | | |
| | மானிப்பாய் | ,, ,, | 1. | 66 | 00 |
| A. நாகலிங்கம் | 31, வின்சர் அவென்யூ | | | | |
| | தெகிவளை | ,, ,, | 1. | 65 | 00 |
| K. பரஞ்சோதி | காரைநகர் | 3ஆவது நில விக்கிரகம் | 1. | 60 | 00 |
| R. சுப்பிரமணியம் | சில்க் பரடயிஸ், | | | 60 | 00 |
| | யாழ்ப்பாணம் | ,, ,, | 1. | 60 | 00 |
| A. வேலுப்பிள்ளை | காரைநகர் | ,, ,, | 1. | 60 | 00 |
| N. ஐயாத்துரை | கோண்டாவில் | ,, ,, | 1. | 60 | 00 |
| A. கனகசபை | காரைநகர் | ,, ,, | 1. | 60 | 00 |
| K. K. கனகசபை | களபூமி, காரைநகர் | ,, ,, | 1. | 60 | 00 |
| ஆ. சுப்பிரமணியம் | 235 காங்கேசன்துறை | | | | |
| | வீதி, யாழ்ப்பாணம் | ,, ,, | 1. | 60 | 00 |
| V. M. கந்தையாபிள்ளை | 567, காங்கேசன்துறை | | | | |
| | வீதி, யாழ்ப்பாணம் | ,, ,, | 1, | 60 | 00 |
| S. இரங்கநாதன் | தெல்லிப்பளை | ,, ,, | 1. | 60 | 00 |
| திருமதி இரத்தினசிங்கம் | கோண்டாவில் | ,, ,, | 1, | 60 | 00 |
| A. S. இராசையா | 259, நாவலர் வீதி, | | | | |
| | யாழ்ப்பாணம் | ,, ,, | 1. | 60 | 00 |
| A. கனகராயர் | தெல்லிப்பளை | ,, ,, | 1, | 60 | 00 |
| E. P. இராசையா | யாழ்ப்பாணம் | ,, ,, | 1. | 60 | 00 |
| V. மருதப்பு | நல்லூர் | ,, ,, | 1. | 60 | 00 |
| A. கணபதிப்பிள்ளை | காரைநகர் | ,, ,, | 1. | 60 | 00 |
| K. A. தம்பையா | நல்லூர் | ,, ,, | 1. | 60 | 00 |
| M. கதிரவேற்பிள்ளை | ,, | ,, ,, | 1. | 60 | 00 |
| A. S. வேலுப்பிள்ளை | அப்புத்தளை | ,, ,, | 1. | 60 | 00 |
| K. வேலுப்பிள்ளை | கிராமக்கோடு, | | | | |
| | ஊர்காவற்றுறை | கேலகம் | | 50 | 00 |

குறிப்பு: திரு. C. S கந்தையாச் செட்டியார் அவர்களால் முன்பு செய்விக்கப்பட்ட 35 விக்கிரகங்களும் இத்தேரில் இடம் பெற்றுள்ளன.

ரூபாய் ஐம்பதுக்கு (50) மேற்பட்ட தொகை வழங்கிய

# நன்கொடையாளர் அட்டவணை

| | | ரூபா. ச. |
|---|---|---|
| Dr. S. கணபதிப்பிள்ளை வைத்தியர், இப்போது மலாயா | ... | 1000-00 |
| G. G. பொன்னம்பலம், பாராளுமன்ற அங்கத்தவர், யாழ்ப்பாணம் | ... | 501-00 |
| V. பசுபதிப்பிள்ளை குடும்பத்தார், புங்குடுதீவு | ... | 500-00 |
| S. K. முருகேசு, பாணந்துறை | ... | 250-00 |
| A. வைத்திலிங்கம் & சன்ஸ், 200 Lower Street, Badulla | ... | 250-00 |
| S. சிவானந்தன், 20, பகத்தலே வீதி, கொழும்பு | ... | 250-00 |
| S. K. சரவணமுத்து, மட்டக்களப்பு | ... | 250-00 |
| K. சிவகடாட்சம், கந்தர்மடம், யாழ்ப்பாணம் | ... | 250-00 |
| K. K. A. கந்தையாபிள்ளை, ஆஸ்பத்திரி வீதி, யாழ்ப்பாணம் | ... | 250-00 |
| K. சச்சிதானந்தம், கந்தர் மடம், யாழ்ப்பாணம் | ... | 250-00 |
| S, V. முருகேசு, களபூமி, காரைநகர் | ... | 200-00 |
| மகாதேவன்ஸ் லிமிட்டெட், பாங்சால் வீதி, கொழும்பு | ... | 200-00 |
| S. K. ஐயம்பிள்ளை, ஆனந்தபவான், கொழும்பு | ... | 200-00 |
| Dr. S. சுப்பிரமணியம், யாழ்ப்பாணம் | ... | 200-00 |
| க. க. அப்பாக்குட்டி, குளியாப்பிட்டி | ... | 200-00 |
| E. V. கார்த்திகேசு, பசறை | ... | 200-00 |
| M. வேலுப்பிள்ளை, காரைநகர் கிழக்கு | ... | 200-00 |
| V. கந்தப்பு & சன்ஸ், ,, | ... | 200-00 |
| S. அருணாசலம், P. W. D. றவாப், மலாயா | ... | 156-55 |
| மார்க்கண்டு ஹோட்டல், 20, ஆட்டுப்பட்டி தெரு, கொழும்பு | ... | 153-00 |
| அம்பிகா ஸ்ரோர், 1, பசார் வீதி, பதுளை | ... | 150-00 |
| திருமதி. S. தம்பையா, 8, Barnes Place, Colombo | ... | 150-00 |
| C. சந்தானம், கொந்தனுவ, நாவலப்பிட்டி | ... | 150-90 |
| ஒரு சைவன், பதுளை | ... | 150-00 |
| S. இரத்தினசிங்கம், பிரசித்த நொத்தாரிஸ், யாழ்ப்பாணம் | ... | 150-00 |
| N. சுப்பிரமணியம், காரைநகர் | ... | 150-00 |
| K. M. சின்னத்துரை, புங்குடுதீவு | ... | 140-00 |
| திருமதி. T. நடராசா, 18, பகத்தலே ரோட், கொழும்பு | ... | 125-00 |
| V. E. A. கனகசிவம், போகவந்தலாவ | ... | 125-00 |
| S. செல்வரத்தினம், சுங்க இலாகா | ... | 118-50 |
| Dr. C. குருசாமி, கொட்டடி, யாழ்ப்பாணம் | ... | 108-00 |
| S. K. நல்லதம்பி, 238, Gas Works Street, Colombo | ... | 101-00 |
| K. மயில்வாகனம், 194, ,, ,, ,, | ... | 101-00 |
| A. கணபதி, 45, 4-ம் குறுக்குத்தெரு, கொழும்பு | ... | 101-00 |
| மீனாம்பிகா மில்ஸ், 54, 4-ம் ,, ,, | ... | 101-00 |
| V. S. இராசா, 1/1/, சோமசுந்தரம் லேன் சுண்ணாக்குளி | ... | 101-00 |
| V. S. சுப்பிரமணியம், 100, ஆஸ்பத்திரி ரோட், யாழ்ப்பாணம் | ... | 101-00 |
| S. சுந்தரம்பிள்ளை, வெள்ளவத்தை | ... | 101-00 |
| S, A. S. மாரிமுத்து நாடார், 335, K. K. S. ரோட், யாழ்ப்பாணம் | ... | 101-00 |
| V. முத்துக்குமாரு, தொல்புரம், சுளிபுரம் | ... | 101-00 |
| V. தம்பிமுத்து, 38, லோசன் வீதி, நுவரெலியா | ... | 100-00 |

| | | ரூபா. ச. |
|---|---|---|
| A. N. கந்தையா, நாவலர் வீதி, யாழ்ப்பாணம் | ... | 100-00 |
| திருமதி. P. கந்தசாமி, பாக்கிய வித்தியாசாலை, மாத்தளை. | ... | 100-00 |
| S. செல்லமுத்து, கொழும்பு, | ... | 100-00 |
| திருமதி. N. நடராசா, 12, Barnes Place, Colombo. | ... | 100-00 |
| Dr. S. பரமநாதன், அப்புத்தளை. | ... | 100-00 |
| M. S. துரைச்சாமி, 44, திருக்கோணமலை வீதி, கண்டி. | ... | 100-00 |
| K. வேலுப்பிள்ளை, 37, காணத்தை ரேட், கொழும்பு. | ... | 100-00 |
| T. முத்துக்குமாரு, 233, Lower Street, பதுளை. | ... | 100-00 |
| M. தருமலிங்கம், 53, ஆஸ்பத்திரி ரேட், யாழ்ப்பாணம். | ... | 100-00 |
| N. கணபதிப்பிள்ளை ஆசிரியர், மூளாய் | ... | 100-00 |
| S. நாகலிங்கம், 100, அரசடி வீதி, கந்தர்மடம் | ... | 100-00 |
| K. செல்லையா ஓவசியர், குருநாகல் | ... | 100-00 |
| S. பொன்னம்பலம், கருங்காலி, காரைநகர் | ... | 100-00 |
| S. R. செல்லத்துரை, காங்கேசன்துறை வீதி, யாழ்ப்பாணம் | ... | 100-00 |
| T. N. இரகுநாதன், ,, ,, | ... | 100-00 |
| N. தெய்வேந்திரன், ,, ,, | ... | 100-00 |
| V. K. இளையதம்பி, 37, ஸ்ரான்லி வீதி, யாழ்ப்பாணம் | ... | 100-00 |
| R. முருகேசு, காரைநகர் | ... | 100-00 |
| S. தியாகராசா, தெல்லிப்பழை | ... | 100-00 |
| K. P. தம்புசாமி, சிப்சைட், யாழ்ப்பாணம் | ... | 100-00 |
| N. K. இராசலிங்கம், கோண்டாவில் | ... | 100-00 |
| K. செல்லையா, காங்கேசன்துறை வீதி, யாழ்ப்பாணம் | ... | 100-00 |
| P. N. T. ஆறுமுகம், காரைநகர் | ... | 100-00 |
| S. இலங்கைநாயகம், கச்சேரி, யாழ்ப்பாணம் | ... | 100-00 |
| C. C. சோமசேகரம், வழக்கறிஞர், யாழ்ப்பாணம் | ... | 100-00 |
| S. வைரமுத்து, வல்வெட்டித்துறை | ... | 100-00 |
| V. K. சுப்பிரமணியம், புங்குடுதீவு | ... | 100-00 |
| A. தில்லையம்பலம், சங்கரத்தை | ... | 100-00 |
| அப்புக்குட்டியாபிள்ளை, வல்வெட்டித்துறை | ... | 100-00 |
| S. இரத்தினம், சுருவில், ஊர்காவற்றுறை | ... | 100-00 |
| S. சோமசுந்தரம், 26, பொலிஸ் பார்க் வீதி, கொழும்பு | ... | 100-00 |
| க. பொன்னம்பலம், கரம்பன் தெற்கு, ஊர்காவற்றுறை | ... | 100-00 |
| A. V. பொன்னுத்துரை, 40, மெயின் வீதி, மொறட்டுவா | ... | 100-00 |
| A. S. K. கந்தையாபிள்ளை, கந்தானை | ... | 100-00 |
| K. கனகரத்தினம், 36, ஸ்ரீ விக்ரம ரேட், வெள்ளவத்தை | ... | 100-00 |
| V. S. P. சுப்பிரமணியஞ் செட்டியார், 355, கிருன்ட்பாஸ்ரேட், கொழு. | | 100-00 |
| P. R. ரமன் செட்டியார், கொஸ்லாந்தை | ... | 100-00 |
| M. S. கனகராசா, அல்துமுல்லை | ... | 100-00 |
| வே. கந்தையா, ஏரேல் தோட்டம் பாறிற் புன்ரார் | ... | 100-00 |
| க. மாணிக்கம், 48, பிறின்ஸ் ஸ்றீற், கொழும்பு | ... | 100-00 |
| K. K. திருநாவுக்கரசு, புறக்கோட்டை | ... | 100-00 |
| A. T. ஆறுமுகம், தங்கோடை, காரைநகர் | ... | 100-00 |
| நா. சி. செல்லையா, பொறளை | ... | 100-00 |

| | | ரூபா. ச. |
|---|---|---|
| அ. சுப்பிரமணியம், சுப்பிரமணியம் ஸ்ரோர், அப்புத்தளை | ... | 100-00 |
| கா. மதியாபரணம், மருதானை | ... | 100-00 |
| V. S. அருணசலம், வல்வெட்டித்துறை | ... | 100-00 |
| P. கனகசூரியர், நாயன்மாகாடு, யாழ்ப்பாணம் | ... | 100-00 |
| S. செல்லத்துரை, ஓவசியர், மன்னர் | ... | 100-00 |
| M. இராமுப்பிள்ளை, தெல்லிப்பழை | ... | 100-00 |
| N. செல்லையா, அளவெட்டி | ... | 100-00 |
| V. அருணசலம்பிள்ளை, கன்னதிட்டி, யாழ்ப்பாணம் | ... | 100-00 |
| சி. சங்கரப்பிள்ளை, 113 பருத்தித்துறை வீதி, நல்லூர் | ... | 100-00 |
| V. S. மணியம், றவாங், மலாயா | ... | 79-05 |
| I. பொன்னம்பலம், சிங்கப்பூர் | ... | 77-07 |
| S. பாலசிங்கம், றவாங், மலாயா | ... | 77-50 |
| S. இராமலிங்கம், நில அளவை இலாகா, சிங்கப்பூர் | ... | 77-07 |
| நா. க. பசுபதிப்பிள்ளை. 5. நி. கடை, டிக்கோயா | ... | 75-00 |
| A. தம்பிப்பிள்ளை, காரைநகர் | ... | 75-00 |
| C. சுப்பிரமணியம், றம்புக்பிற்றிய, நாவலப்பிட்டி | ... | 55-00 |
| V. இராசா, றவாங், மலாயா | ... | 54-25 |
| T. மயில்வாகனம், விற்பனை இலாகா, கொழும்பு | ... | 51-10 |
| இ. சின்னத்தம்பி, செல்வம் ஸ்ரோர், டெறனியாகல் | ... | 51-00 |
| ப. கந்தசாமி, நயினதீவு | ... | 51-00 |
| ஆர். பி. பிறதேஸ், யாழ்ப்பாணம் | ... | 51-00 |
| கறிபக்ஸ கரிமால் & சன், யாழ்ப்பாணம் | ... | 51-00 |
| கறிபக்ஸ ஜெயதீஸ் & சன் யாழ்ப்பாணம் | ... | 51-00 |
| ச. நாராயணன், 45 நாலாம் குறுக்குத்தெரு, கொழும்பு | ... | 51-00 |
| K. இராமச்சந்திரா ஜயந்திபுர தலங்கம் | ... | 50-50 |
| K. நாகலிங்கம், நயினதீவு | ... | 50-00 |
| K. குமாரவேல் தலவாக்கொல்லை | ... | 50-00 |
| வை. சி. சி. கு. கந்தர்மடம் | ... | 50-00 |
| டக்டர் S. மாணிக்கம், நெடுந்தீவு | ... | 50-00 |
| S. கந்தையா, படிவத்தை குண்டசாலை | ... | 50-00 |
| வே. த. செல்லையா, சரசமலர்ஸ் ஸ்ரோஸ் கழுத்துறை | ... | 50-00 |
| T. முருகேசு, அலெக்சான்ரு பிளேஸ், கொழும்பு | ... | 50-00 |
| S. N. மதியாபரணம், 300 முற்வால் வீதி, கொழும்பு | ... | 50-00 |
| சி. குகநாதன், குகவாசம் களுத்துறை | ... | 50-00 |
| டக்டர்A. சோமசுந்தரம். பாறிற் புன்ரார் மலாயா | ... | 50-00 |
| S. நாகலிங்கம், லிங்கன் அச்சகம், 270 நாகலகம்வீதி, கொழும்பு | ... | 50-00 |
| திருமதி ப. இராமநாதன், கோட்டல் பிலேஸ், கொழும்பு | ... | 50-00 |
| A. பொன்னம்பலம், புக்கிற் செம்பிலான்தோட்டம், குவாலா செட்டில் கெடா | | 50-00 |
| V. K. நாகமுத்து, 56. சுருட்டுக்கடை, அப்புத்தளை | ... | 50-00 |
| சி. த. தாமோதரம்பிள்ளை, கரம்பன் கிழக்கு, ஊர்காவற்றுறை | ... | 50-00 |
| நா. க. வல்லிபுரம், காவத்தை | ... | 50-00 |
| T. சுவாமிநாதன் 105. செங்கசத்திரம், யாழ்ப்பாணம் | ... | 50-00 |
| S. M. கந்தையா, நாரந்தனை, ஊர்காவற்றுறை | ... | 50-00 |
| S. நமசிவாயம் கொழும்பு | ... | 50-00 |

| | | ரூபா. ச. |
|---|---|---|
| V. கதிரவேலு, 466, ஆஸ்பத்திரி வீதி, சுண்டிக்குளி | ... | 50-00 |
| திருமதி K. சண்முகரத்தினம், மணியகாரன் ஒழுங்கை, கொக்குவில் | ... | 50-00 |
| S. மகாதேவா, கொழும்பு | ... | 50-00 |
| திருமதி S. சோமநாதன் 8, பாண்ஸ் பிளேஸ், கொழும்பு | ... | 50-00 |
| S. மாணிக்கவாசகர், ஓவசியர், அக்கலை | ... | 50-00 |
| திருமதி S. தம்பையா, 8, பாண்ஸ் பிளேஸ், கொழும்பு | ... | 50 00 |
| சுவாமிநாதன், ரேஸ்மீட் பிளேஸ், கொழும்பு | ... | 50-00 |
| இந்திரா ஸ்ரோர், வெலிமடை | ... | 50-00 |
| S. P. இராமநாதன், அல்துமுல்லை | ... | 50-00 |
| சி. த. அருளம்பலம், 284, சந்தை வீதி, காலி | ... | 50 00 |
| M. தம்பித்துரை, கோண்டாவில் | ... | 50-00 |
| N. தில்லையம்பலம், அளவெட்டி | ... | 50-00 |
| V. தவமணி, ,, | ... | 50-00 |
| C. M. சின்னப்பு, ஓவசியர், தெல்லிப்பழை | ... | 50-00 |
| S. சிவசுப்பிரமணியம், ,, ,, | ... | 50 00 |
| N. முத்தையா, பதுளை | ... | 50-00 |
| A. V. தம்பிப்பிள்ளை, காரைநகர் மேற்கு | ... | 50-00 |
| T. நவரத்தினம், மானிப்பாய் | ... | 50 00 |
| K. வேலுப்பிள்ளை, 610/4. காங்கேசன்துறை வீதி, யாழ்ப்பாணம் | ... | 50-00 |
| முதலியார் C. முத்துத்தம்பி, யாழ்ப்பாணம் | ... | 50 00 |
| மு. ஐயம்பிள்ளை, 262, பிரதான வீதி, அலாவை | ... | 50-00 |
| V. M. வேலுப்பிள்ளை, & சன்ஸ் டெனியாய | ... | 50-00 |
| ஜெகநாதன், மூக்குத்தூள் கடை, யாழ்ப்பாணம். | ... | 50-00 |
| C. துரைநாயகம், வல்வெட்டித்துறை | ... | 50-00 |
| S. சிவகுருநாதன், பருத்தித்துறை | ... | 50-00 |
| C. நவரத்தினம், வட்டுக்கோட்டை | ... | 50 00 |
| வட இலங்கை கட்டிடக் கொந்தருத்துக்காரர், யாழ்ப்பாணம் | ... | 50-00 |
| வட இலங்கை, வியாபாரக் கம்பனி ,, | ... | 50-00 |
| R. சிவராஜ், ஆரியகுளத்தடி ,, | ... | 50 00 |
| S. சண்முகசுந்தரம், காரியாதிகாரி, நெடுங்கேணி | ... | 100-00 |

விபரமான வரவுசெலவுக் கணக்குகள் பின்பு பிரசுரிக்கப்படும். 30–6–57 வரை சேர்ந்த பணம் ரூபாய். 94,317-36 சதம். 30–6–57வரை செலவாகிய பணத்தையும் ஆடி மாசத்தில் நடைபெறவேண்டிய வேலைகளின் செலவுகளையும் சேர்த்தால் தேருக்கும் தேர் மண்டபத்துக்குமாக ரூபாய் 1,25,000! வரையில் மொத்தச் செலவாகுமென மதிப்பிடப்பட்டுள்ளது என்பதை அடியார்களுக்கு அறிவிக்க விரும்புகின்றோம்.

செ. சிவஞானம்
ஆ. கந்தையா
A. S. சங்கரப்பிள்ளை
இணைத் தனதிகாரிகள்
நயினதீவு ஸ்ரீ நாகபூஷணி அம்மன் கோவில்
தேர்த் திருப்பணிச் சபை.

நயினதீவு
30–6–57

# வெள்ளோட்ட வைபவம்

யாழ்ப்பாணத்திற் பிரசித்திபெற்று விளங்கும் நயினாதிவு ஸ்ரீ நாகபூஷணி அம்பாளுக்குப் புதிதாக அமைக்கப்பெற்ற சித்திரக் கலை சொட்டும் அழகிய தேரின் வெள்ளோட்ட வைபவத்தை ஆனிமாதம் இருபத்துநான்காந் திகதி (8–7–57) திங்கட்கிழமை பகல் 11 மணியளவில் நடாத்துவதற்கு நயினைத் தேர்த் திருப்பணிச் சபையினர் ஏற்பாடு செய்தனர். அன்றியும் நயினாதிவுக்குப் போய் வருவதற்கேற்ற மோட்டார் வள்ளப் போக்கு வரவு வசதிகளையும் ஒழுங்கு செய்தனர். பல பிரமுகர்களுக்கு வரவழைப்புகளும் அனுப்பப் பெற்றன.

எனவே 7–7–57 ஞாயிற்றுக்கிழமை தொடக்கம் திங்கட்கிழமை காலை வரை பல்லாயிரக்கணக்கான சைவத் திருநெறிச் செல்வர்கள் கைபுனைந் தியற்றிய கவின் பெறு வனப்பு வாய்ந்த புதிய தேரின் வெள்ளோட்ட விழாவைக் காணவும், அம்பாளை வணங்கி அருள்பெறவும் நயினாதிவுக்குச் சென்றார்கள். மற்றெந்த வருடத் திருவிழாவையும் பார்க்க இவ்வருடத்தில் வெள்ளோட்டத் திருவிழா மக்களிடையே பெரிய உணர்ச்சியை உண்டாக்கிவிட்டது. ஞாயிற்றுக்கிழமையன்றே கோயிலடியிற் சனப் பெருக்கம் அதிகரித்துவிட்டது. அடுத்த நாள் வெள்ளோட்ட விழாவுக்கு வரும் சனங்கள் வந்துநிற்க இடமுண்டோ என்ற சந்தேகங் கூட எழுந்தது. அவ்வளவு தூரத்துக்குச் சன நெருக்கம் இருந்தது.

வெள்ளோட்ட வைபவத்துக்கு முன்னர் வழக்கமாகச் செய்யப்படும் கிரியைகள் சனிக்கிழமையன்றே (6–7–57) ஆரம்பமாயின. இரவு எட்டு மணிக்கு மிர்த்சங்கிரகணம், அங்குரார்ப்பணம், கலச ஸ்தாபனம் ஆதியன நடைபெற்றன. அடுத்த நாள் ஞாயிற்றுக்கிழமை காலை 8 மணிக்கு வாஸ்து சாந்தி, வாஸ்து ஹோமம் முதலியனவும், மாலையில் முடி கிராமப் பிரதக்ஷணமும் இரத்தினந்யாசமும் நடந்தேறின.

நயினைத் தேர்த் திருப்பணிச் சபையின் தலைவர் **திரு. ம. ஸ்ரீகாந்தா** அவர்களும், கோயில் தருமகர்த்தா சபைக் காரியதரிசி **திரு. கா. ஆறுமுகம்** அவர்களும், கோயில் தருமகர்த்தாக்களுள் ஒருவராகிய ஆசிரியர் **திரு. தில்லையம்பலம்** அவர்களும் வெள்ளோட்ட வைபவத்திற்குச் சங்கற்பஞ் செய்து வெள்ளோட்ட வைபவத்திற் கலந்துகொண்டார்கள். வெள்ளோட்டம் ஆரம்பமாவதற்கு முன் நடைபெறவேண்டிய கலச ஸ்தாபனம் முதலிய கிரியைகளைச் செவ்வனே நடாத்த இந்தியாவிலிருந்து **ஸ்ரீ துரைச்சாமி ஸ்தபதியார்** அவர்களும், **ஸ்ரீ மகாலிங்க ஸ்தபதியார்** அவர்களும் வரவழைக்கப்பட்டனர். அவர்கள் யாவருஞ் சேர்ந்து கிரியைகளை முட்டின்றி நிறைவேற்றி வைத்தார்கள். அதே தினத்தில் காலை 9 மணிக்கு அம்பாளுக்கு மகா சங்காபிஷேகம் நடைபெற்றது.

புத்தம் புதிய சித்திரத் தேருக்குக் கண் திறத்தல் வைபவம் நடைபெற்றது. தேரிலே செதுக்கப்பெற்றிருந்த அழகிய கைலாச வாகனச் சித்திரத்துக்குப் பட்டாடை அணிந்து கண் திறப்பு வைபவத்தை நடாத்தி வைத்தனர். வெள்ளோட்டம் நண்பகல் 12 மணிக்கு ஆரம்பமாவதற்கு முன்னர் **திரு. ம. ஸ்ரீகாந்தா** அவர்கள் தேரின் சில்லொன்றின்மீது வழக்கமான சம்பிரதாயப்படி ஒரு தேங்காயை எறிந்து உடைத்தார். தேரின் பாரிய வடத்தைக் குழுமியிருந்த பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் ஆண்களும் பெண்களும் கை தொட்டிழுக்கவும், அரோகரா என்ற கோஷம் வானைப் பிளந்து செல்லவும், கலசம் வைக்கப்பெற்றிருந்த சித்திரத் தேர் உருண்டோட ஆரம்பித்தது.

# நயினதீவு நாகபூஷணி அம்மன் கோவில்

## தேர்த் திருப்பணிச் சபை மலர்

வெள்ளோட்ட வைபவஞ் சிறப்பாக நடந்தேறியது. தேரும் இருப்புக்கு வந்துவிட்டது. ஆனல் மலர் ஏதோ வெளிவரும் என்ற பேச்சு அடிபட்டதேயொழிய மலரைக் கண்ணலே ஒருவருங் காணவில்லை. வெள்ளோட்ட வைபவத்துக்கு இது ஒரு சிறு குறைபோலும் என்றுகூடப் பேசத் தொடங்கினர். ஆனல் திருமகள் அச்சக ஊழியரும், விவேகானந்த அச்சக ஊழியரும் கடைசி ஒருவாரம் வரை இரவு பகலாக வேலைசெய்து மலரை 8-7-57 திங்கட்கிழமை மலர்ச்செய்தேவிட்டார்கள். வெள்ளோட்ட வைபவத்தன்று மலரை வெளியிடாமல் உறங்குவதில்லையென்று கங்கணங் கட்டி, கடைசி மூன்று தினங்கள் உறக்கமின்றி உணவைப் பேணது உழைத்தவர் **திரு. வே. கிருஷ்ணபிள்ளை** யவர்கள். அவர்கள் இந்த மலர்ப்பிரதிகளையெல்லாம் ஒரு தனி மோட்டார்வள்ளத்திலே கொண்டு வந்து சேர்த்தார். சேர்த்தபின் ஏழு பிரதிகளை எடுத்து அம்பாள் சந்நிதானத்தில் வைத்து அர்ச்சனை செய்ய ஒழுங்கு செய்தார். அழகிய காகிதப் பெட்டிகள் செய்து அவற்றில் முதல் இரு நூல்களையும் வைத்திருந்தார். இவ்வளவு ஏற்பாடுகளையும் இரண்டாம் பேருக்குந் தெரியாமலே செய்துமுடித்தார் **திரு. வே. கிருஷ்ண பிள்ளை.**

தேர் இருப்புக்கு வந்ததும், அர்ச்சனை செய்யப்பெற்ற மலர்களை எடுத்துவந்த **திரு. வே. கிருஷ்ணபிள்ளை** அவர்கள் அழகிய பெட்டியிலிருந்த முதலாவது மலரை **முதலியார் குல. சபாநாதன்** அவர்களிடம் கொடுத்து, தேர்த் திருப்பணிச் சபைத் தலைவர் **திரு. ஸ்ரீகாந்தா** வசம் ஒப்படைக்குமாறு கூறினர். தேர்த் திருப்பணிச் சபையின் பொருட்டு **முதலியார் குல. சபாநாதன்** எழுதி **திரு. வே. கிருஷ்ணபிள்ளை** அச்சிட்டு வெளியிட்ட மலரினை அவர்கள் இருவரும் மேற்குறித்த சபையிடம் ஒப்படைக்கும் வைபவம் நடந்தேறியபின்னர், முதலாவது பிரதியை **திரு. ம. ஸ்ரீகாந்தா** அவர்கள் யாருக்கு விற்கலாமென யோசித்தார். முன்னள் வடமாகாண அதிபரும், காங்கேசன்துறை சிமெந்து பரிபாலனச்சபைத் தலைவரும், அடக்கமும் ஒடுக்கமும் வாய்ந்தவரும், சமயப்பற்று உடையவரும், இந்து மாமன்றத் தலைவருமாகிய **திரு. சி. குமாரசுவாமி** யவர்களே அம்பாளின் முதற் பிரதியை வாங்குதற்குப் பல்லாற்ருனுந் தகுதியுடையவர் எனக் கண்டு அப்பெரியாருக்கே முதற் பிரதியைத் தேர்முட்டிக்கருகில் அமைக்கப்பெற்றிருந்த தற்காலிகக் கொட்டகையில் வைத்து விற்ருர்கள். ஸ்ரீகாந்தா அவர்கள் மூன்ருவது பிரதியை அங்கு சமுகமளித்திருந்த வித்துவசிரோமணி சி. கணேசையர் அவர்களுக்கும், நான்காவது பிரதியை திரு. குமாரசுவாமி ஆச்சாரி அவர்களுக்கும, ஐந்தாவது பிரதியைத் தேர்த் திருப்பணிச் சபையின் தனதிகாரிகளில் ஒருவரான திரு. சிவஞானம் அவர்களுக்கும், ஆருவது பிரதியை ஊர்காவற்றுறைக் காரியாதிகாரி திரு. ஆ. கந்தையா அவர்களுக்கும், ஏழாவது பிரதியை முதலியார் குல. சபாநாதன் அவர்களின் மனைவி அன்னபூரணி அவர்களுக்கும் வழங்கினர்கள். "நீங்கள் ஒத்துழையாதிருந்தால் இந்த மலர் வெளிவந்திருக்க முடியாது. எனவே இம் மலர் வெளிவருவதற்கு உதவி ஒத்தாசை புரிந்த தங்களுக்கு நாங்கள் நன்றி செலுத்த வேண்டியது எங்கள் கடமை. அம்பாள்

தங்கட்கு அருள் பாலிப்பாளாக'' என்று கூறி மலர்ப் பிரதியை வழங்கினுர்கள்.

தேரைப் பற்றிய மலர் வெளிவந்து விட்டது என்ற செய்தி காட்டுத் தீபோல மக்களிடையே பரவியது. மக்கள் தேவஸ் தானத்தை நோக்கிப் படையெடுக்கத் தொடங்கினுர்கள். சிறிது நேரத்துக்குள் "மலர்கள் விலையாகி விட்டன. இன்னுஞ், சில பிரதிகள் தேர்த் திருவிழாவன்று விற்கப்படும். பக்தர்கள் பலருக்கு மலர் கிடைக்காததையிட்டு வருந்துகின்ரேம்'' என்று ஒலிபரப்பி மூலம் ஒரு செய்தி அறிவிக்கப் பட்டது. 'மலர் வெளியிடப்பட்டதும் அதனைப் பெற்றுக்கொள்வதிற் பக்தர்கள் அதிக உற்சாகங் காட்டினுர்கள். சிறிது நேரத்துக்கிடையில் அங்கு பிரதிகளைப் பெறுவது கஷ்டமாகிப் போய்விட்டது. அதற்கெல்லாங் காரணம் அம்மலர் பல வகையிலும் பெற்றிருந்த தனிச் சிறப்பேயாகும்' என்று 'வீரகேசரி'ப் பத்திரிகையின் யாழ்ப்பாண நிருபர் 11-7-57 'வீரகேசரி'ப் பத்திரிகையிற் குறிப்பிட்டுள்ளார். மேலும் அவர் இம் மலரைப்பற்றிக் கூறியவை பின்வருமாறு :

'நயினுதீவு நாகபூஷணி அம்பாள் ஆலயத்தின் இவ்வருட மகோற்சவத்தில் புதிய தேர்த் திருப்பணிச் சபையினரால் வெளியிடப்பட்டுள்ள 'சிறப்பு மலர்' ஒரு முக்கிய அம்சமாக இடம்பெற்றிருந்தது. இவ்வாலயத்தின் தொன்மையையும் பெருமையையும் புதிய தேரின் அமைப்பையும் அதில் இடம்பெற்றுள்ள அற்புத சித்திரங்களின் விளக்கத்தையும் உள்ளடக்கியதான மேற்படி மலரை முதலியார் குல. சபாநாதன் எழுதித் தயாரித்திருந்தார். இத்தகைய ஆக்கப் பணிகளில் அதிக ஈடுபாடுள்ளவரும், ஆராய்ச்சி வன்மை யுடையவருமான திரு. குல. சபாநாதன் பண்டைய சரித்திரச் சான்றுகளைத் திரட்டியும் நூல்களை ஆராய்ந்தும் எழுதியுள்ள இம் மலரானது ஈழத்திற் சைவமுந் தமிழும் சரித்திர காலத்துக்கு முன்பே நிலைபெற்றிருந்தன என்பதற்குப் போதிய ஆதாரங்களைத் தன்னகத்தே கொண்டதாக விளங்குகிறது.''

அன்று மத்தியானம் மகேஸ்வர பூசை நடைபெற்றது. இதற்கு மலாயன் கபே மனேஜர் அவர்கள் பேருதவி புரிந்தார்கள். பிற்பகல் 5 மணியளவில் அம்பாள் சந்நிதானத்தில் ஸ்தபதியார் அவர்களுக்குப் பொன்னுடை போர்த்து, பொற்கிழி வழங்கப்பட்டதுடன், தொழிலாளர்களுக்கும் சம்பாவனைகள் நடைபெற்றன. திரு. ம. ஸ்ரீகாந்தா அவர்கள் தலைமையில் நடைபெற்ற இக்கூட்டத்தில் அன்பர் பலர் ஸ்தபதியார் அவர்களையும் அவருடன் பணிபுரிந்த தொழிலாளர்களையும் இத்தேரைச் சித்திரக்கலையின் மகோன்னத எடுத்துக்காட்டாக விளங்கச்செய்து நயினைக் கோயிலின் புகழையும் ஈழநாட்டின் கீர்த்தியையும் பரவச் செய்ததற்காகப் பாராட்டினர். **சரவணையூர் தில்லைநாதப் புலவர்** அவர்கள் இயற்றிய வாழ்த்துப் பாக்களில் மூன்றினை ஈண்டெடுத்துக் காட்டுகின்ரும்.

திருவரு நயினை நாகேஸ்
வரிமகா ரதத்தைச் செய்து
தரவரு குமார சாமித்
தபதியார் தருவாரூரில்
வருபவர் தங்கள் சிலத்
தபதியாய் வந்த விச்வ
கருமனே யச்சு மாறிப்
புவியில்விச் சுவகன் மாவாய்

வந்ததொத் தந்தக் கல்வி
வந்தவ ராத லாற்ருன்
சுந்தர வன்மை வாய்ந்த
அசரமாம் முதிரைத் துண்டுஞ்
சந்தமார் சரம தென்ன
வற்புதந் தழைத்துச் சில
இந்தைநேர் முகத்தைச் சின்னச்
சிரிப்பைமெய் யெழிலைக் காட்டி

பார்த்தவர் கண்க ளெல்லாம்
விருந்தருந் தியிடப் பண்பு
வாய்த்திட வந்த தம்பா
ளெழுந்தருள் ரதமா வேலை
பூர்த்தியை யடைய வெங்கள்
புண்ணிய மிகுந்த தேவி
சீர்த்திவாய்ந் திட்ட நல்ல
திருவரு ளிவரைக் காக்க.

# இரதோற்சவ தினம்

இலட்சக்கணக்கான மக்கள் கலந்துகொண்ட வெள்ளோட்ட **இணையிலா அருட்காட்சி** வைபவத்தின்பின்னர் இலங்கையிலே எங்கே போனாலும் நயினாதீவு நாகபூஷணி அம்பாளின் கலையழகு மிக்க சித்திரத் தேரைப்பற்றிய பேச்சாகவேயிருந்தது. ஆகவே தேர்த் திருவிழாத் தினத்துக்கு முதல் நாளாகிய புதன்கிழமையன்றே நாட்டின் பல பாகங்களிலுமிருந்து இலட்சக் கணக்கான மக்கள் வந்து குழுமினர். புதன்கிழமை இரவு வெளிவீதி முழுவதிலும் மக்கள் பனையோலைப் பாயினை விரித்துப் படுக்க வேண்டியதாயிற்று. புதன்கிழமையிரவு முழுவதும் மக்கள் நற்பொழுதாகக் கழிக்கும்பொருட்டு அநேக சங்கீதக் கச்சேரிகள் கதாப்பிரசங்கங்கள் முதலியன ஒழுங்குசெய்யப் பெற்றிருந்தன. இக் காலத்திற் கதாப்பிரசங்கஞ் செய்வதில் முதன்மைத்தானம் வகிக்கும் பிரம்மஸ்ரீ **மணி ஐயர்**, ஈழநாட்டின் இணையற்ற சங்கீத ரத்தினம் திரு. **சண்முகரத்தினம்**. ஈழநாட்டுக் கோகிலம் திருமதி **சரஸ்வதி பாக்கியராசா** முதலியோர் இந்த நிகழ்ச்சிகளிற் கலந்துகொண்டனர். எனவே மக்களிடையே பக்திச்சுவை யூட்டும்வகையிற் சங்கீத விற்பன்னர்கள் ஒத்துழைத்து நிகழ்ச்சிகளைத் தயாரித்திருந்தது திருவையாற்றில் ஆண்டுதோறும் நடைபெறும் விழாவை நினைவூட்டியது. யாழ்ப்பாணத்திலே பிரிந்து நிற்கும சங்கீதவிற்பன்னர்கள் கடல் கடந்து சென்று புனித நயினாதீவில் அம்பாளின் சந்நிதியிலாவது ஆண்டுக் கொருமுறை தேர்த் திருவிழாவுக்கு முதல்நாள் இரவு ஒத்துழைப்பார்கள் என எதிர்பார்க்கிறோம். அத்தகைய ஒரு புதிய வழக்கத்தை இந்த ஆண்டில் ஆரம்பித்திருப்பது பாராட்டத்தக்கதொன்றாகும்.

விடியற்காலை நான்கு மணிக்கே மக்கள் விழித்தெழுந்து ஸ்நானஞ் செய்வதற்காக நயினாதீவிலுள்ள கிணறுகளையெல்லாம் முற்றுக்கையிட்டார்கள். வியாழக்கிழமை காலை 5 மணி தொடக்கம் மோட்டார்வள்ளங்களிற் பெருந்தொகை மக்கள் வந்து குவிந்தவண்ணமிருந்தார்கள்.

தேர்த் திருவிழாவுக்காக இந்தியாவிலிருந்து கூடைகூடையாக மலர்கள் விமான மூலம் இறக்குமதி செய்யப்பட்டன. செவ்வந்தி மருக்கொழுந்து முதலிய மலர்களால் அம்பாளுக்கு அலங்காரஞ் செய்யப்பெற்றிருந்தது. அகிலாண்டநாயகிவீற்றிருந்துகாட்சியளிக்கும் புதிய சித்திரத் தேருக்கும் இம் மலர்களாற் செய்யப்பெற்ற அலங்காரம் தேரின் அழகைப் பன்மடங்கு அதிகரித்துவிட்டதென்றே கூறலாம்.

புதிய சித்திரக்கலைத் தேரைக் கண்டு மகிழவும், அத் தேரில் அம்பாள் எழுந்தருளி வீதிவலம்வரும் திருக்கோலத்தைக் கண் குளிரக் கண்டு கைகூப்பித் தலை வணங்கி அம்பாளின் அனுக்கிரகத்தைப் பெற்றுய்யுமாறும் இலட்சக்கணக்கான பக்தர்கள் கூடியிருந்த காட்சியும் அவர்கள் பக்தி பரவசப்படடு 'அரோகரா' கோஷமிட்ட காட்சியும் கண்கொள்ளாக் காட்சியாக விருந்தன.

விசேட பூசைகள் நடந்தேறியபின் அம்பாள் உள்வீதி வலம்வந்து, தேர் முட்டியடியில் நின்ற புதிய சித்திரத்தேரில அமைக்கப்பெற்ற பீடத்தின்மீது கொண்டுவந்து வைக்கப்பட்டதும், பக்தர்கள் தம்மை மறந்து கைகளைத் தலைமேற் கூப்பியவண்ணம் 'அரோகரா! அம்பாளுக்கு அரோகரா' என்று இட்ட ஒலி வானைப்பிளந்தது.

# சித்திரத் தேர் நினைவு மலர்

## ஆசிரியரைக் கௌரவித்தல்

நயினையம்பதியின் சரித்திரத்தையும், நாகபூஷணி அம்மன் ஆலயத்தின் சரித்திரத்தையும், அங்குள்ள அம்பாளின்மீது பக்தர்கள் காலத்துக்குக் காலம் பாடிய அரும் பெரும் பாடல்களையும் அரிதின் முயன்று சேர்த்த தோத்திரப்பாடல் தொகுதியையும், சித்திரத் தேரின் அமைப்பையும் அழகையும் விளக்கும் பகுதியையும் அழகிய படங்களையும் ஒன்றுசேர்த்து நறுமணங் கமழும் மலராக மலரச்செய்தவர் முதலியார் **குல. சபாநாதன்** ஆவர். இம் மலர்ப் பிரதிகளைப் பக்தர்கள் வாங்குவதிற் காட்டிய அன்பும் ஊக்கமுமே இதன் சிறப்பை எடுத்துக் காட்டப் போதிய சான்ருகும். தேர் நிலையத்திலிருந்து புறப்பட முன்னர், தேரின் முன்பாக அம்பாள் வீற்றிருந்து பக்தர்களுக்குக் . காட்சி கொடுக்குஞ் சமயத்தில், மேற்கூறிய மலரினை இரு வாரங்களுக்குள் ஆக்கி வெளியிட்ட முதலியார் **குல. சபாநாதன்** அவர்களுக்குத் தேர்த் திருப்பணிச்சபைத் தலைவரும் வடமாகாண அதிபருமாகிய திரு. **ம. ஸ்ரீகாந்தா** அவர்கள் பட்டுச்சால்வை போர்த்திக் கௌரவித்தார்கள். ''அன்பர்களே! இவ்வழகிய சித்திரத் தேர் ஒரு வருடத்தில் நிறைவேறியது ஓர் அற்புதம். இந்தத் தேரைப்பற்றிப் பல்லாண்டுக் காலம் நினைவூட்டக் கூடிய பக்திச்சுவை நிறைந்த மலரினை இலகுவான நடையில் தக்க ஆதாரங்களுடன் இரண்டு வாரங்களில் முதலியார் குல. சபாநாதன் அவர்கள் நிறைவேற்றியது இன்னுமோர் அற்புதம். இவ்வளவு பெரிய மலரினைத் திருமகள் அழுத்தகமும் விவேகானந்த அழுத்தகமும் ஒருங்கு சேர்ந்து இரண்டு வாரத்துக்குள் அச்சிட்டது இன்னுமோர் அற்புதம். இந்த மலர் இவ்வாண்டில் நயினாதீவிலுள்ள அம்பாளையும் அவள் வீதிவலம் வரும் சித்திரத் தேரினையும் எப்பொழுதும் உங்களுக்கு ஞாபகமூட்டிக்கொண்டிருக்கும் என்பதிற் சந்தேகமில்லை. எனவே இத்தகைய சிறந்த மலரை ஆக்கித்தந்த **முதலியார் குல. சபாநாதன்** அவர்களை அம்பாள் சந்நிதியில் இப் புதிய தேர் வீதிவலம் வரமுன்னர் கௌரவிப்பது எங்கள் கடமையாகும். இந்த மலர் வெளிவருவதற்கு மறைமுகமாக உதவி செய்தவர் முதலியாருடைய மனைவியாராவர். மனைவியார் உதவி ஒத்தாசை செய்யாதிருந்தால் முதலியார் இந்த மலரை இவ்வளவு குறுகிய காலத்தில் எழுதி நிறைவேற்றியிருக்கவே முடியாது. எனவே அம்பாளுடைய தொண்டுகள் நிறைவேறுவதற்கு ஆண்களும் பெண்களும் உதவி செய்திருக்கின்ருர்கள். எங்கள் அன்பைக் காட்டுமுகமாக இந்தப் பட்டுச் சால்வையை அவர்களுக்குப் போர்த்தி, தேர்த் திருப்பணிச் சபையின் சார்பாக நன்றி கூறுகின்றேன். முதலியார் அவர்கள் இத்தகைய பல தொண்டுகள் புரிய அம்பாள் அருள் பாலிப்பாளாக என்று கூறிப் பட்டு வேட்டி சால்வையை முதலியாருக்குப் போர்த்தினுர்கள். அங்கு சமுகமளித்திருந்த வித்துவசிரோமணி சி. கணேசையர் அவர்களும், ஊர்காவற்றுறைப் பிரதிநிதி திரு. வ. அ. கந்தையா அவர்களும் முதலியாரை ஆசீர்வதித்தார்கள்.

இதன் பின்னர் அம்பாள் புதிய சித்திரத் தேரில் வீதிவலம் வந்து பக்தர்களுக்குக் காட்சியளித்தாள். கடும் வெய்யிலையும் பொருட்படுத்தாது ஆலயத்தின் நான்கு வீதிகளிலும் பக்தர்கள் பெருங் கூட்டமாகத் திரண்டு நின்று அம்பாளைத்

தரிசித்தார்கள். தேர் செவ்வனே நான்கு வீதிகளையுஞ் சுற்றி நிலயத்திற்கு வந்து சேர்ந்தது. தேர்த் திருவிழாவைப்பற்றி 'இந்துசாதனப்' பத்திரிகை பின்வருமாறு குறிப்பிட்டுள்ளது.

வியாழக்கிழமை ஆனி 27-ந் திகதி (11-7-57) நயினையம்பதி யளித்த காட்சி ஒப்பு உவமை என்பவற்றுக்கு அப்பாற் பட்டதாயிற்று. பக்தர் கூட்டம் பல்லாயிரக் கணக்கில் திரண்டு சன சமுத்திர மாகவே தோன்றியது. காலை எட்டு மணியளவில் தமக்கென அமைத்த நவமான தேரில் அம்பாள் எழுந்தருளி யிருந்து அருள் வழங்கிய காட்சி அன்பர்கள் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுவதாயிருந்தது. தேரின் சித்திர வேலை இந் நாட்டில் என்றும் அறியாத தென்று எல்லோராலும் மனமார வாயாரப் புகழப் பெறுகின்றது. இந் நாட்டில் மாத்திரமல்ல அகில உலகிலுமே இதற்கொப்பான சிற்பச் சிறப்பைத் தாம் கண்டதில்லை என்று புகழுகின்ருர் அவுஸ்திரேலிய அறிஞர் ஒருவர்.

திருப்பணிச் சபையார் சார்பாக தலைவர் ஸ்ரீ ம. ஸ்ரீகாந்தா அவர்கள் சங்கற்பஞ் செய்தபின் ஏறக்குறைய ஒன்பது மணியளவில் அம்மையார் வீதி வலம் வரத் தொடங்கிப் பன்னிரண்டு மணியளவில் இருப்பிடம் திரும்பினுர்.

நயினையம்பதியின் பல சரித்திரச் சிறப்புக்களுடன் தேரைப்பற்றிய பல விளக்கங்களடங்கிய திருப்பணி மலர் ஒன்றை முதலியார் குல. சபாநாதன் அவர்கள் சபையார் சார்பாக எழுதி உதவினுர். அதன் பிரதிகள் பெருந் தொகை அடியார் மத்தியில் அன்றே பரவிப் பெரும் ஊக்கத்தை ஊட்டுவித்தது.

தேர்த் திருப்பணிக்கு அங்கு திரண்டிருந்த அடியார்கள் பண உதவி செய்தும் மகிழ்ந்தனர். அன்று திரண்டிருந்த அடியார் சமுத்திரத்துக்குச் செவ்வந்தி மருக்கொழுந்து முதலிய மலர்கள் இந்தியாவிலிருந்து வரச் செய்யப்பெற்று வழங்கப்பட்டன என்பதும் குறிப்பிடத் தக்கது.

நிகழ்ச்சிகளெல்லாம் நெஞ்சையள்ளுந் தன்மையனவாய்ச் சரித்திர முக்கியத்துவத்தையே உண்டாக்கியுள்ளன என்பது இன்று எவர் வாயிலும் வரும் புகழுரையாயிற்று.

இந்துசாதனம்
19-7-57

நயினுதீவு ஸ்ரீ நாகபூஷணி அம்மன்கோவில்
தேர்த் திருப்பணிச் சபையினர்

# திரு. குல. சபாநாதன் அவர்கள் இயற்றிய நூல்கள்

1. கதிர்காமம்
2. நவ இலங்கை
3. திருக்கோணமாமலே
4. திருக்கோணமலேத் திருவுருவங்கள்
5. புலநரிச் சிவன்கோயில்கள்
6. முன்னேசுவரம்
7. கொழும்பு பொன்னம்பலவாணேசர் கோயில்
8. புத்திப் பரீட்சை

## பதிப்பித்த நூல்கள்

1. யாழ்ப்பாண வைபவ மாலே—இரண்டாம் பதிப்பு

## 'கதிர்காமம்' என்னும் நூலேப்பற்றி அறிஞர்கள் கருத்துகள்

வண்டுபல மலரிடத்து நறுந்தேனேச் சேர்த்தொன்ருய் வைப்ப தேபோல்
கண்டபல நூல்திரட்டிக் கதிர்காமப் பெயரிட்டுக் கவினத் தந்தான்
தண்டமிழ்நூல் சிவங்கருணு லயபாண்டி யப்புலவன் றன்பாற் கற்ருேன்
எண்டருமாங் கிலநூலு நன்குணர்ந்தோன் முதலியார் எனும்பேர் கொண்டோன்.

முத்திதரும் பெருங்கருணே முருகனிரு சேவடிகள் மூளு முண்மைப்
பத்தியுடன் வழிபடுவோன் அவனடியர்க் கேவல்புரி பண்பில் மிக்கோன்
எத்திசையும் புகழவரு குல.சபா நாதனெனும் இயற்பே ராளன்
இத்தகைய நூல்பலவு மின்னமுந்தந் துலகினிலே யினிது வாழி.

13-10-47 நவாலியூர், க. சோமசுந்தரப் புலவர்

கதிர்காமத்துக்கு ஓர் ஆற்றுப்படையாக இந்நூலே அமைத்துத் தமிழகத்துக்கு அளித்துள்ள ஆராய்ச்சி ஆற்றலுந் தமிழார்வமும் நிரம்பப்பெற்ற திரு. சபாநாதன் அவர்கள் ஈழநாட்டிலுள்ள வேறு புராதன தலங்களேப்பற்றியும் நூல்கள் வெளியிடுவார்களென்று தமிழுலகம் எதிர்பார்க்கிறது.

22-7-47 சு. நடேசபிள்ளே

முருக னடியார்க்குப் பெருவிருந்து. கதிர்காமம் செல்வார்க்கு மதிநிறை விளக்கு. ஆய்வார்க்கு வரலாற்று வாய்மைநூல்.

செந்தமிழ்ச்செல்வி

ஆசிரியரவர்கள் கதிர்காமத்தில் நடக்கும் விழாவையும் இந்நூலேப் படித்தோர்கள் தங் கண்ணுலே நேரே கண்டதுபோல உணருமாறு மெய்ப்பாடு தோன்ற விளக்கியிருப்பது இந்நூற்கோர் சிறப்பாகும்.

வித்துவசிரோமணி, சி. கணேசையர்

திரு. குல. சபாநாதன் அவர்கள் இம்மையிலும் மறுமையிலும் முயன்று செல்லத் தேயத்துக்கு உறுதுணேயாக ஒரு வழியைக் கண்டுபிடித்திருக்கிருர்கள். அஃதாவது இலங்கையின் புராதன சைவாலயங்களின் திவ்ய சரிதங்களே ஆராய்ந்து

எழுதத்தொடங்கியிருக்கிறார்கள். அவர்கள் பொழுது தவப்பொழுது.

பண்டிதமணி, மி. கணபதிப்பிள்ளை
சைவாசிரிய கலாசாலை, திருநெல்வேலி

## பெரியபுராண உரையாசிரியர் கருத்து

இந்நூலின் 35ஆம் பக்கத்தில் கதிர்காம முருகன் திரைமறைவில் வீற்றிருந்து பேரருள் விளக்கம் செய்யும் தன்மைபற்றி எழுதியிருப்பவற்றை மூன்றுமுறை படித்த போதும் எனது கண்களினின்றும் நீர் பெருகக் கண்டேன். ஆயின் உண்மை யன்பர்க்கு எவ்வாறு இனிக்கும் என்பது சொல்லவும் வேண்டுமா?

செக்கவிமணி
திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியார்

இந்நூலை எழுதிய ஆசிரியர் கந்தக் கடவுளின் திருவருள் வெள்ளத்திலே திளைத்தவராய் வசனமெழுதியுள்ளாரென்பது அவ் வாக்கியங்களைப் படிக்கும் நுண்ணறிவுடையோருக்குத் தெற்றெனப் புலப்படும்.

இந்துசாதனம்

8-8-47

கதிர்காமத்தைப்பற்றிய எல்லா விஷயங்களையும் ஒருங்கு திரட்டி எழுதியிருப்பது இந் நூலாசிரியரது முயற்சியையும் உழைப்பையுங் காட்டுகிறது.

மயிலை, சீனி வேங்கடசாமி

## 'யாழ்ப்பாண வைபவமாலை' இரண்டாம் பதிப்பு

புதியமுறை தனிற்சரிதை ஆய்ந்தாய்ந்து தோய்ந்தெழுதப் புகுவார் கட்கும்
நிதியமெனப் பதிந்துமனம் பேணிக்கற் போமென்ன நினைவார் கட்கும்
இதமிகுமற் றிதனையச்சில் உலகுகொளப் பதிப்பித்தே ஏற்றஞ் செய்தார்
மதிபெருகு சரசுவதி நூனிலையத் தார்விழைந்து மனத்துட் கொண்டே. 1

கரும்புபிழி சாறென்கோ சாறட்ட கட்டியென்கோ கடலுள் மாய்ந்த
அரும்பெறன் மணியாரம் கரைகொணர்ந்து மீட்டதென்கோ அமுத மென்கோ
விரும்பியாழ்ப் பாணவை பவமாலை தனையுலகம் மேவச் செய்த
பெரும்புகழ்சேர் குல.சபா நாதன்தன் குறிப்புரையை விளம்பில் மாதோ. 2

க. சு. ந. கி. பாரதி

மாவை. தெல்லிப்பழை 1-11-53

உ

நயினாதீவு ஸ்ரீ நாகபூஷணி அம்மன் கோவில்

தேர்த்திருப்பணிச் சபை மலர்

# பாடல்கள்

# நயினைப் புலவர்கள்

இத்தகைய மகிமை பொங்கும் தலத்தின்மீது பண்டைக் காலத்தில் புலவர் பலர் தோத்திரப்பாடல்களும் பிரபந்தங்களும் இயற்றியிருத்தல் கூடும். அவை யாவும் பேணுவாரின்றி மறைந்து விட்டன. நாகேஸ்வரி அம்பாள் மீது வண்ணை நகர் திரு. அமரசிங்கப் புலவர் அவர்கள் பாடிய 'நயினை ஊஞ்சல்' 1880-ம் ஆண்டு ஆடிமாதம்அச்சிடப்பெற்றுள்ளது. இவருடைய வரலாறு பூரணமாகத் தெரியவில்லை. நயினாதிவுத் தொடர்புடையவரோஎன்பதும் தெரியவில்லை. மிகவும் பிற்காலத்திலிருந்தவரும் அராலியிற் பிறந்து அனலைதீவு, நயினாதீவு, காரம்பன் முதலிய இடங்களில் வசித்தவருமாகிய வரகவி திரு. முத்துக்குமாரப் புலவர் நாகேஸ்வரிமீது ஒரு பதிகம்பாடியுள்ளார். பத்துச் செய்யுளும் விலைமதித்தற்கரிய பத்து வலம்புரிச்சங்கு எனக் கூறலாம். பத்து முத்தெனினும் ஒக்கும். இருபதாம் நூற்றாண்டில் வரகவிப் புலவராக விளங்கிய நயினாதீவு திரு.நாகமணிப் புலவர் அவர்கள் நயினை நீரோட்டயமக வந்தாதி என்ற சிறந்த பிரபந்தத்தையியற்றி, 'கற்றாழைத் தண்டுக்குப் பித்தளைப் பூணிட்டது போல் ஓர் உரையும் வரையத் துணிந்தது கற்றோர்க்கு நகைப்பையே உண்டாக்கும். ஆனால் அறிஞர்கள் என் வழுவுடை நூலைத் தழுவிட லின்றி உலகமாதாவாகிய ஸ்ரீ பரமேஸ்வரியின் திருநாமத்தின்பொருட்டு இதிற் றோன்றுங் குற்றங்களைந்து குணந்தழீஇக் கொள்ளுமாறு பணிவோடு வேண்டுகின்றேன்'' என்று புதியதொரு முறையில் அவைபடக்கம் கூறி அந்நூலில் 1930-ம் ஆண்டு வெளியிட்டார். இந்த வரகவியியற்றிய நயினைமான்மியம் எனும் மதிப்பிடற்கரிய தலபுராணம் இன்னும் அச்சுவாகன மேறாது கையெழுத்துப் பிரதியாக, புலவர் அவர்களுடைய மகன் திரு. பொன்னுத்துரை அவர்களிடம் இருக்கின்றது. புலவர் அவர்களுடைய சகோதரர் தியாகர் என்பவர் மூலமாக 1936-ம் ஆண்டள

வில் சில பாடல்களைக் கேட்டு மகிழ்ந்தேன். அளவிறந்த ஞாபகசக்தியுடைய திரு. தியாகர் அவர்கள் நயினை மான்மியம் முழுவதையும் மனப்பாடம் செய்து வைத்திருந்தார். புலவருடைய தனிப் பாடல்கள் பலவற்றைச் சொல்லிச் சொல்லி மகிழ்வார். புலவர் அவர்கள் செம்மறியாடொன்றுக்குப் பாடிய சரமகவி எவர்மனதையும் ஈர்க்குந் தன்மையது. புலவர் அவர்கள் இயற்றிய "நயினை மான்மியத்தின் சிறப்பினை எடுத்துக்கூற இது ஏற்ற சந்தர்ப்பம் அன்று. 'இந்தக் கலைக்களஞ்சியம் இதுவரை வெளிவரா திருப்பது பொதுவாகச் சைவமக்களுக் கும் சிறப்பாக நயினையம்பதியினருக்கும் ஒரு பெருங்குறை யென்றே வருத்தத் துடன் குறிப்பிட விரும்புகின்றேன். இந் நாலின் கையெழுத்துப் பிரதியை என்னிடம் தந்த புலவர் மகன் பொன்னுத்துரை அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றி உரியதாகுக. அவருக்கு புவனநாயகி நாகேஸ்வரி அம்பாள் பூரண சுகத்தையும் நீடித்த ஆயுளையும் அருளுமாறு அம்மையை வேண்டிக்கொள்கின்றேன். பாரதியடியான் எனப்பாராட்டப் பெற்ற ஆசிரியர் திரு. V. குகசரவணபவன் அவர்கள் 1909ம் ஆண்டிற் பிறந்து தமது 40-ம் வயதில் மறைந்து விட்டார். தட்டுத் தடக்கின்றி கவிபாடும் சக்தி இயல்பாக வுள்ளவர். திரு வே. செல்வநாயகம் அவர்கள் நயினை நாகேஸ்வரி அம்மை பதிகமும், திருவிரட்டை மணிமாலையும் என்னும் பாடலை 1948-ம் ஆண்டில் பாடியுள்ளார்.

இவ்வாறு நயினாதீவிலுள்ள புலவர்களும், அம்பாள் அடைக்கலத்தைக்கம்பெற்ற பிறதேயப் புலவர்களும் நாகேஸ்வரிமீது பக்திச்சுவை நிறைந்த பாமாலைகளைச் சூட்டி மகிழ்ந்தார்கள். அவற்றுட் சில வற்றை மட்டும் தெரிந்தெடுத்துத் தொகுத்து வெளியிடுகின்றோம்.



உ

கணபதி துணை

# நயினை ஊஞ்சல்

## காப்பு

சீர்பூத்த தென்னிலங்கை தன்னின் மேவும்
திரைபூத்த கடனயினை நகரில் வாழும்
ஏர்பூத்த நாகேசு வரியைப் போற்றி
இசைபூத்த செந்தமிழா லூஞ்சல் பாட
ஆர்பூத்த சடைமௌலி யானு ரீன்ற
அருள்பூத்த வறிபிச்சை தொழிலென் றோதும்
கார்பூத்த முபமைமத களிற்றின் பாதம்
கரம்பூத்த மலர்கொண்டே கருதி வாழ்வாம் (1)

பலனோங்கு செம்பவளங் கால்க ளாக
பகர்வைர ரத்தினமே விட்ட மாக
குலனோங்கு வெண்டரளங் கயிற தாக
கூறரிய மாணிக்கம் பலகை யாக
வலனோங்கு மூஞ்சன்மிசை யினிது வைகி
மலர்மகளுங் கலைமகளும் வடந்தொட் டாட்ட
நலனோங்கு திருநயினை நகரில் வாழும்
நாகபர மேஸ்வரியே யாடீ ரூஞ்சல் (2)

உவகையொடு மலரயன்மால் கரங்கள் கூப்ப
ஓசைமணி வாயிலட்ட பாலர் காப்ப
தவமறையோர் தூபமொடு தீபங் காட்ட
தாழ்ந்துகண நாதர்புகழ் மாலை சூட்ட
அவிரிடப துவசமகல் வாணந் தூர்ப்ப
அனந்தன்முத லுரகர்செய செயவென் றார்ப்ப
நவையறுசீர் நயினைநகர் தன்னில் வாழும்
நாகபர மேஸ்வரியே யாடீ ரூஞ்சல் (3)

கொம்பினொடு துடிமுரசு முழவா மோங்க
குடைகளொடா லவட்டம் குழுமி யோங்க
தும்புருநா ரதர்வேத கீதம் பாட
தொண்டரக மகிழ்ந்துசுக வாழ்வு கூட
வம்பவிழு மலர்மாரி யமரர் பெய்ய
வரமுனிவ ரடிபரவி யாசி செய்ய
நம்புமடி யவர்க்கருளி நயினை வாழும்
நாகபர மேஸ்வரியே யாடீ ரூஞ்சல் (4)

அன்னநடை யயிராணி கவிகை தாங்க
அயிலெங்கள் விழியாம்பை களாசி யேந்த
வன்னமுலை யுருவசிவெண் கவரி வீச
மணிகொள்கிரு தாசிசமண் டலங்கைக் கொள்ள
மின்னிடைமே னகைவெள்ளை பாகு நல்க
வியந்துதிலோத் தமைவிசித நடனஞ் செய்ய
நன்னயஞ்சேர் நயினைநகர் தன்னில் வாழும்
நாகபர மேஸ்வரியே யாடி ரூஞ்சல். (5)

மதிமுகமா லினிபனிநீர் வாசந் தூவ
மயிலெங்கள் சுகேசைமல ரடிக ணிவ
விதிமுறைமங் கலைமுதலோ ராலஞ் சுற்ற
வேதியர்தம் மகளிர்சுப வசனஞ் சாற்ற
அதிவினய மொடுசுமனை யாடி காட்ட
அன்பினநிந் திதைசுகந்த வருக்க நீட்ட
நதியுலவு நயினைநகர் தன்னில் வாழும்
நாகபர மேஸ்வரியே யாடி ரூஞ்சல் (6)

கோலமுறு வைரமணிச் சுட்டி யாட
குலவுமெழின் மாணிக்கத் தோடு மாட
வாலியமுத் தாரமொடு மதாணி யாட
வயங்குவளை தொடியுடனங் கதமு மாட
சாலவொளிர் பாடகமுஞ் சிலம்பு மாட
தண்டையொடு பாதசரந் தயங்கி யாட
ஞாலமுக மெனவிளங்கு நயினை வாழும்
நாகபர மேஸ்வரியே யாடி ரூஞ்சல் (7)

முந்துதவ மாதர்துதி கூறி யாட
முகமனொடு புனன்மாதர் முன்னின் றாட
வந்தனையோ டுரகமட மாத ராட
வரையினுறை மாதரடி வணங்கி யாட
கந்தருவ மாதரிசை பாடி யாட
கருதரிய புவிமாதர் களிகொண் டாட
நந்துதவழ் கழனிசெறி நயினை வாழும்
நாகபர மேஸ்வரியே யாடி ரூஞ்சல் (8)

ஆரணியே யம்பிகையே யாடி ரூஞ்சல்
அந்தரியே சௌந்தரியே யாடி ரூஞ்சல்
பூரணியே புங்கவியே யாடி ரூஞ்சல்
புராதனியே புராந்தகியே யாடி ரூஞ்சல்
காரணியே காருணியே யாடி ரூஞ்சல்
கன்னிகையே கண்மணியே யாடி ரூஞ்சல்
நாரணியே நாயகியே யாடி ரூஞ்சல்
நாகபர மேஸ்வரியே யாடி ரூஞ்சல் 9)

பனிவரையில் வருமுமைமையே பரையே போற்றி
பகருமற மெண்ணுன்கும் வளர்த்தாய் போற்றி
தனிமுதலாம் பரமனிடத் தவளே போற்றி
தணப்பில்பல சக்திவடி வானுப் போற்றி
இனிமைமிகு மாரமுதே கனியே போற்றி
எவ்வுயிர்க்குந் தாயாகி இருந்தாய் போற்றி
நனிகுலவு நயினைநகர் தன்னில் வாழும்
நாகபர மேஸ்வரியே யாடீ ரூஞ்சல் (10)

ஆவாழி யந்தணரோ டரசர் வாழி
அரியதவ மகரிகமா கமமும் வாழி
தாவில்குல மங்கையர்கள் கற்பும் வாழி
சைவசமய முமறமும் தழைத்து வாழி
பாவார்வெண் ணீறுபஞ்சாட் சரமும் வாழி
பாடியலூஞ் சற்றமிழும் பாரில் வாழி
நாவலர்கள் புகழ்நயினை நகரும் வாழி
நாகபர மேஸ்வரியும் வாழி வாழி. (11)

**—ஸ்ரீலஸ்ரீ ம. அமரசிங்கப் புலவர்**

---

## இக்காலத்தில் பாடப்படும் பாடல்

சீர்வாழி சிவசமயம் வாழி
தேவாதி தேவுமெல்லாத் தேவும் வாழி
பார்வாழி மதிதோறும் மாரி வாழி
பசுக்குலம்வே தியர்தருமம் பலவும் வாழி
நீர்வாழி நயினைநக ருறைவோர் வாழி
நீடாயு ளன்னசொர்ணம் நிறைந்து வாழி
ஏர்வாழி இராமசந்திர மகிபன் வாழி
இனம்வாழி இவ்வூஞ்சல் வாழி மாதோ.

# திருவருட்பா

## கலித்துறை

அரவ மருச்சனைக் கேமலர் கொய்துகொண் டங்கடையப்
பாவுங் கருடன் வழிமறிக் கப்பயந் தேயப்பணி
யுராமுஞேர் கல்லினிற் சுற்றி யுடுக்கை யுறப்புத்தரும்
புரமிது வாம்நயி ஞர்தீவில் வாழ்நாக பூஷணியே.

பேசிடுங் குட்டங் கயரோக மீளா பெரும்பிளவை
வீசிடு சன்னியொ டேதோஷங் காய்ச்சல் விடாதகுன்மம்
மாசுறுஞ் சினன்முத் தம்மைகோ தாரியும் மாற்றிவைப்பாய்
பூசுரர் வாழ்நயி ஞர்தீவில் வாழ்நாக பூஷணியே.

## தேவாரம் பண்—யாழ்மூரி

முல்லைமுகை முறுவல்—முழுமாமதி சேரும் முகய - மொழிகுயில் - அயில்
விழி—மொய்க்குங் கார்மேகக் குழல்
சொல்லுதடு பவளம்—நுதல் தோன்றுமிள வெண்பிறை - துணைக்குழையூஞ்
சற்கிலை கூட்டு புருவந்தனு
வெல்லுங் கரங்காந்தள் முலை—வெற்பும் மருப்பெனலாம் - வெறுமிடைமின்
எற்கொடிமேனு முடுக்கை தரும்
நல்ல பதங்கமலம் நயினர் தீவில் வாழுகின்ற நங்கைசிவன் பங்கிலுறை—
நன்னுகை பூஷணிக்கே.

## தாண்டகம்

ஆத்தானை யாதியந்த மில்லாதானை யகிலமொடு சரமனைத்து ளெங்கும்
பூத்தானை யருமறையின் பொருளினுளைப் பொருப்பரையன் புத்திரி யாய்ப்பூ
காத்தானை மாதுளம்பூ நிறத்தினளைக் கடல்புடைசூழ் தருநயினர் தீவிலின்பஞ்
சேர்த்தானை யடியார்க் கருளுவாளைத் திருநாக பூஷணியைத் தரிசிப்போமே.

## பண்

ஆனந்தரு மன்புந்தரும்பெரு—ஞானந்தான்றரும் நல்வழியுந்தரும்
வானந்தார் நயினர்தீவில்வாழ் நாகம்— பூனம் பாவிகை பொன்னடி நீழலே

சித்தியுந்தரும் தெய்விகமுந்தரும்—புத்தியுந்தரும் பொன்னுலகுந்தரும்
முத்தியுந்தரும் மொய்நயினர் தீவில்—பத்திசேர் நாகபூஷணி பாதமே.

நான்மறைக் கிளத்தி ஞானியருளத்தி நல்வரந்தரும் பதாம்புயத்தி
தேன்மலர்ச்சடைச்சி செப்புசிற்றிடைச்சி வருக்கருள் தருங்கொடைச்சி
மோனமாங்குலத்தி முத்தகைப்படைச்சி மொழிநயினர் தீவில்வாழு
மானமன் கரத்தியாவ நாகபூஷணியா மம்மையார்க்கன் பாவோமே.

பிறவாமனு மிறவாமனும் பெருமாட்டி யுன்பதத்தை
மறவாமனு மெனக்கோர்வரம் வாங்கும்படி வந்தேன்
புறவாழிசூழ் நயினார்தீவிற் பூங்கோயிலி னுறையும்
நிறநாக பூஷணியேயிது நின்மேற் பொறுப்பாமே.

## திருவாசகம்

அன்பைப் பெருக்கினெ தாருயிரைக் காக்கவந்த
வின்பக் கடலே யெழில்நாக பூஷணியே
முன்பக்கு வர்க்கருளு மூர்த்தமதைக் காட்டாயோ
யுன்பட்சமே நயினார் தீவினுறை யுமையே.

நாளுந் தொலைய நரைதிரை மூப்பும் வளைய
நீளும் பிறப்பும் இறப்பும் நீடுகவர
வீளும் படிக்கோ விடுத்தாய் விடவேண்டாஞ்
சூழுங்கடல் நயினார் தீவினுறை சுந்தரமே.

அருள்வடி வமுள்ளநீ யைம்பூத நிரையும்நீ யாதித்த சந்திரனும்நீ
யிருண்மல மறுக்கின்ற வெழில்ஞான வொளியும்நீ யிகபரந்தருபவளுநீ
மருளறு மனத்தினுறை மாசிலா மணியுநீ வருமருட் சத்திநீயே
திருவளரு கின்றநயி னார்தீவி னுறைகின்ற தேவியே சுகவாரியே.

பத்திநீ சிவனிடப்பாகிநீ திரிலோக மும்படைத் தாளுவாள்நீ
சித்திநீ கரிமுகத் தெந்தையைத் தந்தநீ சேந்தனைப் பெற்றவளுநீ
முத்தி முத்திக்குவித்தான மூர்த்திநீ முழுதுக்கும் முதல்விநீயே
யத்திசூழ் கின்றநயி னார்தீவி னுறைகின்ற வரவ பூஷணியம்மையே.

## திருவிசைப்பா

முத்துவடங்க ளசையப் பிலாக்கொடு மூக்குத்தி தானிலங்கக்
கொத்து வளையல் குலுங்கப் பதக்கக் குருமணி தானெறிக்கத்
தத்துந் திரைக்கடல் சூழ்நயி னார்தீவிற் றற்பரையாள் பேரில்
மெத்துந் திருவிசைப் பாவோதி நாமெல்லாம் வேண்டுதல் செய்குவாமே.

ஞானவிளக்கு நமஸ்காரஞ் செய்வோர்க்கு நன்மைதரும் விளக்கு
வானவிளக்கு மறலிசெய் தீங்கெல்லாம் மாற்றிவைக்கும் விளக்கு
மோனவிளக்கு முதுநயினார் தீவில் முன்னரவம் பூண்டிங்
கானவிளக்குக் கருளிசைப்பா வோதியஞ்சலி செய்குவாமே.

## திருப்பல்லாண்டு

உடலது குழைய வென்புநெக் குருக வூற்றெடுத் திருகணீர் சொரியப்
படபடென்றே நெஞ்சம் பதைப்புறவே பாடிடுமடியருக் கருளத்
தொடுகடல் புடைசூழ்ந் தலைகரை புரளுந் தொல்நயினார் தீவிலுறையும்
படவரவணியும் பார்ப்பதியார்க்கே பல்லாண்டு கூறிடுவாமே.

கங்கைவார் சடைச்சி கானமான் கரத்தி கதிர்முழு மதிநிகர் முகத்தி
பங்கயப் பதத்தி பரமனார்க் கிடத்தி படர்மின்னற் கொடி நிகரிடைச்சி
பொங்கு நன்னயினார் தீவிலுறைந்தே புவிதனிலுறை பவர்க்கருளுந்
துங்க நன்னாகம் பூண்ட சுந்தரிக்கே தொகுத்த பல்லாண் டிசைப்பாமே.

## புராணம்

புத்தியில்லைப் பொருட் சுவை தானில்லைச்
சித்தியில்லை தெரிந்தது மொன்றில்லைப்
பத்தியில்லை யெனக்குப் படப டணிச்
சத்திநீ நயினார் தீவிற் றுயாரே.

அய்யுந் தொடர வறிவழிய வாவிவிட்டு
மெய்யுங் குலைய விடவோ விதிவசமே
பையஞ்சுடைய படநாகம் பூண்டவளே
செய்யுந் தவமறியேன் திருநயினார் தீவுமையே.

## மங்களம்

ஆதி நித்தியானந்திக்கு மங்களம் — எங்களரிய நாக பூஷணிக்கு மங்களம்
நீதில் நயினார் தீவுறை சேயிழைக்கு மங்களம் — சேந்தவனைப் பெற்றவளுக்கு மங்களம்

பத்தி முத்தி சித்தி தரும பார்பதிக்கு மங்களம — பன்னக பூஷணிக்கு மங்களம்
அத்தி சூழ் நயினார் தீவி லபிராமிக்கு மங்களம் — அரனிடத் தமர்வாளுக்கு மங்களம்

கந்தமா முகனைப் பெற்ற சங்கரிக்கு மங்களந் - தாவு நாகபூஷணிக்கு மங்களம்
வந்து நயினார் தீவுறை மங்கலிக்கு மங்களம் — வாகைச் சூல கரத்தாட்கு மங்களம்

என்றுமுள்ள விஸ்பரிக்கு மங்களம் — எங்கள் இறை நாக பூஷணிக்கு மங்களம்
வென்றி நயினார் தீவிலுறை மெல்லியர்க்கு மங்களம் — விண்ணும் மண்ணுமானவட்கு மங்களம்

முத்தன் வீர பத்திரன் றுய்க்கு மங்களம் — எங்கள் மூல நாகபூஷணிக்கு மங்களம
ஒத்த நயினார் தீவுறை தீங்கனிக்கு மங்களம் — தேடுதற்கரியவட்கு மங்களம்

## கும்மி

அத்தி சூழுமிலங்கா புரி தன்னிலமர் நயினார் தீவிலாலயத்தி — லமரும் பரமுறு
மெம்பரைய வம் புனையுஞ்சுந்தர வம்மைக்குக் கும்மியடி மனமே — யந்த
வற்புதப் பாதம் பிடிமனமே.

புத்திர பாக்கிய முந்தரு மெல்லாப் பொருளுந் தருஞ்சுக போகந் தரும் — பொங்கு மருளெங்கும் புகழ் தங்கும்நயி னுர்தீவிற் பூவைக்குக் கும்மியடி மனமே நாகபூஷணித் தாய் மேற்படி மனமே.

கல்வியறிவுந் தருஞ்ஞான மார்க்கமுங் காட்டிததருந் நல்ல காலந்தருங் — கதிதரு மொருபெரு மருமைப் பதிவரு நயினுர்தீவிற் கவுரிக்குக் கும்மியடி மனமே கங்காளிக் கடிமை புரி மனமே.

பொல்லா வினைகளைப் போக்கி ரட்சித்திடும் புண்ணியம் மேலிடப் பண்ணியே வைத்திடும் — பொன்னுர் மதில் மன்னுர் திரு முன்னேர் நயினுர் தீவிற் — பொருளுக்குக் கும்மியடி மனமே! — அந்தப் பூங்கோயில் முன்னுய் நடி மனமே.

சாகவரந்தரு மேசதா காலமுஞ் சாலோகமாதிகளை நிரையாய்த் தருஞ் — சத்தொடு சித்தானந்தத தற்பரை நயினுர் தீவிற் ருயார்க்குக் கும்மியடி மனமே! அதைச் சாதித்து நன்ருய்ப் பிடி மனமே!

மண்ணும் பெண்ணும் பொன்னுமே வரச்செய்திடும் மற்றதின் போகங்கள மாருமறச் செய்திடும் — மறைமுடிவது மினுமறியா மரகத நயினுர் தீவில் மங்கைக்குக் கும்மியடி மனமே — இது மாதவமென்று துடி மனமே!

மாதாப் பிதாக்குரு தெய்வமுமாய் வரும் மனதுக்குத் தக்க வரிசைகளுந் தரும் மந்திர மணி யவுடதமுந் தந்திடு நயினுர்தீவில் மாதுக்குக் கும்மியடி மனமே அந்த மார்க்கத்தை நாளும் பிடி மனமே.

இந்தப் பிரபஞ்ச வாழ்வை மெய்யென் றெண்ணி யிங்கலைந்த தினிப் போதும போதும் போதும் — இனிமே லொரு மனமாய் நின்றெமையாள் நயினுர் தீவி குளைக்குக் கும்மியடி மனமே! — இதையெப்போது மெண்ணித் துடி மனமே

காலத்தை வீணுகப் போககி வந்தாய் கலி காலக் கொடுமையைக் காட்டி வந்தாய் கண்மணிபோலே யுறையுந் தண்ணளி நயினுர்தீவிற் காட்சிக்குக் கும்மியடி மனமே — அதைக் கண்டோடித் தேடிப் பிடி மனமே!

வாழ்த்தித் துதித்து மலர் கொண்டருச்சனை மாருமற் செய்து வந்தாலுனக்கே மங்கல வாழ்விந்திர போகந்தரு நயினுர் தீவில் வாழ்க்கைக்குக் கும்மியடி மனமே அதை மறவாமற் கண்டு பிடி மனமே.

---

# நயினை யாத்திரை விளக்கம்

**விருத்தம்**

திருவருள் சுரந்திந் நாளிற் றேசத்தோர் தம்மைக் காக்கு
மருமைசேர் நயினார் தீவி லரவபூ ஷணிபா தத்தை
யுரிமையோ டிறைஞ்சி வாழ்த்தி யுய்ந்திட மனத்திலெண்ணிக்
குருவரு ளாலே யாத்திரை செய்திடக் குறிப்புற்றேனே.

**கண்ணிகள்**

மங்கள நயினார்திவில் — வாழும் — மாதா நாகபூஷணி தன் மலர்ப்பதத்தை — யிங்கென்மனத் தருத்தினேன் — எனக் கேற்றயாத்திரைக்கு நல்லவரந் தாவென்றேன்.

நல்லவரம் பெற்று மகிழ்ந்தேன் — வெளிப்பட்டு — நானும் வந்த வழியிற் சாந்தயர்மடத்திற் — சொல்லும் பிள்ளையாரைத் தொழுதேன் — அந்தத் தும்பிமுகன் பாதஞ்சிரஞ் சூடிக் கொண்டேன்.

ஆறுமுக நாவலர்முன் — னமைத்திட்ட — வருட் சைவப்பிரகாச வித்தியாசாலையில் — கூறுமலங் காரமுங் கண்டேன் — வயிரவக் — கோலச்சாமியைக் கும்பிட்டுக் — குறை தீரென்றேன்.

வணங்கி யெழுந்து நடந்து — வண்ணை — வாழும் வயித்தீஸ்வரனை வாழ்த்திக் கும்பிட்டேன் — இணங்குந் தையல் நாயகியாம் — என்னை — யீன் றெடுத்தமாதா பாத மிறைஞ்சிக் கொண்டேன்.

தந்த வரம்பெற்றுத் திரும்பிக் — கதிரேச — சாமிநாதன் கோயிலொன்றைத்தான் றரிசித்தேன் — எந்தவரமுங் கொடுத்தார் — அய்யனை — யேத்திக் கொண்டு கடைத் தெருவாலே நடந்தேன்.

கடையிற் பிள்ளையார் கோயிலை — நானுங் — கண்டு மனங் களித்துக் கும்பிட்டுக் கொண்டேன் — தடையில்லா வரங் கொடுத்தார் — அந்தத் — தந்தி முகன் றந்த வரந்தான் பெற்றுக் கொண்டேன்.

பெரிய கடையைக் கண்டேன் — நல்ல — பீடுறும் யாபாரங்கள் விற்பனவுங் கண்டேன் — தெரிய நடந்து சென்றேன் — அந்தச் — சித்திரஞ் சேர்முத்த வெளிச் சிறப்புங் கண்டேன்.

கோட்டையலங் காரமுங் கண்டேன் — முனியப்பர் — கோயில் முன்னாய் நின்றி நகை கூப்பித் தொழுதேன் — நீட்டுவரந்தான் கொடுத்தார் — வாங்கிக்கொண்டு நேரே யலுப்பாந்திக்கரிக் கோப்புக்கு வந்தேன்.

வத்தை யொன்றிலே யேறினேன் — பாய் தூக்கி — வரும்போது காக்கைதீவு வந்தது கண்டேன் — மெத்து மிடுக்காறையுங் கண்டேன் — அராலித்துறை விட்டு விருட்டி முனையும் மேவக் கண்டேன்.

ஊர்காவற்றையில் வந்தேன் — ஆங்கதி — லூற்றிருந்தே யூர்வளப்ப முள்ளதைக் கேட்டேன் — பேர் கரம்பன் நாரந்தனை — வேலணை — பேசு மல்லப்பிட்டி மண்கும்பா னுண்டென்முர்

கேட்டறிந்து போகும் வழியில் — பெருங்கடல்—கோட்டையைக் கண்டேனதைக் கேள்விப்பட்டேன் — காட்டு மெழுவை தீவை — யப்பால் — கண்டேனனல தீவு தன்னையுங் கொண்டேன்.

பருத்தித் தீவையுங் கண்டேன் — அங்கே — படுத்தவேமாற்றுப் பிரிவையுங் கண்டேன் திருத்த நயினர்தீவுங் — கண்ணுக்குத் — தெரிந்தது கண்டு கொண்டு செல்லும்போது.

பாம்பு சுற்றிய கல்லும் — அதை யுண்ணப் — பார்த்திருந்த கருடன் விற்றிருந்த கல்லுங் — தேம்புந் திரைவந்தடிக்க — நன்ருய்த் — தெரிந்து கொண்டேனதை யறிந்து கொண்டேன்.

வந்து கரை சேர்ந்தவுடனே — நயினர்தீவில் வத்தையை விட்டிறங்கினேன் மனம் பூரித்தேன் — முந்து நாகபூஷணி வாழும் — ஆலயத்தை—முழுச் சந்தோஷமாய்க் கண்டு முன் வணங்கினேன்.

சுற்றுமதிற் சிறப்பைக் கண்டேன் — அதிலுள்ள — சுந்தரத்தை யென்னென்று நான் தொகுத்துச் சொல்வேன் — பற்று கோபுரத்தையுங் கண்டேன் — சித்திரத்தைப் — பார்த்தெப்படி வாயாற் சொல்லிப் பாடித் துதிப்பேன்.

கொடித்தம்பத் தழகுங் கண்டேன் — அன்னதுதான் கொண்ட கோலமென்னென்று நான் கும்பிட்டுச் சொல்வேன் — தடித்தபலி பீடங் கண்டேன் — அன்னதின் — சாடையை நானென்னென்றுதான் சரியாய்ச் சொல்வேன்.

நந்திகுந்து பாவனை கண்டேன் — அதின் பெருமை நானெப்படி யின்னதென்று நாவினுற் சொல்வேன் — முத்து வசந்த மண்டபத்தை நானும் முழுதுங் கண்டேனதைத் தொழுதுங் கொண்டேன்.

மகா மண்டபத்தைக் கண்டேன் — அப்பால் — வாய்த்த வத்த மண்டபத்தை மகிழ்வாய்க் கண்டேன் — புகாதே நெற்பக் கிரகத்தைக் — கண்டு —பூசித்துக் கொண்டேன் மிக நேசித்துக்கொண்டேன்.

மூலத்தானத் தழகுங் கண்டேன் — அந்த — மூர்த்திகரத்தை யென்னென்று முழுதுஞ் சொல்வேன் — கோல நாகபூஷணித் தாயார் — நன்மைகள் — கூட்டி வைக்க வந்துகுடி கொண்டருளினர்.

அபய வரதச் சிறப்பும் — கருணைசேர் — அருட்கண் படைத்த நெடுங் கடைக் கண் பார்வையும் — உபய பாதத்தினழகும் — பாடகம் — உற்ற தண்டை கொலுசு சிலம்பழகும்.

பத்து விரல் மோதிரமும் — நல்ல — பருத்த வொட்டியாணத்தின் பளபளப்பும் — முத்துமூக் குத்தியினழகும் — நேராம் — மோகனகமாலை பிலாக்குற்றவழகும்.

கங்கணங்கள் கம்மலழகும் — காதணி — காப்பும் வளையலணிந்த காட்சியழகும் பொங்கு மங்கலியத் தழகும்—நல்ல—பொற் பட்டாடை யழகத்தின் பொலிவழகும்.

கண்டேன் கண்டதிசயித்தேன் — என்னைக் காப்பாற்றிக்கொள் தாயேயென்று காலில் விழுந்தேன் — கொண்டேன் பரவசமாய் — மெய்யாய்க் — குதுகலித்தே னின்று கூத்தாடினேன்.

தந்திமுக மைந்தனோர் புறம் — கந்தசாமிநாத பாலனுமோர் சார்புறவே — வந்து தாயிருந்த கோலத்தை — நானும் — வாயாற் சொல்ல என்று லொருக்காலும் வாராதே.

விழாத் தெரிசனமுங் கண்டேன் — அந்த — வீதியில் ரதமிழுக்கும் வேடிக்கை கண்டேன் — எழாத்திர்த்த வரிசை கண்டேன் — என்னை ஈடேற்றிவை தாயே யென்றே யிறைஞ்சி நின்றேன்.

பெற்ற தாய் போலென் முன்னே வந்து — கனவினில் பேரருள் செய்தென்னைப் பார்த்துப் பிள்ளைக டேர்த்தே — மறவேன் றுக்கும் பயப்படாதே யெல்லாம்—மனம் போல் வருமென் றொருவாக் குரைத்தாள்.

திருவாக்குக் கெதிர்வாக் குண்டோ — என்றன் — தீவினைக டீர்த்திங் கென்னைச் சீர்திருத்தினள் — குருவாக்குமிது போலாக்கும் — இந்தக் குறிப்பறிந்த பேரெல் லாங் குணமாவாரே.

உற்ற நயினார் தீவிலே — ஆலயத்திற் கொருமறை புறங் கடற்கரை யோரத் திலே — பற்றி யுற்றெழுந்ததொர் தீர்த்தம் — புதிதாய்ப் — பாய்குதே யதைப் பார்த்தோர் சொன்னரே.

தீர்த்த விசேஷமு மிதுதான் — இனிமேல் — தேடி வாருங்க ளென்றே தெரிவிக் கின்றனே — தீர்த்திகர மிதைப்போலுண்டோ — இனிமேல் — முத்தி விளங்கு மிதுவே முதலாகுமே.

மங்களம் மங்களம் மங்களம் — என்றைக்கும் மாதா நாகபூஷணிக்கு மாமங்களம் தங்கு நயினார்தீவில் வாழும் — எம்மைப் பெற்ற தாயாருக்கு மங்களம் மங்களமே

# நயினுதீவு நாகேஸ்வரியம்மை பதிகம்

சந்திரபூ ரணரத்ன தங்ககோ டக்கிரிட
தண்ணின்ற தவழ வட்டத்
தனபதியை நிகர்மன்ன ரடிதொழச்சதுரங்க
தானைவெள் ளங்கள் சூழச்
சிந்துரப் பகைமைபிடர் பீடிகை யிருந்தெண்டி
சாமுகமு மேயி றைஞசத்
தேவேந்திர சுகமுற் றிருப்பவர்க ளுன்பாத
சேவைபுரி பவர்க ளன்றோ
மந்திர காரண ரூபரு பாதிசிவ
மகமாயி புவன நேசி
வாலசுந் தரிகௌரி நயினைமா நகர்க்கண்
வைகியருள் செய்யு மொருதாய்
நந்துறு கரன்பிரம னங்கமணி கங்களொடு
நஞ்சணி பிறங்கு களமே
நாகமணி யும்பரமர் பாகமுறு மேகசிவ
நாக ஈஸ்வரி யம்மைமயே. 1

சோடுற்ற நவரத்ன கும்பியும் மேலிட்ட
தொங்கலும் அகில ளாவிச்
சொருகிட்ட கொண்டையுஞ் சுட்டியும் மலர்
[க்கையால்
தொட்டிட்ட சிந்தூ ரமும்
தோடுற்ற கொந்தழக மரகதக் கொப்புமார்
துணைவிழியி லெழுது மையும்
துகளற்ற வெண்டரள முருகுநற் பவளவா
துவருமொளிர் நளின முகமும் [ய்த்
தேடுற்ற செங்கமல பொறபதமு மழகான
திருவுநவு மறிவி ஞலே
தெரிசிக்க வருடந்து நீடாயு ளும்பெருஞ்
செல்வ முந்தர வேண்டுநீ
நாடுற்ற பலவளமு முறையுமெழில் நயினு
நகர்க்கண் மருவுங் கௌரியே
நாகமணி யும்பரமர் பாகமுறு மேகசிவ
நாக ஈஸ்வரி யம்மையே 2

ஆரணத் துபநிடத வக்கரத் தொனியாகி
யாகாய வட்ட மாகி
அறுகோண மிருகோண முக்கோண நாற்
மாகிநிற மைந்து மாகி [கோண
காரணத் துருவாகி யருவாகி யாவுமாய்க்
காக்குமுன் பெருமை யெளிதோ
கருணைப்பிர வாகமா மானந்த வெள்ளங்
கசிந்தூ றுபே ராழியே
ஏரணைத் திடுமருத வேலிசூழ் நயினு
வெனும்பதி சிறந்து மேவும்
யாமள சௌந்தரீ கோமள சொரூபியே
ராசபர மேசு வரியே
நாரணற்கொரு சகோதரியென்ன வந்தருளும்
நாக பூஷணி பூரணீஇ
நாகமணி யும்பரமர் பாகமுறு மேகசிவ
நாக ஈஸ்வரி யம்மையே. 3

சத்திபை ரவிகௌரி அக்கணியு முக்கணீ
சடாதரி சடாட்ச ரத்தி
சங்கரி சுமங்கலி மதங்கியரு ளம்பிகை
சவுந்தரி சண்ட சண்டி
உத்தமி பராபரை மனேன்மணி சிவானந்தி
யுமையிமைய முதவு மங்கை
உலகுதவு மன்னையா மளைபொன்னினம்ப
ருடனிட மகிழ்ந்து மேவும் [லவ
நித்தியகல் யாணிசாம் பவிபுவன கௌமாரி
நிமலமக மாயி யென்றே
நெஞ்சில்நித முந்நினைவு தந்துனை வணங்
நின்னடி யவர்க் கருளுவாய் [கவரு
நத்துலவு சுத்தமணி யெய்துநயி ணுநகரில்
நாளுமுறை யாழின் மொழியே
நாகமணி யும்பரமர் பாகமுறு மேகசிவ
நாக ஈஸ்வரி யமமையே. 4

ஆகமது கூனித் தளர்ந்துரோ மம்வெளுத்
தைம்புல ஞெடுங்கி மேலாம்
அறிவழிந் தைமே லெழுந்தநீ தத்தினுயி
ரணுகுமக் காலே தனிலே
வேகவெங் கடமைபிடர் நெரியவரு மனெற்கு
விடுகயிறு முடுகி யடுமுன்
வினையேனை யஞ்சலென் றுனது நா யகரு
வெள்ளை விடைமீ தேறியே [டன்
பாகமுற வந்துநின் றடிமைகொண் டெனையு
பாதுகாத் தருள வேண்டும் [ம் நீ
பைங்குலைத் தெங்கிளஞ் சோலைசெறி நயி
[னை நகர்
பண்பு கொண்டுறை செல்வியே
நாகமடர் தாருவென மேவிமுனிவோர்களு றை
நாடிவரு கோப விடமார்
நாகமணி யும்பரமர் பாகமுறு மேகசிவ
நாக ஈஸ்வரி யம்மையே, 5

மாற்றிற் சிறந்தபொற் குவையென்ன வளர்
வயலிற் கிடந்த நத்தம் [சாலி
மடையிற் றவழ்ந்தேறி மனையிற் புகுந்துழவர்
மனைமுன்றி லினு முத்தை
ஆற்றிற் சிறந்திடத் தண்டுலங் களையுநீர்
அள்ளிப் புறத்தின் மேவி
அருகுற்ற சோலையினு மிகுதுற்ற வாவியினு
மரவிந்த வோடைக ளினும்
காற்றிற் சிறந்துலவு கால்கொண் டுலாவக்
கயற்கண்ணி வந்து மோதக்
கமுகினிற் றெங்கினிற் கதலியில் வருக்கை
கனியு மடலுஞ் சிதறியே [யிற்
நாற்றிற்கு மேகமழ மதுமாரி சொரியுநயி
னுநகரி னண்ணு முமையே
நாகமணி யும்பரமர் பாகமுறு மேகசிவ
நாக ஈஸ்வரி யம்மையே. 6

வன்கய மருப்பென நிமிர்ந்தடி பருத்திறுகி
மணிவா ரறுத்து விம்மி
வட்டமிட் டெழுகும்ப முலைமுகங் காட்டியிரு
மகர விழிவலை வீசியே
மின்கய மதன்சாலுள் விட்டடைத் துளபெரு
வெறுங்கையைப் பற்றி பேறகும்
வேசியர் தனக்கடிமை செய்விக்கு மென்னை
வினைநூறி யருளு தவுவாய் [முன்
பொங்கிடு நெடுந்திரைப் புணரிநாற் றிசையும்
பொருந்தநடு மேவி யுலகிற்
புகழ்பெருகு நயினைமா நகரினி லிருந்துமிகு
புதுமைதரு புனித தாயே
நன்கிய விளம்பிறைபொ டொன்றைவேண் [டிச்சடில
நண்பு கொண்டிடு நஞ்சுமார்
நாகமணி யும்பரமர் பாகமுறு மேகசிவ
நாக ஈஸ்வரி யம்மையே 7

சம்புசிவ சங்கர திகம்பர நடம்புரி
சமர்த்தாதி யாதி யாய
தற்பர மதிச்சடில முக்குண சதுர்ப்புய
சதாசிவ சிவாசி வாய
எம்பரம வென்றுபதி னெண்கணமு மிம்பரு
மிறைஞ்சிவரு கணவ ருடனே
இங்கித முடன்கயிலை தங்கியுறை யம்பிகைபி
னின்புக ழியம்ப வெளிதோ
அம்புய மடந்தைய ரரம்பையர் வயந்தமுவு
மரியநவ சத்தி களெலா
மன்பினெடு தொண்டுசெயு முந்தனர விந்த [பத
மந்தநிழல் தந்த ருளுவாய்
நம்பிவரு தொண்டர்பெற மங்கல மிகுந்தநயி
னுநகரி னண்ணு முமையே
நாகமணி யும்பரமர் பாகமுறு மேகசிவ
நாக ஈஸ்வரி யம்மையே. 8

கந்தான சொரியச் சினக்கும் கடாதடக்
கைமலை முகத்த வுணனைக்
கால்கொண் டுதைத்துவன் றேலுரித் துப் [போர்த்த
காத லனைமன் றுடியே
முந்தாத ரத்தினெடு மிருநாழி நெற்பெற்று
முடிவிலா துயிர்க ளுய்ய
முப்பத் திரண்டறந் தன்னையுத வியவன்னை
மூவுலகு நீயா கையால்
சிந்தா குலங்கொண்டு திரியநான் முறையோ
தினந்தி னம்சொல வேண்டுமோ
திருவுள மிரங்கியே சற்றுன் கடைக்கண்
திருப்பி னுல்வெகு பாரமோ
நந்தாத வரமுதவு நங்கையே நயினு
நகர்க்கண் மருவும் கௌரியே
நாகமணி யும்பரமர் பாகமுறு மேகசிவ
நாக ஈஸ்வரி யம்மையே. 9

சீர்தங்கு தண்சுனை யெனச்சேர் மனத்திற்
றிளைத்துக் குழைத் தரும்பும்
செஞ்சரண கஞ்சமலர் தஞ்சமெனு மென்பு [ன்
சிரக்கஞ்ச மீதில் வைத்தே
ஏர்தங்கு நல்லருட் பேறுதவி நெஞ்சத்
திடுக்கண் தவிர்த்து அஞ்சேல்
என்றுமுன் நின்றெமக் கீடேற்ற முதவுவார்
யாருன்னை யின்றி யம்மா
பேர்தங்கு மகிலாண்ட டுக்குமதி லூறுபொருட்
பிரிவுஞ் சராச ரமெனும்
பேருயிர்க ளுந்தந்து பாதுகாத் தருளுமுன்
பெருமையாம் பாட வெளிதோ
நார்தங்கு சற்குணத்தொண்டருயவென்றுநயி
னுநகரி னண்ணு முமையே
நாகமணி யும்பரமர் பாகமுறு மேகசிவ
நாக ஈஸ்வரி யம்மையே. 10

# ஸ்ரீ நாகபூஷணி அந்தாதி மாலை

கற்பகக் கன்றைக் கடம்பனைத் தந்த கனகவரை
அற்புத மோன வருணைக் தாங்கு மமிர்தவல்லி
தற்பரன் வாமந் தழைத்தே சகல உயிர்களுக்கும்
நற்பதி யேயெனைப் பெற்ற சதானந்த நாகம்மையே. 1

பெற்றதாய் பார்க்கப் பிள்ளைதான் வருந்திப் பிறப்பெனுஞ் சாகரத்தாழ
நற்றவமில்லா வென்னைநீ விட்டால் நியாயமோ நல்லுரையாகச்
சொற்றவக் கரையி லேறியானுய்யத் துணையுநீ யேயன்றி யாருளர்சொல்
கற்றவர்க் கினியாய் நயினையம் பதிவாழ் கண்மணி நாகபூஷணியே. 2

கற்றவர்க் கினியாய் நயினையம் பதிவாழ் காரணி நாரணன் றங்காய்
மற்றவ ரறியா மரகத வரையின் வாமமே வளர்பசுங் கொடியே
நற்றவ ரோடு சேயெனை இருத்தி நாதநா தாந்தமுங் காட்டி
முற்றுமாய் நிறைந்த பூரணா னந்த முத்திதா நாகபூஷணியே 3

முத்தியாங்கரையைப் பற்றியேயுய்யும் முன்னதாய் முரணலைமோதி
வற்றிடா மாயவாரிதி வத்தி மயங்கியா னழுந்திடாவாறு
சத்தியாய்ச் சிவமாய்த் தனிப்பரந்தானே தானுமாய் நின்ற தற்பரையே
சித்தெலாம் வல்லாய் சேயெனைக் காத்தாள் திருமணி நாகபூஷணியே 4

காத்தெனை யாளுங் கனகமா வரையே கமலையுங் காயையும மருங்கே
நீத்தவ ரமரர் கருடர் கந்திருவர் நின்பணி புரி வரன்னே
வேர்த்தவ ராய்நின் றுயிர்த்திர ளாட்டு வினையெலாம் பற்றிநீறாகப்
பார்த்தருள் விழியைப் பாப்புதி யீன்ற பார்ப்பதி நாகபூஷணியே. 5

திருப்பெருந்திரு முத்துக்குமாரசுவாமி அவர்கள்

# நயினை நிரோட்டயமக அந்தாதி

அலரி யனந்தங் கயனு யிரங்கண ளாலழிந்
தலரி யனந்தங் கயனையந் தாடனை யங்கத்தினெள்
ளலரி யனந்தங் கயஞ்சேர் நயினையி லன்னையென்றேற்
றலரி யனந்தங் கயிலையிட் டேத்திடி னஞ்சலினறே.

அஞ்சக் கரந்தி கழையிடத் தாயட லானையிடர்க்
கஞ்சக் கரந்திரித் தாரிலை யானென தந்தியநே
ரஞ்சக் கரந்தைய தாநின்ற காலையி லந்தகனு
ரஞ்சக் கரந்திட லின்று னயினையி லாரணியே.

ஆரந் தரிக்கத் தரியா ரிலைகிள்ளி அர்ச்சனைக்கிந்
தாரந் தரிக்கத் தலையார்கங் காளியென் றஞ்சலிசெய்
யாரந் தரிக்கத் தனிசேர் நயினை யடைந்திடற்கென்
னாரந் தரிக்க நடக்கின்ற காலையி னற்றிடர்க்கே.

வரகவி, க. நாகமணிப் புலவர்

# நயினை மான்மியம்

## கடவுள் வணக்கம்

### பராசக்தி

வாலறிவோ ருணாமுத மத்தியிற்கற் பகஞ்சூழ்ந்த மணித்தீ பத்தின்
ஏலுறுநற் கடம்பமர்கொல் லையிற்சிந்தா மணிப்பீடத் திருந்த தோற்ற
மாலறுமெய் யடியவர்கண் டின்புறுவா னயினைதனின் மணிப்பீ டத்தில்
ஒலிடுகற் பனைகடந்தே யமர்நாக பூடணியென் னுளத்த ளாமால்.

### மாணிக்கவாசக சுவாமி

எரியேறுங் திருநுதற்கண் ணிறையேறும் பசுநிறுவி யிலங்கு வேதப்
பரியேறும் தொழில்படைத்துப் பகையேறு மீனவன்றன் பதிக ளெல்லாம்
நரியேறுங் தொனிபரப்பி நதியேறும் சடைதனிலோர் நங்கைக் காமன்
பரியேறும் படிவமுறக் கிடைத்தமணி வாசகர்தம் பொற்றுள் போற்றி.

### அவையடக்கம்

எண்ணெ முத்தியல் யாப்பிலக்கணங்
கண்ணா கத்தினுங் கண்டறி யேனிவட்
பண்ணு மிக்கவி பார்த்திடு மேலையோர்
திண்ண மிக்கண் செய்வர்நற் சிந்தையால்.

## ஈழமண்டலச் சருக்கம்

கேட்போர்தஞ் செவியரித்துப் பெரிதாக்கிக் கிலேசத்தால்
ஆட்போய வுளம்பிணித்தே யறிவூட்டு மமுதன்ன
சேட்போய வருணகிரி திருப்புகழ் மாலையினேத்துங்
காட்போய வேலனிருங் கதிரையுமுற் றுளதீழம்

## ஸ்தல விசேடச் சருக்கம்

குலந்திகழ் வுறுமேழ் வரைகளும் மருங்கிற் குலவுற
நாப்பணெவ் வுயிருங்
கலந்திடு முமையோர் பங்கர் விற்றிருக்கும் கயிலைமால்
வரையது கடுப்ப
வலந்தரு மனலை யெழுவையே காரை மண்டை
வேலணையொடு புன்கை
பொலந்தரு நெடுவாஞ் சத்த தீவங்கள் புடையுறப்
பொலிவது நயினை.

பவக்கடற் கிடைவிழ்ந் தலமருவோரைப் பாதுகாத்
தின்பமே பயக்கும்
சிவத்திடைப் படரும் பச்சிளங் கொடிதன்
திருப்பதத்துணை மலரெனவே
உவப்புறத் தனைச்சூ மூழிமேல் நாவாயொழி
தாமறலி நோயுற்றுத்
தவிப்பவர் யாகைக் குறுபுணைமா னத்தந்
குமரந யிணையாந் தலமே.

## வேளாளர் வருணனை

வித்தினிற் பயிர்செய்த வித்தவை வளர்த்துபவிளை
வினையறிந்துபின் னெழித்தும்
இத்தொழில் மூன்றெவ் வொருவரும் புரிந்தேயில்ல
யென்றுரைப்பவை நிரப்பி
மெத்திய நாவாய் வயினெலாம நிரப்பிவிண்ணை
வாராமென வாழ்வார்
முத்தொழில் புரியும் மூவரோ ஈழத்துழவரோ
முறையினுன் முதியோர்.

# மூர்த்தி விசேடச் சருக்கம்

எழுதருமறையுங் கடந்த நாயகி நன்றிருந்தருள் செய்யுமத்தலத்திற்
பழுதறுஞ்சைவ தந்திரமுறையாற் பத்தியோடவ ளடிபரசி
யழுதகண்ணொடு மெய்யரும்ப நாத்தழும்ப வகங்குழைந்தென் பெலாமுருகத்
தொழுதகையொடு நின்றனுதினம் போற்றுந் தொண்டர்தம் பெருமையார்சொ
[ல்வார்.

ஈர்த்த வேளருங்கைச் சிலையலர் கூம்ப
ஈன்றிடுங் கருப்பைகள் கூம்பப்
போர்த்ததீ நிரையக் குழிகள்வாய் கூம்பப்
புறச்சமயா ஈந்தகங் கூம்ப
மூர்த்த மாயிருந்த கௌவுரி யாலயத்து
முன்புநின் றன்பொடு தலைமேற்
கூர்த்த நீடுரக் கைஇவைய ஞுதுயர்த்
திக்கூப்புவார் கைகளே கைகள்.

பெற்றதாலன்னை பெறுமுயிரனைத்தும் பேணலாலன்னை பெற்றிடுவோர்
உற்றதாலன்னை விரும்பிய வனைத்து முதவலாலன்னை யெக்கலையுஞ்
சொற்றதாலன்னை யுலகொடுவாணுந் தொழுதலாலன்னை யென்றென்னும்
பற்றதாங் கருணை பொழிதலாலன்னை பராபரை நாகபூடணியால்.

வரகவி, க. நாகமணிப் புலவர்

## நாகைத் திருவிரட்டை மணிமாலை

அர்மேனின் செய்கையென்றா ரெதையெதை யாங்கிரந்தார்
தம்மா லுதவுசில் காணிக்கைக் கேதலை சாய்த்ததுபோல்
இம்மானுடருக் குதவியவ் வூழை யிகழுகின்றாய்
விம்மா வுழலொரு வேற்கோநா கம்மே விதிவலியே.

விதிவலியை வெல்லுதற்கு வேறுமருந் துண்டோ
நிதமுஞ் சிவத்தையுட்கொ ளிங்கு—மதுவெனவெம்
மூதாளர் கூறுகின்றார் முகனுக்கு நாகமமே
ஏதமறுத் தப்பெருவாழ் வி.

வேலணையூர், ம. தப்புவாத்தியார்

## திருநாகதீபப் பதிகம்

பாரிலே தென்பூமி பாலிக்க வந்தநீ பாராமுகஞ் செய்வ துண்டேற்
பற்றெங் களுக்கியார் பெற்றதாய் தந்தைநீ பரமகுரு நீதெய்வநீ
ஊரிலே நட்டாரு முறவுநீ யாபத்தி லோம்பவரு முபகாரிநீ
உனையன்றி வேறெனக் குறுதியிலை யூழா ரொறுக்கப் பொறுக்க கில்லேன்

சீரிலே கெட்டவென் பேரிலே நேரிலே தேவிநீ யருளவாவா
செய்பிழை யனைத்தையுங் கைபிழை யெனக்கொண்டு செம்மையா நோக்கருளவா
சாரிலே யோகினியை யாதியோர்பணி செயுந்தையலே யானுய்யவே,
சரணநா கேசுவரியே தயாநிதியே சகம்போற்றுபெரு மாட்டியே.

கண்கண்ட தெய்வநீயென் றுலகெலாமுதவு காணிக்கையாம் பணிகளாற்
கண்மறைப்புண்டதோ வெம்பணியினர் பணக்கவிப்பான் மறைந்ததுண்டோ
எண்கொண்ட பக்தரிடுவில்தசக சிரமெலாமெதிரின் மலைபோக்குவிதலா
லெட்டியும்பார்க்க முடியாமையாய் விட்டதோவிறு மாப்புவந்ததுண்டோ

பண்கொண்டகித வொலியாற்செவிடு மானதோபாவை யொலிமேலிட்டதோ
பாவியேன் படுதுயரமும் வேண்டுகோளு முன்பால்வெறுப்பாக்கியனவோ
தண்கொண்ட முத்தமணிகங்கரீ யென்னிடைச்சற்றுநோக் கருளுகில்லாய்
சரணநா கேசுவரியே தயாநிதியேசகம் போற்றுபெருமாட்டியே.

அரதனப்பன்மையின் மாற்றுயர்பசும் பொன்னினலிமுடியு மழகொழுக்கும்
அரியபொற்சுட் டியும்பிறையுமொவ் வாதநுதலணியு மணிமூக்குத்தியும்
இருபரிதியென்ன வொளிர்கம்மலுங் தோள்களினிலங்கு சாம்புனதவளையும்
இணையுமுன் கைகளிற்கக்கணமு மணிவிரலிலங்கு மரியாழிவகையும்

பரிதிமுத லாவெண்ணு கோளெலா நாளெலாம் படிமுறையி னண்ணு மதுபோற்
பளபளப் புறுமதா ணிகளு மேகலையு மொண்பட்டுடையு மொட்டியாணமும்
சரியுஞ்சதங்கையும் பாடகமு மிளிர வருடாவருங் காலமிதுகாண்
சரணநா கேசுவரியே தயாநிதியேசகம் போற்றுபெருமாட்டியே.

வேலணையூர், ம. தம்பு வாத்தியாயர்

## நயினை நாகாம்பிகை பதிகம்

நாலுகடல் சூழுலக நடுவீற் றிருக்குமுனை
நாடிவரு முயிர்வகை யெலாம்
நாடுமலை காடுதிட லாமிவை நடந்தூர்தி
நண்ணியும் ஈற தான
ஆறுகடல் கண்டயரும் வேளைதனில் நாவாய்
அளித்தன்பு மீதூர்த லான்
அலைக்கரம் பலகொண் டணைத்தணைத் திடுமியல்பு
அன்னையுன் பெருமை சொலுமால்
மாலுறு மனத்தினேன் எனதுநா வாய்கொண்டு
மாயப்பிர பஞ்ச மென்னும்
மைக்கடல் கடந்துனது மலரடிக் கரைசேர
மந்திரித் தாவலித் தேன்
நாலுமறை போலொலிசெய் ஆழிநடு வாழுமுன்
நடுநிலைமை யாருணரு வார்
நாகாம்பி கேநயினை யோகாம்பி கேபரம
நாதாந்த மோன வடிவே.

எண்ணரிய சூரியரி னிடையில்ஒரு முழுமதியம்
இருகண்முகிலி னூடெழுவ போல்
இருகுழலி னடுவிலகு திருமுகமும் மாகதத்
தியல்கொடியின் வடிவ வுருவும்
தண்ணென்ற மென்வசன கிஞ்சுகப் பவளவாய்த்
தாளநகை யிளமுறுவலும்
தடையிலாக் கருணையிரு கரைபுரளு விழிகளும்
தழதழென ஒளிர் திலகமும்
பண்புலவு மடியருரை யுண்ணிலவலாற் குழைப்
பரிசுபெறு மிரு செவிகளும்
பாதமுறு மாதவர்கள் பாடுமிரு பாதமெனப்
பாடுறு புரமலார் களும்
கண்ணுசேய் அணிகடம் புணருமிள நாசியும்
களினகர முங்காண்ப னே
நாகாம்பி கேநயினை யோகாம்பி கேபரம
நாதாந்த மோன வடிவே.

முப்பத்தி ரண்டறத் தலைவியாய் உலகுக்கு
மூலமாய் மூல முதலாய்
முதன்மைபெறு மிமோராஜ குலபுத்ரியாய் என்றும்
மூப்பறு மிளங் குமரியாய்
செப்பற்கு மருவன்மை சேர்பரா சத்தியாய்த்
திகழ்ச்சியா மளரூபி யாய்ச்
செகமெலா மழியவரு காலமுந் தனைவிடாத்
தேவியா குவையாகை யால்
எப்பற்று மற்றவன் கைப்பற்றி யென்றென்று
மின்பமே தன துருவ மாய்
இடக்கையில் வலக்கையாய் வைத்திருப் பதுமுனது
இன்றியமை யாமை யன்றோ
நப்பற்று மற்றவிங் நாக்குதவு நெறியொன்றுன்
நல்லறத் தில்லையோ சொல்
நாகாம் பிகைநயினை யோகாம்பி கேபரம
நாதாந்த மோன வடிவே.

ஆசிரியர், வ. கு. சரவணபவன்

# தோத்திரத் திரட்டு

மங்கல மணம்பரவு மலர்தலைக் காலைபோல்
மணமாய விருள்போக்குவாய்
மாசிலாத் தென்றல்போல் வந்தெனது சோர்வினை
மாற்றிமன வீறுதருவாய்
பொங்குதிரை ஆழிபோல் என்னுள்ளம் பூரிக்கப்
பொதுவேத முரசொலிப்பாய்
புண்பட்ட நெஞ்சிலே வெண்பட்டு நிலவெனப்
போந்துசாந் தம்அளிப்பாய்
செங்கதிர் ஞாயிறென வேயெனது சித்தமிசை
திவ்யஞா னம்பொழிகுவாய்
சிங்கமென வீரமும் திருமூலர் யோகமும்
திருக்குறளின் வாழ்வுமஅருளாய்
துங்கமிகு நயினையில் தங்கியே புவனந்
தனைக் காத்து அருள்அன்னையே
சதாசிவ மனோன்மணி சிதாகாச ஓம்சுத்த
சத்தியே போற்றி போற்றி.

# பிரார்த்தனைப் பாடல்

உலக நாயகி உத்தமி நாயகி
இலகு சக்தி இறைவி மனோன்மணி
நலிவு தீர்த்து நலந்தரும் அம்மையே
பொலிவுறச்செய் புதுயுக வாழ்க்கையே.

தேகச் சட்டை அணிந்திடும் சிவனின்
சோக நாடகந் தீர்த்து சுகோதய
யோக சித்தி யுடன்பெறச் செய்தருள்
நாக பூஷணி நல்ல பரா சக்தி.

ஏக சக்தி இன்ப வரந்தரும்
யோக சக்தி உயிர்க்குயி ராகிய
போக சக்தி புனித பராசக்தி
நாக பூஷணி நாரணி அம்மையே.

வீழ்க தீய வினைக்குலம் யாவையும்
சூழ்க தூய சமரசச் சோதியே
வாழ்க மன்னுயிர் வானருள் பாலிப்பாய்
ஊழ் கடந்தொளிர் ஓம்சுத்த சத்தியே.

சுவாமி சுத்தானந்த பாரதியார்

# நயினாதீவு நாகராசேஸ்வரி பதிகம்

தந்தனமெ னிடைநடைத் தையலர்த னம்பூமி
தம்மாசை யால் மயங்கித்
தலைவியே யுன்னையுள மதனிலொரு கணமளவு
தானும்மெய் யன்பி னோடு
வந்தன முனாற்றிடாத் தீயனென் றீய
மலமாயை கன்மங் களாய
வலியதொடர் பற்றுநின் னன்புறறு மெய்யாய
வாழ்வு பெறநல் வரந்தா
பந்தன மகன்றமெய்ஞ் ஞானனு பவரிதய
பதுமத் திருக்கு முமையே
பன்னிரு கரங்கண்க ளறுமுகங் கொண்டகுக
பாலற் பயந்த தாயே
நந்தன வனப்பசுங் கிளிகளுமு னமத்தை
நவில்கின்ற நயினை மேவும்
நாகவணி யாகமணி யேகவிறை பாகமுறை
நாகரா சேசு வரியே.

நித்தியமு முன்னையென் னிதயங் நினைந்துருகி
நேயமுற் றிடவு மிருக
ணீர்வழித ரத்தரிச னஞ்செய்து வைகவுந்
நினதுதிரு நாமமதையே
துத்தியஞ் செய்திடவு மெனதுநா கைகளுன்
றெண்டினை யியற்றி நின்னைத்
தொழவுமிரு கால்களுன் றிருவால யத்தைவல
மாகவே சுற்றி வரவு

முத்தம மிருந்ததலை யுன்னவனைங் கவுமருளை
யுதவுபர மேசு வரியே
யோதுமறை நான்கிற்கு மெண்ணான் கறங்கட்கு
மொருமுதல்வி யாகு முமையே
நத்துதவு முத்தினந் தத்தலைத ரக்கரையை
நண்ணவொளி துன் வுநயினை
நாகவணி யாகமணி யேகவிறை பாகமுறை
நாகரா சேசு வரியே.

கால்வா யெனக்கண்ணி னீர்வழிந் தோடவுள
மானதுக னன்று பற்றுங்
கனல்மெழுக தென்னநெக் குருகமெய் யன்புடன்
கனாயினின் றழுத குழவி
பால்வாய தாகவே பரவபர ஞானப்
பயோதரந் தந்த தூய
பாலோடு ஞானத் தையுங்கூட்டி யூட்டிநற்
பதவிபெற வைத்த தாயே
சேல்நேய மாயிலகு திரிநேத் திரத்தியே
தேவியே யாவி நிகரென்
றெய்வமே யைவந்து நாவெழா தேவிழிற்
றிருவருள் புரிந்து காத்தாள்
நால்வாயி னானைத் தைங்கரன தன்னையே
நயினைநகர் மேவு மின்னே
நாகவணி யாகமணி யேகவிறை பாகமுறை
நாகரா சேசு வரியே.

பொங்கிருந் திட்டதிரு வானுமா லயமெனப்
புந்திகொண் டகிலமுற்ற
பூரணா னந்தியே யாரணா கமமெலாம்
புகல்கின்ற வேகவஸ்தே
செந்திரு முதற்றேவர் மகளிர்முனி பன்னியர்கள்
சேவையொடு வாழ்ந்தெடுக்குந்
தேவியே பாவியே னாவியின தாவியே
திருவருள்செய் சிந்தினைகள்
வந்திருங் கரைமோது மோசைகாற் றோடுநீர்
மாறு பெதிர்த்திடன்று
வலிகொண் டடித்துப் பெருக்கெடுத் திடுமார்ப்பை
மானவலை தள்ளவந்து
நந்திருங் கமுகேறி நொந்தின்ற முத்திநொளி
நண்ணிமிளிர் நயினைமேவு
நாகவணி யாகமணி யேகவிறை பா+முறை
நாகரா சேசுவரியே.

# நாகராசேஸ்வரி திருவிரட்டை மணிமாலை

### நேரிசை வெண்பா

தெய்விகமே யன்பருளச் சீர்க்கோயில் வாள்விளக்கே
பொய்தவிர்ந்த மெய்ஞ்ஞானப் பூரணமே — செய்சிறந்த
நல்லநயி னைப்பதியில் நாகரா சேஸ்வரியே
யல்லலெனை நீக்கி யருள்.

### கட்டளைக் கலித்துறை

அருமருந் தொத்துயிர்க் கானந்த மீந்திடு மம்பிகையே
தெருமரு நல்ல வறிவிலி யாகிய தீயனுக்கு
மொருமருந் தீந்து னடிமலர்க் கன்புளத் தோங்கவருள்
திருவரு மிந்த நயினையில் மேவிய சீரொளியே.

### நேரிசை வெண்பா

அடையேனுன் சந்நிதியை யன்புசெயே னுன்னைக்
கடையேன்பா லோலைவரக் கண்டால் — விடையோன்பால்
வந்தமின்னே யென்னசொல்ல வல்லேன் நயினைநகர்ச்
ச்ந்தவனே நிற்கே சரண்.

### கட்டளைக் கலித்துறை

சரணஞ் சரண மெனவுனைச் சார்ந்திலன் றுரணிமேற்
கரணமுன் செல்ல வதன்பினர்ச் செல்லுங் கதியிலிக்கும்
மரணம் பவமற் றிருக்கவும் நாள்வந்து வாய்த்திடுமோ
அரணஞ் சிறந்த நயினையில் வாழரு ளம்பிகையே.

கவிமணி, வே. செல்வநாயகம்

# சக்தி மாலை

தீராத பிணியால் வருந்துய ருணர்ந்துமது
திருவடி தியான முறவே
தீதகல வந்தவரை நாகபாம் புருவோடு
திருநா மமுணர் வூட்டியே
தாராத சுகமெலாந் தந்துத மண்மையைத்
தந்துாட் சித்த தாயே
தானமொடு தவமுமெய் திடத்தக்க ஞானமும்
தத்துவத் தகவுணர் வையுங்

காரான காருன்றி வருசித்த மழையெனக்
கவலைதீர் கருணை யாளுப்
காதல்கொண் டடியார் கருத்திற் கிசைந்தூநற்
கருமங்கள் செய்திர் எனவும்
போதூ இறைவனரு ளேயிருந் தடியரைப்
பேட்டிகண் டசம கிழ்ர்தம்
பிரியாத பதியோ டிருந்தூநயி னைப்பதி
பிறந்த பூஷணி யம்மையே.

இகபர மிரண்டினிலு முயிருருவ மொடுகருணை
ஈந்துமே நயினை மருவும்
இறைவியே இன்னிசையி லிருசெவியு மமுதூற
இறைவனது நாம முணர்வோர்
அகமருவி அவர்களுக் கண்ணியனு பூதியாய்
அவனிதனி லஞ்ச லென்று
அனுதினமு முமதுபூ சனைசெய்த நாகத்தை
அன்னவர் கள்முன் நிலையிலே
சுகபர வுருத்தோடு சுயநினைவு கொண்டுமது
தூயதிரு வருளி னாடச்
சோதியன தியல்பான சங்குசக் கரவடிவு
தோற்றி நின்பணி செய்பவுஞ்
சசமுளதொல் வினைதீர உன்னடி வரச்செய்த
சத்தியே இறைவ னருகில்
சரிசமம தாயிருந் தடியர்குறை தீர்த்திட்ட
தகைமை யுளநா கம்மையே.

சக்திமாலை, திரு. இ. ஐயாத்துரை

---

# நயினை நாயகி தோத்திரம்

## காப்பு

ஐங்கரத் தானைமுகத் தம்பிகை தன் சேய்மலரைப்
பங்கமற நெஞ்சே பகர்.

மலருறை மகளிர் இருவரு முனது
மலரடி வருடிநின் றேத்தப்
பலருநின் அடியார் அலர்கொடு பரவப்
பண்புறு சிவநடம் புரியும்
பிலமுறை நாகக் குலமுறை பெரிய
பீடுயர் கோயிலை நோக்கிப்
பலமுறை அன்னாய்! எனநவின் றழுதேன்
பார்த்தருள் நயினை நாயகியே.

தாயினை யெண்ணி யிடுக்கணுற் றழுத
தனையனை யணைத்தமு தூட்டி
ஆயிணை மலரு மருளினை யென்றால்
அடியனை மறப்பது மறமோ?
பாயிருந் திரைகள் பாறையில் மோத
பரந்தெழுந் திவலைகள் தன்னைப்
பாயின முத்தெனப் பலப்பல தேவர்
படர்தரு நயினை நாயகியே.

கண்கனீர் மல்கிக் கரைபுரண் டோடக்
கருத்தழிந் தம்மவோ வென்றே
எண்ணரு மழலின் இழுதென னையும்
ஏழையே னுய்யுநா ளுளதோ
தன்கதிர்க் கற்றை கோயிலிற் றவழத்
தவஞ்செயும் இமைபமென் றயிர்த்து
விண்ணவர் இழியப் பொன்னகர் நாண
விளங்குறு நயினை நாயகியே.

மின்னவர் சடையோன் தன்னொரு பாலில்
வீற்றிருந் தருளுநின் கோலம்
நின்னருள் ஒளியால் பலவிருள் நீங்கி
நிலமிசைக் காணுநா ளுளதோ?
துன்னருந் தூமகே துவென் றயிர்க்கத்
தொடர்ச்சியாய் மீதெழு கயல்கள்
மண்ணுநின் விழியின் வடிவுகண் டலையில்
மறைந்தொழி நயினைநா யகியே.

செத்திலேன் செல்வப் பொருளிலேன் அறிஞர்
செகமெலாம் சிறந்ததென் றோதும்
முத்தியீ கல்வி ஞானமு மில்லா
மூடனே னுய்யுநா ளுளதோ?
முத்தினை யீனும் வலம்புரி முழக்கு
முராரி சங்கினை வென்று
பத்திசெய் அடியார் பாவொடு பயிலும்
பழம்பதி நயினைநா யகியே.

செக்குறு மெள்ளின் இடருறு வேனைச்
சென்னமோ டிறப்பெனு நீரின்
மொக்குளேய் தீய வாழ்வதைக் கெடுத்து
முத்தியை யீயுநா ளுளதோ?
துக்கமேய் பிறவிப் பெருங்கடல் நீந்தத்
துணைசெயு நின்பத மென்னத்
தோக்குறு பொருளாய்க் தோபமும் [திமிலும்
சூழ்தரு நயினைநாயகியே.

சிறியனேன்வறுமை தீர்த்தருள் அன்னைப்
செல்வமும் கல்வியு மீந்தே
அறிபவே முப்பா னீரறம் வளர்த்தா
ரன்னைநீ யன்றிமற் றெவரே
மறிதரு திரைக்கை யெறிதரு முத்தை
மாகடற் சிறாரினம் வாரிச்
செறிதரு வண்டல் அபர்ந்தவர் சிறிச்
சிதைத்தெறி நயினைநா யகியே.

தாய்தனைச் சேயும் சேய்தனைத் தாயும்
தாணியில் வெறுத்தவ ரிலதால்
ஆய்மல ரணிந்த அன்னை நீ வெறுத்தால்
அறிவிலே னுய்புநா ளுளதோ?
வாய்மையே யறியாப் புல்லறி வினரும்
வருவரேற் கோயிலை வலமாய்ச்
சாய்தரா முத்தி தவத்தவர் பெறும்
தந்தருள் நயினைநா யகியே.

செயற்கரும் பத்தி செய்தவர்க் கல்லால்
சிவனெனக் கருளிடா னென்று
கயற்கணி யுன்றன் கருணைபெற் றுய்வான்
கடையனேன் உன்பதி அடைந்தேன்

முயற்கறை மதியின் அமுதபொற் கலசம்
முன்னுள தெம்முடைத் தென்று
மயற்படு தேவர்க் களித்திடத் தெங்கு
வளர்தரு நயினைநா யகியே.

தினமணி யுன்றன் தண்ணொளு நும் செய்ய
திறன்விளை கரத்தினு லென்றன்
மனவிருள் அகற்றி யிதையமாங் கமலம்
மலர்த்திநீ ஞானமட் டருவே
வனமதிற் சென்று சருகுநீ ருண்டு
வருந்தியே முயன்றவ ரடையாத்
தனம்பெற வாரீர் எனக்குயில் கூவும்
தரையுறை நயினைநா யகியே.

வித்துவான், வை. சி. வைத்தியலிங்கம்

# தோத்திரப் பாமாலை

அந்தமில் கோடாகோடி ஆதித்த ருதித்த தென்னச்
சிந்தூரத் திலதந்திட்டு திருமுக நகையாரம்மை
வந்தனை புரியமன்பர் வாழவக் துதித்தாள் நாகை
சிந்தனை புரிந்தே உய்யச் செகத்துளோர் சேரவாரும்.

எழில் திகழ் இலங்கா தேவி எடுப்பள்கை யாழ்ப்பாணத்தை
கிழிபல பொங்கு நாகைக் கிழத்திபூ ஷணியை யெண்ணி
வழிபடற்குரிய தாயார் மாபுகழ் வண்ணச் சிந்தை
பொழி சுதி பண்களார்ப்பப் பொலன் கையாழ் வருடுவாளே.

திரு. தி. செல்லையாபிள்ளை அவர்கள்

## நயினை நாகபூஷணியின் திருவோலக்கக் காட்சியும் அவள் மாட்சியும்

நித்திலத்தி லாரமணிந் தித்தலத்தில் வீற்றிருக்கும் நிமலாதேவி
கொத்தலரும் கூந்தலுளாள் குடிபுரக்கும் குணமுடையாள் குற்றமாற்றி
முத்திபெனுந் தலத்தினிற்குத் தத்தவர மளித்தருள்வாள் முன்னோர்தேவி
எத்திசையும் புகழ்பரப்பி யிறுமார்ந்து நின்றிடுவாள் எங்கள்மாதா.

அணிப் பொன்முத்தெனுமம் மாலைசூட்டி யருகினிலே
பேணிப்பபந்தன் புத்திரரோ டிந்தப் பெண்ணரசை
மாணிக்கரத்தினம் வைத்தே யிழைத்திட்ட வாகனத்திற்
காணிற்கவலை கலந்தோ டிடும்பல காதங்களே.

நயினை திரு. ஆ. இராமுப்பிள்ளை

உ

நயினாதீவு ஸ்ரீ நாகபூஷணி அம்மன் கோவில்

# புதுத் தேர்

சித்திர விளக்கம்

நயினாதீவு ஸ்ரீ நாகபூஷணி அம்மன் கோவில் முன்புறத் தோற்றம்



நாகபூஷணி அம்மன்



நாகபூஷணி அம்மன் (வேறு முகூர்த்தம்)



விநாயகப் பெருமான்



நாக கன்னிகையும் மூலைக் குதிரையும்



விஸ்வேசுவரர்



சரவணப் பொய்கையில் சண்முகப் பெருமான் உத்பவம்



மீனாட்சியம்மை திருக்கல்யாணம்

குபேர சக்தி (அஷ்டதிக்குப் பாலக சக்திகளில் ஒன்று)



பூதகி சம்காரம்



தேவி, சுப்பிரமணியருக்குச் சக்திவேல் கொடுத்தல்



ஆதி இலட்சுமி



நவமணி சக்திகள் உற்சவம் (தேவிபராக்கிரமம்)



நவநாரி குஞ்சரம்



தக்ஷிணாமூர்த்தி



கஜ இலட்சுமி



திருவானைக்காவில் யானை, சிலந்தி பூசிப்பது



எமசக்தி



வீர இலட்சுமி



வாயுசக்தி



ஆபுத்திரன் அக்ஷய பாத்திரத்தைக் கோமுகிப் பொய்கையில் இடுதல்



தர்ப்பணம் (அஷ்டமங்களம்)



கஜகௌரி

ஆபுத்திரன் சரித்திரம்



மஹிஷாசுரமர்த்தநி



அர்ச்சுனன் நாக கன்னிகையைத் திருமணஞ் செய்தல்

காசி விசாலாக்ஷி அம்பாள் அன்னபூரணி திருக்கோலம்



வீராசாமிச் செட்டியாருக்கு அம்பாள் நாகமாகத் தோற்றமளித்தல்



போர்த்துக்கீசர் பவளத்தேர், செப்புத் தேரைக் கண்ணுற்றல்



தானிய இலட்சுமி



மைனாகமலை அனுமாருக்கு அனுக்கிரகித்தது



யாகத்திற்கு வெட்டுவதற்காக வைத்திருந்த பசுவின்மீது ஆபுத்திரன் கருணைகொள்ளல்



ஆபுத்திரன் அக்ஷய பாத்திரத்துடன் மணிபல்லவம் வருதல்



பல்லவ அரசன் பீலிவளையைக் காந்தர்வ விவாகஞ் செய்தல்
*(ஆபுத்திரன் சரித்திரம்)*



குழந்தையின் கழுத்திற் தொண்டைமாலையைக் கண்டு
தன் குழந்தையென்றறிந்து சோழமன்னன் குழந்தைக்கு முடிசூட்டுதல்



உமாதேவியார் திருஞானசம்பந்தருக்கு
ஞானப்பால் ஊட்டுதல்



சிவபாதவிருதயர் ஞானசம்பந்தரை நோக்கிப்
பாலூட்டியவர் யாரென வினவ,
சம்பந்தர் திருவிரலினுல் அம்மையப்பரைக் காட்டுதல்



கைலாய வாகனத்தில் அம்பாள் விற்றிருக்கும் காட்சி



போர்த்துக்கீசர் நாகபூஷணி அம்பாள் ஆலயத்தை இடித்தல்



நாகபாம்பு புளியந்தீவிற் பூக்கொய்தல்



ஒல்லாந்தர் நாகபூஷணி அம்பாள் ஆலயத்தை இடித்த பொழுது, அங்கிருந்த அம்பாள் விக்கிரகத்தை ஆலமரப் பொந்தில் வைத்தல்



மணலினால் அமைத்துப் பூசித்த சிவலிங்கம் கம்பா நதியின் பிரவாகத்தினுற் கரைந்துவிடுமோவென அஞ்சி உமாதேவியார் சிவலிங்கத்தைக் கட்டியணைத்தல்


















(1), (3), (6), (7), (8) தேரின் பல இடங்களிலும் காட்சி தரும் சிற்பங்களுட் சில.
(2), (4), (5) சிற்ப வேலைகள் நடைபெறுங் காட்சிகள்.

















(1), (3), (8) தேரிற் பல இடங்களிலுங் காட்சிதருஞ் சிற்பங்களுட் சில.
(2) ஸ்தபதியாரவர்கள் சிற்பங்களின் நுட்ப வேலைகளைக் கவனிக்கின்றார்.
(4), (5), (6) சிற்ப வேலைகள் நடைபெறுங் காட்சி. (7) புதுத் தேரின் மாதிரித் தோற்றம்.



நயினுதீவுச் சாமியாரென விளங்கும்
நயினே, ஸ்ரீ. முத்துக்குமாரசுவாமிகள்



நயினே ஸ்ரீ. முத்துக்குமாரசுவாமி அவர்களின் சமாதி



நயினுதீவுத் தீர்த்தக் கேணி



புளியந்தீவிலுள்ள சிவாலயம்




நயினை ஸ்ரீ நாகபூஷணி அம்பாள் தேர்த் திருப்பணி வேலை ஆரம்பம்



தவப்பெருந்திரு குன்றக்குடி அடிகளாரும் தேர்த் திருப்பணிச் சபை முக்கியஸ்தர்களும் தேர்வேலை நடைபெறுவதைப் பார்வையிட்டபொழுது எடுக்கப்பட்டது — 17–3–57



திரு. எஸ். குமாரசுவாமி ஸ்தபதியார் அவர்களின் அறுபதாவது வயதுப் பூர்த்தி விழா கொண்டாடப்பட்டபோது எடுக்கப்பட்ட படம்
நயினாதீவு -- 6-6-57



தேர் வேலைகள் செய்த ஸ்தபதியாருக்கும் அவரது சகாக்களுக்கும் வண்ணை - வைத்தீஸ்வர வித்தியாலயத்திற் பாராட்டு வைபவம் நடைபெற்றபொழுது திரு. ம. ஸ்ரீகாந்தா அவர்கள் தலைமையுரை நிகழ்த்துகிறார்கள்.

திரு. ம. ஸ்ரீகாந்தா அவர்கள், திரு. சி. குமாரசுவாமி அவர்களுக்கு தேர்த் திருப்பணிச் சபை மலர் முதற் பிரதியை விற்குங் காட்சி.

தேர்த் திருப்பணிச் சபை மலர் ஒன்றினைத் திரு. ம. ஸ்ரீகாந்தா அவர்கள்
வித்துவசிரோமணி பிரம்மஸ்ரீ சி. கணேசையர் அவர்களுக்குக் கொடுத்தபோது எடுக்கப்பட்டது.



வண்ணை — வைத்தீஸ்வர வித்தியாலயத்திற் பாராட்டு வைபவம் நடந்தபொழுது
தேர் வேலைகள் செய்த சிற்பிகளுள் ஒருவராகிய திரு. K. சிதம்பர ஆச்சாரிக்கு,
திருமதி காராளசிங்கம் அவர்கள் நற்சாட்சிப் பத்திரம் வழங்குகிறார்கள்.



இந்தியாவிலிருந்து வந்து தேர் வேலை செய்த சிற்பிகள்

இடமிருந்து வலம் :

(1) S. தியாகராஜ ஆசாரி. (2) K. சிதம்பர ஆசாரி. (3) P. முனுசாமி ஆசாரி. (4) V. வேலாயுத ஆசாரி. (5) S. V. சங்கராச்சாரி, (6) எஸ். குமாரசுவாமி ஸ்தபதியார். (7) M. தனகோடி ஆசாரி. (8) A. நரசிம்ம ஆசாரி. (9) S. இரத்தினம் ஆசாரி. (10) D. தங்கவேலு ஆசாரி. (11) எஸ். ஏகாம்பர ஆசாரி.

ஸ்தபதியார் அவர்களின் அறுபதாம் ஆண்டுப் பூர்த்தி விழாவின்போது எடுக்கப்பட்ட படம்.

[illegible], 6-6-57



இடமிருந்து வலம் ;

(1) A. கணபதி. (2) M. வேலாயுதம். (3) V. ஐயாத்துரை. (4) V. வைத்திலிங்கம். (5) V. சின்னத்தம்பி. (6) V. கனகரத்தினம். (7) S. குமாரசுவாமி ஸ்தபதியார். (8) S. நாகரத்தினம். (9) V. கார்த்திகேசு. (10) S. வேலுப்பிள்ளை, (11) N. சரவணமுத்து. (12) P. ஆறுமுகம். (13) N. சின்னையா.

தேர் வேலை செய்த யாழ்ப்பாணச் சிற்பிகளில் ஒரு பகுதியினர். ஸ்தபதியார் அவர்களின் 60 ஆண்டுப் பூர்த்தி விழாவின்போது எடுக்கப்பட்ட படம்.

ஈழநாடு, 6-6-57